# புத்தம்புதியது போன்ற தோற்றம்!

## டாடாவின் 501 ஸ்பெஷல்

## சோப்பினால் சுத்தம் செய்யப்பட்டது




உங்கள் சாருக்கான புடவைகளை புத்தம்புதியவை போல்வைக்க, அவைகளுக்குப் பிரத்தியேகமான சோப்பு அளிப்பது அவசியம். அவைகளை டாடா வின் 501 ஸ்பெஷல் சோப்பைக் கொண்டே சுத்தம் செய்யுங்கள். அது பரிசுத்தமானதும், மிருதுவானதும், சிக்கனம் அளிக்கக்கூடியதுமான ஒரு சோப்பாகும்.

நூற்றுக்கு நூறு இந்திய

- மூலதனம்
- நிர்வாகம்
- உழைப்பு

மலர் 16 இதழ் 30

# கல்கி

துன்முகி ௵ மாசி 13

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.





மலர் 16 இதழ் 30

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகி ௵ மாசி மீ 13உ

# யாருக்கு வோட்டு?

எப்படி 'வோட்டு' போடவேண்டும் என்று தினசரிப் பத்திரிகைகள் யோசனை சொல்ல ஆரம்பித்திருக்கின்றன. தினசரிப் பத்திரிகைகளாயினும் சரி, வாரப் பத்திரிகைகளாயினும் சரி, அவர்கள் வாக்கை தெய்வ வாக்கென்று வைத்துக் கொள்ள வேண்டியதில்லை. பத்திரிகைகள் நடத்துபவர்கள் பல ரகத்தவர்கள். அவர்களுடைய யோக க்ஷேமச் சிக்கல்களும் குண நலன்களும் பல விதம். அவர்கள் எழுதுவது அவற்றைப் பொறுத்திருக்கும். இந்த விஷயங்களையும் கால நிலைமையையும் யோசித்துத் தங்கள் கடமையை வாக்காளர்கள் செய்ய வேண்டும்.

இவருக்கு வோட்டுப் போடுங்கள்; அவருக்குப் போட வேண்டாம் என்று நாம் சொல்வதற்கில்லை. அப்படிச் சொல்லவும் இப்போது முன் வரவில்லை.

மக்களின் உரிமைகளைச் சட்டசபை அங்கத்தினர்களின் கையில் ஐந்தாண்டுகளுக்கு ஒப்புவித்து விடுவது இந்தத் தேர்தலின் நோக்கம். ஆனபடியால் அயோக்கியர்களுக்கு வோட்டுப் போடலாகாது.

கட்சியைத்தான் முக்கியமாகக் கருத வேண்டும் என்று சிலர் சொல்லுகிறார்கள். ஆனால் கட்சியில் தாங்கள் பெற்ற செல்வாக்கைக் கொண்டு அநீதியும் அக்கிரமமும் செய்தவர்களைக் காங்கிரஸ் மேலிடத்தார் அடக்கியாளவில்லை. ஆளவும் முடியாது. உள்ளூர்த் தலைவர்கள் செய்து முடித்ததுதான் தீர்ந்த முடிவு என்று தூரத்திலிருக்கும் பெருந் தலைவர்களும் கையை விரித்து விட்டிருக்கிறார்கள்.

ஆகவே கட்சியை நம்பும் காலம் தீர்ந்து போய்விட்டது. காந்தி மகான் இருந்தபோது இருந்த நிலை இப்போது இல்லை.

முக்கியமாக நம்முடைய மாகாணத்தில் காங்கிரஸ் ஆட்சி நடத்தி வந்தவர்களைப் பற்றி யோசிக்க வேண்டும். அவர்களுக்குப் பக்கபலமாக இருந்து அவர்கள் அதிகாரங்களை நீடிக்கச் செய்தவர்களைப் பற்றியும் நன்றாக ஆலோசிக்க வேண்டும். "இப்படி அக்கிரம ஆதிக்கத்துக்கு உதவிய இவர்களை நம்பலாமா?" என்பது மக்களின் கேள்வி.

காங்கிரஸ்'காரர்'களில் பலவகை: "மாட்டுக்காரன்" என்றால் பசுவுக்குப் புல் போடுகிறவனும் உண்டு. கன்று போட்டபின் பால் கறந்து கொண்டு போகிறவனும் உண்டு. பாலை விற்றுப் பிழைக்கிறவனும் உண்டு. 'கிழடு தட்டிப்போச்சு' என்று பசுவைக் கசாப்புக் கடைக்காரனுக்குக் கொடுக்கும் யோசனையுள்ள மாட்டுக்காரர்களும் உண்டு. கசாப்புக்காரனை அழைத்து வந்து மாட்டைப் பார்க்கச் சொல்லுபவர்களும் உண்டு. அதிகம் எழுத வேண்டியதில்லை. இம்மாதம் 18உ 'மதராஸ் மெயில்' பத்திரிகையில் திரு ஈ. வே. ரா. அவர்களின் பேச்சு மிகத் தெளிவாகப் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. காஞ்சிபுரத்தில் ஸ்திர வாரத்தில் திரு ஈ. வே. ரா. பேசியிருக்கிறார். "நான் 1923-ம் ஆண்டில் காங்கிரஸை விட்டுப் பிரிந்தேன். இந்த ஊரில் நடந்த மகாநாட்டில் ஜாதிப் பிரச்னையைக் கொண்டு விலகினேன். முப்பத்திரண்டு ஆண்டுகள் கழித்து இதே ஊரில் இப்போது திரு காமராஜை ஆதரிக்க வந்திருக்கிறேன். ஏனென்றால் நான் 1923-ம் ஆண்டில் எந்த ஜாதிப் பிரச்னையை வைத்து விலகினேனோ அந்தக் குறையைக் காமராஜ் அவர்கள் தீர்த்துவிட்டார். அதனால் அவரை ஆதரிக்

கிறேன். இந்தப் பைத்தியக்கார திராவிட முன்னேற்றக் கழகத்தார் ஏன் அவரை எதிர்க்கிறார்களோ எனக்கு விளங்கவில்லை."

திரு ஈ. வே. ரா. அவர்கள் காரியவாதி. திராவிட முன்னேற்றக் கழகத்தார்களைப் போல் விஷயம் தெரியாத மனிதர் அல்ல. திரு காமராஜ் அவர்களின் திட்டங்களையும் போக்கையும் நன்றாக ஆராய்ந்து பார்த்துத்தான் ஆதரிக்கிறார். இந்த ரகசியத்தை காங்கிரஸ் மேலிடத்தார் இன்னும் நன்றாக உணரவில்லை. அல்லது தெரிந்தும் நடப்பது நடக்கட்டும் என்று இருக்கிறார்கள்.

சென்னை அமிஞ்சிக் கரையில் பிப்ரவரி 12-ம் தேதி திரு ஈ. வே. ரா. பின் வருமாறு பேசியிருக்கிறார். "நான் எதற்கெல்லாம் போராடினேனோ, எதையெல்லாம் செய்யச் சொன்னேனோ அதையெல்லாம் காமராஜர் செய்து முடித்திருக்கிறார். இந்தக் காமராஜர் ஆட்சி நீடித்தால்தான் இன்னும் பாக்கியுள்ள என் திட்டங்கள் எல்லாம் நிறைவேறும்."

திரு ஈ. வே. ரா. அவர்கள் கொள்கையும் பிடிவாதமும் எப்படியிருப்பினும் ஒரு விஷயத்தில் அவரைப் பாராட்ட வேண்டும். உள்ளது உள்ளபடி சொல்லும் பேர்வழி அவர்.

அந்தக் கூட்டத்தில் திரு ஈ. வே. ரா. தம்முடைய கழகத் தோழர்களை இறைஞ்சிக் கேட்டுக் கொண்டார்.

"என் கோரிக்கைகளை ஆதரிக்கும் காமராஜை ஏன் ஆதரிக்கக் கூடாது? இதில் நாம் ஜெயித்தால் பிழைத்தோம். தோற்றால் தொலைந்தோம்" என்றார்.

திரு ஈ. வே. ரா. வின் இந்த ஆதரவுக்கு திரு காமராஜ், ஒரு சமாதானம் சொல்ல முயன்றார். "நான் பள்ளிக்கூடங்களைத் திறந்தேன். பள்ளிக்கூடங்களில் சிறுவர்களுக்கு மத்தியானச் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்தேன். அதனால் ஈ. வே. ரா. எனக்கு ஆதரவளிக்கிறார்" என்று சமாதானம் கூறியிருக்கிறார். இதை யாரும் நம்ப மாட்டார்கள்.

ஆனால் திரு ஈ. வே. ரா ஆதரவளிப்பது இந்தக் காரியத்துக்காக அல்ல. காங்கிரஸைக் குழிதோண்டிப் புதைக்க திரு ஈ. வே. ரா. போட்டிருக்கும் எத்தனையோ திட்டங்களுக்காகக் காமராஜுக்கு ஆதரவு தருகிறார் என்பது ஈ. வே. ரா. பிரசங்கங்களைப் படிப்பவர்கள் அறிவார்கள். திரு காமராஜ் கூறி வரும் நொண்டிச் சமாதானங்களைக் கேட்டு மக்கள் ஏமாந்து போகமாட்டார்கள்; திரு ஈ. வே. ரா.வை நன்றாக அறிவார்கள்.

• • • •

இத்தனை நாட்கள் திரு ஈ. வே. ரா.வின் ஆதரவைப் பற்றிப் பேசாமலிருந்த திரு காமராஜ் இப்போது திடீர் என்று பேசுவதற்குக் காரணம் என்ன? திரு ஈ. வே. ரா.வின் ஆதரவினால் பொது மக்களிடையே தம்பேரில் ஏற்பட்டுள்ள அருவருப்பை நீக்கிக் கொள்வதற்குத்தான் திரு காமராஜ் இவ்வாறெல்லாம் பேசுகிறார். தவிர, மேலிடத்திலிருந்து திராவிடக் கழகத்துக்கும் தமக்கும் சம்பந்தமில்லை என்று உலகறியப் பேசும்படி 'யோசனை' வந்திருக்கலாம். இந்த இரண்டு காரணங்களால்தான் திரு காமராஜர் மென்று விழுங்கிப் பேசுகிறார். இப்பொழுது திரு ஈ. வே. ரா.வை என்ன கண்டித்தாற்போல் பேசினாலும் காங்கிரஸுக்குள் புகுந்துவிட்ட கறுப்புச் சட்டைகளுக்கு வெள்ளை அடிக்க முடியாது!

ஆகவே, தமிழ்ப் பெருமக்கள் பகுத்தறிந்து வோட்டுப் போடத் தெரிந்தவர்கள் என்பதை உலகத்துக்கு எடுத்துக் காட்டும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்!

கடைசியாக ஒரு வார்த்தை: நம்முடைய நாட்டின் பண்பாட்டையும் தர்மத்தையும் மதியாத அரசியல்வாதிகளை நாம் ஆதரிக்கலாகாது. தருமத்தை மதியாதாருக்கும் பாபத்துக்கு அஞ்சாதவர்களுக்கும் அதிகாரம் தரலாகாது. தற்கால ஆட்சியில் சட்டசபை அங்கத்தினர்களுக்கு அதிகாரம் வரம்பு மீறிய அளவில் இருக்கிறது. இந்தத் தேர்தலுக்கென்று எவ்வளவு பணம் சேர்த்திருக்கிறார்கள், பாருங்கள். கொடுத்தவர்கள் எத்தகையவர்கள்? அவர்கள் சந்தோஷமாகவா கொடுத்திருப்பார்கள்? பயந்துதான் கொடுத்திருக்கிறார்கள். அதிலிருந்து தெரிந்து கொள்ளலாம், அதிகாரத்தின் அளவை. பதவியை வைத்துக்கொண்டே தேர்தலுக்கு நிற்பதினால் தம்முடைய செல்வாக்கு அபேட்சகர்களுக்கு அக்கிரமமாகப் பயன்பட்டு விடுகிறது.

பதவிக்கு வந்து விட்டபின், அக்கிரமங்களைத் தடுக்கக்கூடியது அவரவர்களின் மனச்சாட்சி ஒன்றே. மேலிருந்து அடக்குவார் இல்லை. நம்முடைய க்ஷேமத்துக்கும் உரிமைகளுக்கும் நாமே அபாயம் தருவித்துக் கொள்ளலாகாது.

# வேஷத்தைக் கலைத்த அமெரிக்கப் பிரமுகர்!

ஐக்கிய நாடுகள் சபையை, மேற்கு வல்லரசுகள் ஐக்கிய அநீதிச் சபையாக மாற்றி வரும் அலங்கோலத்தைக் காண்கிறோம். அமைதியை நிலைநிறுத்துவதற்காக ஏற்பட்ட அச் சபையை அமைதியைக் குலைக்கும் அரசியல் அரங்கமாக பிரிட்டனும் அமெரிக்காவும் மாற்ற முயற்சித்து வருகின்றன. ஆம்! பிரிட்டன், அமெரிக்கா, ஆஸ்திரேலியா, க்யூபா இந்த நாலு நாடுகளும் ஐ.நா. பந்தோபஸ்து சபையில் கொண்டு வந்துள்ள தீர்மானம் நிறைவேறி அமுலுக்கு வருமாயின், காஷ்மீரில் பாரதநாடு சென்ற பல ஆண்டுகளாகக் கஷ்டப்பட்டு உருவாக்கிய அமைதியும் ஆக்க வேலைகளும் சீர்கெட்டுவிடும்.

ஸ்வீடன் பிரதிநிதியான ஸ்ரீ ஜாரிங் என்ற பிரமுகர் தற்போது ஐ. நா. பந்தோபஸ்துச் சபையின் தலைவராக இருக்கிறார்.

''அவர் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் சென்று இரண்டு தேச சர்க்கார்களுடனும் சமரசப் பேச்சு நடத்த வேண்டும். ஐக்கிய நாடுகளின் படைகளுக்கு இடம் கொடுப்பதற்காக, அவ்விரு நாடுகளும் காஷ்மீரில் உள்ள தங்கள் துருப்புகளை வாபஸ் செய்து கொள்ள வேண்டும். காஷ்மீரின் எதிர்காலத்தைப் பொதுஜன வாக்கு எடுப்பு மூலம்தான் முடிவு செய்ய வேண்டும். ஸ்ரீ ஜாரிங் அடுத்த ஏப்ரல் மாதம் 15-ம் தேதிக்கு மேற்படாமல் தமது அறிக்கையை ஐ. நா. சபையில் சமர்ப்பித்து விடவேண்டும்'' என்பதுதான் வல்லரசுகளுடைய தீர்மானம் ஆகும்.

ஆனால், ஐ. நா. சபையில் உள்ள எல்லோரும் மனச்சாட்சியை விற்று விடவில்லை என்பது சென்ற வாரம் நிகழ்ந்த ஒரு சம்பவத்திலிருந்து வெளியாயிற்று. உலக நாடுகளிடையே மிகுந்த செல்வாக்குடன் விளங்கும் இந்தியா மீது பொறாமை கொண்ட மற்ற நாடுகள், இந்தியாவை ஏகோபித்த கண்டனத்துக்கும் சங்கடமான நிலைமைக்கும் உள்ளாகும்படி செய்து விட்டோம் என்று இறுமாந்திருந்த சமயத்தில், தென் அமெரிக்காவைச் சேர்ந்த கொலம்பியா பிரதிநிதி டாக்டர் உருதியா ஒரு வெடிகுண்டைத் தூக்கிப் போட்டார். பாகிஸ்தானின் பொய்க் கூற்றுகளுக்கு ஒத்துப் பாடும் வல்லரசுகளின் பொய் வேஷத்தைக் கலைத்து அவர்களுடைய அக்கிரமத்தையும் அநீதியையும் அம்பலப்படுத்தி விட்டார்.

1948-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் காஷ்மீர் சம்பந்தமாக ஐ. நா. சபையில் நிறைவேறிய தீர்மானத்தைச் சுட்டிக் காட்டினார். அந்தத் தீர்மானத்தின் முற்பகுதியை பாகிஸ்தான் நிறைவேற்றவில்லை யென்றும், எனவே, பொதுஜன வாக்கு எடுப்பு விஷயத்தில் இந்தியா மேற்படி சபையின் கட்டளைப்படி நடக்கவில்லை என்று கூறுவது அர்த்தமற்ற பேச்சு என்றும் அழுத்தந் திருத்தமாகக் கண்டித்தார்.

காஷ்மீர் பிரச்னையைத் தீர்க்க இச்சந்தர்ப்பத்தில் பொதுஜனவாக்கு எடுக்க முற்படுவது எவ்வளவு விபரீதமாக முடியும் என்பதை

## காங்கிரஸ் கூட்டில்!




காக்கையின் கூட்டில் குயில் தன் முட்டைகளை இட்டுவிட்டு, காக்கையைக் குஞ்சு பொரிக்கச் செய்யும் என்பது உலகறிந்த உண்மை.

ஐ. நா. பந்தோபஸ்து சபையில் உள்ள ருஷ்யப் பிரதிநிதியும் தெளிவாக விளக்கி யிருக்கிறார். காஷ்மீர் பிரச்னையைக் காஷ்மீர் மக்களே திருப்திகரமாக முடிவு செய்து விட்டார்கள் என்பதையும் ருஷ்யப் பிரதிநிதி விளக்கி யிருக்கிறார்.

ஐ. நா. சபையில் இந்தியாவின் கட்சியைத் தெளிவாகவும் விரிவாகவும் எடுத்துக் கூறிய இந்தியப் பிரதிநிதி ஸ்ரீ கிருஷ்ணமேனனை இந்திய மக்களும் உலக சமாதானத்தில் ஆர்வம் கொண்ட உலக மக்களும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறார்கள். பம்பாய்த் தொகுதியில் மக்கள் சபைக்கு அபேட்சகராக நிற்கும் ஸ்ரீ கிருஷ்ணமேனனை பம்பாய் வாக்காளர்கள் ஏகமனதாக ஆதரிப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. காஷ்மீர் பிரச்னை விஷயமாக இந்தியாவில் உள்ள பல்வேறு கட்சிகளுக்கும் எள்ளளவு கருத்து வேற்றுமையும் இல்லை. ஆகையால் எல்லோரும் ஸ்ரீ கிருஷ்ணமேனனை ஆதரித்து வாக்களிப்பார்கள் என்று நம்புகிறோம். அவ்விதம் செய்து மக்கள் சபைக்கு அவரைத் தேர்ந்தெடுப்பதுதான் நாம் வஞ்சபுத்தி படைத்த வல்லரசுகளுக்கு அளிக்கும் சரியான பதிலாக இருக்கும்.

காஷ்மீர் பிரச்னை சம்பந்தமாக இந்தியாவின் கொள்கையைக் கண்டித்த "பீஸ் நியூஸ்" என்ற பிரிட்டிஷ் பத்திரிகைக்கு ராஜாஜி அளித்துள்ள பதில் இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

"நாம் எல்லோரும் விரும்புவது சமாதானமே. ஆனால், இப்போது காஷ்மீரில் பொதுஜன வாக்கு எடுப்பதன் விளைவாக, பல நூற்றாண்டுகளாக அமைதியாக வாழும் மக்களிடையே மதவெறிக்கும் துவேஷப் பிரசாரத்துக்கும் இடமேற்பட்டு விடும். மற்றும் அதனால் இந்தியாவில் சர்க்காரே மாறும்படி நேரும் என்பது நிச்சயம். தவிர, என்னவெல்லாம் நேருமோ கடவுளுக்குத்தான் தெரியும். இப்போது காஷ்மீரில் பொதுஜன வாக்கு எடுப்பதை, அமைதியை விரும்பும் எவரும் ஆதரிக்க மாட்டார்கள். அவ்விதம் செய்வதால் ஆசியாவின் அமைதிக்கு மாத்திரமல்ல, உலகத்தின் அமைதிக்கே ஆபத்தாக முடியும்."

ராஜாஜி விடுத்துள்ள இந்த எச்சரிக்கை ஐ. நா. சபையின் செல்வாக்கையும் மதிப்பையும் சீர்குலைக்க முற்பட்டுள்ள வல்லரசுகளின் செவிகளில் விழுமா?

<u>அட்டைப்பட விளக்கம்</u>

# அழகுக் கலை

அழகுக் கலையில் நம் நாட்டுப் பெண்களுக்குப் பண்டை நெடுங்கால முதல் அளவுகடந்த ஆசை. பழங்காலத்துச் சிற்பங்களையும் சித்திரங்களையும் பார்க்கும்போது நம் மெய் சிலிர்த்து விடுகிறது! கூந்தலை முடிப்பதில் தான் எத்தனை வகைகள்! அஜந்தா சித்திரங்களும் தமிழகத்துச் சிற்பங்களும் பாரத நாட்டுப் பெண்களின் அழகுணர்ச்சி எவ்வளவு உன்னத நிலையிலிருந்தன என்பதை விளக்கிக் காட்டுகின்றன.

அஜந்தா சித்திரக் கலையை நினைவூட்டும் வண்ண ஓவியம் இவ்விதழ் அட்டையை அலங்கரிக்கிறது. தலைவியாக விளங்கும் பெண் தனது முகத்தின் பொலிவைத் தானே கண்டு மயங்கியவாறு நடந்து செல்லும் காட்சியைப் பார்க்கும்போது நமக்குக் கலிங்கத்துப் பரணி ஆசிரியர் பாடியுள்ள அருமையான பாடல் ஒன்று நினைவுக்கு வருகிறது!

கருண்ட கூந்தல் அசைய, மயில் போன்ற மங்கையர் பாதச் சிலம்பு கலீர் கலீர் என்று ஒலிக்க நடந்து வரும் காட்சியைக் கவிதைச் சித்திரமாகத் தீட்டி யிருக்கிறார் பெரும்புலவர் ஜெயங்கொண்டார்.

கரிகுழல் அசைவுற அசைவுறத்
துயிலெழு மயிலென மயிலென
பரிபுர ஒலியெழ ஒலியெழப்
பணிமொழி யவர்கடை திறமினோ?

[கரிகுழல் — கருண்ட கூந்தல்; பரிபுரம்— சிலம்பொலிகள்; பணிமொழி — குளிர்ந்த பேச்சுடைய பெண்கள்]

தமிழ்க் கவிஞர் ஜெயங்கொண்டாரின் சொற்சித்திரத்தை இவ்விதழ் அட்டைச் சித்திரமாக ஓவியர் கனுதேசாய் வழங்கி யிருக்கிறார்.

## அடுத்த 'கல்கி' இதழ்

மார்ச்சு மாதம் முதல் தேதி தேர்தல் ஆரம்பமாகிறதல்லவா? இதை முன்னிட்டு அடுத்த 3–3–57 'கல்கி' இதழ் பிப்ரவரி 28-ந் தேதி வியாழக்கிழமை அன்றே தமிழ் நாடெங்கிலும் உள்ள நமது நேயர்களுக்குக் கிடைக்கும்.

ராஜாஜி அவர்கள் எழுதும்

**தாசி மருதாயி**

என்னும் சிறுகதையும் இதே இதழில் வெளியாகிறது



# வம்புச் சாவடி

எஸ்.வி.எஸ்.

ஊர் எல்லாம் ஒரே தேர்தல் பேச்சாக இருக்கிறது. தேர்தலில் போட்டியிடும் அபேட்சகர்கள் வோட்டுச் சேகரிக்கும் பணியில் தீவிரமாக இறங்கி விட்டனர். வீட்டுக்கு வீடு, குடிசைக்குக் குடிசை அபேட்சகர்களும், அபேட்சகர்களுக்காகப் பரிந்து பேசும் ஏஜெண்டுகளும் சென்று வாக்காளர்களைப் போற்றிப் புகழ்ந்து தங்களுக்கே வோட்டுப் போடும்படியும் தங்கள் அபேட்சகர்களுக்கே வோட்டுப் போடும்படியும் கேட்டு வருகின்றனர். ஒரு கட்சியின் சார்பில் நிற்கும் சட்டசபைத் தொகுதி அபேட்சகர்களும் பார்லிமெண்ட் தொகுதி அபேட்சகர்களும் கூட்டாகச் சேர்ந்து தங்கள் கட்சிக்கு வோட்டுச் சேகரிக்க வேண்டும். இதுதான் முறை.

சமீபத்தில் ஒரு செய்தி காதில் விழுந்தது. காங்கிரஸ் கட்சியின் சார்பில் சென்னை நகரில் சட்டசபைத் தொகுதிக்கு நிற்கும் ஒரு அபேட்சகர் வாக்காளர் வீட்டைத் தேடிச் சென்று, "ஐயா! நான் ராஜ்ய சட்டசபைக்கு நிற்கிறேன். தங்கள் வோட்டை எனக்குப் போடுங்கள். பார்லிமெண்ட் வோட்டை எந்த அங்கத்தினருக்குப் போட்டாலும் பரவாயில்லை. காங்கிரஸ் அபேட்சகருக்கே போடுங்கள் என்று நான் சொல்லவில்லை" என்கிறாராம். எப்படியிருக்கிறது பார்த்தீர்களா, கதை?

*　　　*　　　*

காரைக்குடித் தொகுதியிலிருந்து நமக்கு மற்றொரு ரஸமான செய்தி கிடைத்திருக்கிறது. காரைக்குடித் தொகுதியில் காங்கிரஸ் அபேட்சகரை எதிர்த்துத் தேசபக்தர் திரு சா. கணேசன் நிற்கிறார் அல்லவா? அவருடைய செல்வாக்கையும், அவரிடம் பொதுமக்கள் வைத்துள்ள நம்பிக்கையையும் பார்த்து அவரை எதிர்த்து நிற்பவர் இப்பொழுது புது விதமான தந்திரத்தில் இறங்கியிருக்கிறாராம்.

திரு கணேசனை எதிர்த்து நிற்கும் அபேட்சகரின் ஆட்கள் காரில் ஒரு கிராமத்துக்குப் போகிறார்களாம். அந்தக் கிராமவாசிகள் "எங்களுக்குத் தேசபக்தர் திரு சா. கணேசன்தானுங்க தெரியும். அவர்தான் பல முறை ஜெயிலுக்குப் போனவர். உண்மையான காங்கிரஸ்காரர். அவருக்குத்தானுங்க எங்கள் வோட்டு!" என்று சொல்லுகிறார்களாம்.

"நாங்களும் சா. கணேசன் ஆட்கள்தான். சா. கணேசன்தான் உண்மையான காங்கிரஸ்காரர். காங்கிரஸ் பெட்டியாகிய மாட்டுப் பெட்டியிலேயே உங்கள் வோட்டைப் போடுங்கள்!" என்று சொல்லி அவர்களைக் குழப்பி விட்டுப் போகிறார்களாம்!

உண்மை காங்கிரஸ்காரரான திரு சா. கணேசன் காரைக்குடியில் சுயேச்சை அபேட்சகராக நிற்கிறார். அவருடைய வோட்டுப் பெட்டியின் சின்னம் சிங்கம் என்பதைக் காரைக்குடி மக்கள் மறந்தா போய் விடுவார்கள்!

போலி காங்கிரஸ்காரர், உண்மை தேசபக்தரின் புகழிலே தம் காரியத்தை எப்படிச் சாதித்துக் கொள்கிறார் பார்த்தீர்களா! சுயநலக் கும்பல், ஒரு மனிதரின் தியாகத்தைத் தங்கள் நலன்களுக்கு உபயோகித்துக் கொள்ளும் பகல் கொள்ளையில் இறங்கி இருக்கும் காட்சியைப் பார்த்தீர்களா?

*　　　*　　　*

திரு காஸா சுப்பாராவ் அவர்களை ஆசிரியராகக் கொண்ட 'ஸ்வராஜ்யா' என்ற ஆங்கிலப் பத்திரிகையில் சில நாட்களுக்கு முன்பு "யாருக்கு வோட்டுப் போடுவது?" என்ற தலைப்பில், ராஜாஜி அவர்கள் ஒரு கட்டுரை எழுதி யிருந்தார். அதில் நல்லவர்களுக்கே வோட்டுப் போட வேண்டும் என்று வற்புறுத்தி யிருந்தார். அந்தக் கட்டுரையைப் படித்த அன்பர்கள் சிலர் அப் பத்திரிகையின் ஆசிரியருக்கு "ராஜாஜிக்கு ஜனநாயக ஆட்சி முறை வேண்டாம் என்று தோன்றி விட்டதா?" என்று எழுதி யிருந்தார்கள். இதற்கு ராஜாஜியே பதில் அளித்திருக்கிறார். "இந்த அன்பர்களுக்கு என்ன நல்லவர்களே வேண்டாம் என்று தோன்றி விட்டதா? நான் சொல்லுகிறபடி நல்லவர்களை வாக்காளர்கள் தேர்ந்தெடுப்பதனால் காங்கிரஸ் பலவீனப்பட்டுவிடும் என்றால் காங்கிரஸைச் சீர்திருத்த வேண்டிய வேலையில் அல்லவா காங்கிரஸ் தலைவர்கள் உடனடியாக ஈடுபட வேண்டும்!"

இன்று காங்கிரஸில் நல்லவர்களே இல்லாமல் போய் விட்டால் மக்கள் காங்கிரஸ் தலைவர்களைத்தானே குற்றம் சாட்டுவார்கள்?

## தேர்தல் விஷயம்

தேர்தலைப் பற்றி என்னுடைய ஒரு விண்ணப்பம்: நான் தனிப்பட்ட ஒருவரை ஆதரிப்பதாக எந்த ஊரில் எந்தப் பிரசாரம் செய்யப்பட்டாலும் அதை நம்பவேண்டாம்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி.

நேற்றுவரை காங்கிரஸைத் தூற்றிக் கொண்டிருந்த திருத்தணி விநாயகத்துக்குக் காங்கிரஸ் முத்திரையிட்டுச் சென்னையில் அபேட்சகராகக் காங்கிரஸ் தலைமைப் பீடம் நிறுத்தி வைத்திருக்கிறது. இந்தக் 'காங்கிரஸ்காரர்' தமது தொகுதியில் கூட்டம் போட்டுப் பேசினார். அவர் என்ன சொன்னார் தெரியுமா?

"நேற்றுவரை எதிர்க்கட்சியிலிருந்த நான் இன்று காங்கிரஸ் டிக்கெட் பெற்றுக் காங்கிரஸ் அபேட்சகனாக ஏன் நிற்கிறேன் தெரியுமா? எதிர்க்கட்சியிலிருந்து நான் வாதாடி வந்த காரியங்களை, கொள்கைகளை நிறைவேற்ற முடியவில்லை. இப்பொழுது காங்கிரஸுக்குள் புகுந்து என் திட்டங்களை நிறைவேற்றப் போகிறேன். அதற்காகத்தான் காங்கிரஸில் சேர்ந்தேன்" என்கிறார்.

காங்கிரஸில் சந்தர்ப்பவாதிகள் புகுந்து கொண்டு, 'காங்கிரஸின் லட்சியங்களைத் தகர்த்தெறிந்து விட்டு, 'என் காரியங்களைச் சாதித்துக் கொள்வேன்' என்று துணிச்சலாகப் பேசுகிறார்கள். இதிலிருந்து காங்கிரஸ் எவ்வளவு பலவீனமடைந்து விட்டது என்பது தெரிகிறதல்லவா?

* * *

தேர்தல் அபேட்சகர்கள் தங்கள் கட்சியின் கொள்கைகளை எடுத்துச் சொல்லி வோட்டுக் கேட்பார்கள். மக்கள் சபைக்கோ ராஜ்ய சட்டசபைகளுக்கோ நிற்பவர்கள் "நீங்கள் என்னைத் தேர்ந்தெடுத்தால் நான் மந்திரியாக வந்து அதைச் செய்வேன் இதைச் செய்வேன்" என்று சொல்ல முடியாது. ஆனால் இன்று மந்திரியாக இருக்கும் காங்கிரஸ் அபேட்சகர்கள் தங்கள் கட்சியை மறந்து மீண்டும் அந்தப் பதவிக்குத் தம்மைத் தேர்ந்தெடுத்து அனுப்புங்கள் என்று கேட்கிறார்கள். இது எவ்வளவு விந்தையாக இருக்கிறது.

இன்று மந்திரியாக இருப்பவர்கள் தேர்தலில் வெற்றியடைந்தால் மீண்டும் மந்திரியாவார்கள் என்பது நிச்சயமில்லை. அப்படியொரு கட்டுப்பாடு காங்கிரஸ் கட்சி விதிகளிலோ, சட்டசபை, மக்கள் சபை விதிகளிலோ இல்லை.

எனினும் இப்படிப் பேசுகிறார்கள் என்றால் பதவிப் பித்து அவர்கள் மனத்தில் மேலோங்கியிருக்கிறது என்பதுதானே காரணம்?

இலங்கையில் வாழும் லட்சக்கணக்கான இந்தியர்களுக்குப் பிரஜாவுரிமை மறுக்கப்பட்டு வருகிறது. இதனால் பல்லாயிரக்கணக்கான தமிழர்கள் பல அல்லல்களுக்கு உள்ளாகி வருகின்றனர். இந்தச் செய்திகளையெல்லாம் படித்து மனச் சோர்வடைந்து வரும்போது, ஒரு குழந்தை மூன்று நாடுகளின் பிரஜாவுரிமையைப் பெறக் கூடும் என்ற செய்தி வியப்புக் கடலில் ஆழ்த்தியது.

பிரிட்டனில் ஒரு தொழிற்கூடத்தில் வேலை செய்து கொண்டிருந்த ஒரு பெண்மணி பிரசவத்துக்காக இத்தாலிக்குப் போய்க் கொண்டிருந்தாள். இல்லை, ஆகாய விமானத்தில் பறந்து கொண்டிருந்தாள்! அப்போது ஆகாய விமானத்திலேயே குழந்தை பிறந்து விட்டது. பிரிட்டனிலிருந்து இத்தாலி வரையுள்ள மூன்று நாடுகளின் பிரஜாவுரிமையும் அந்தக் குழந்தை பெறக்கூடுமாம். இந்தப் பொருள் பெயரில் தொனிக்கும்படி அந்தக் குழந்தைக்கு 'பிரிக்கட்டி' என்று பெயர் வைத்திருக்கிறார்கள்.

இந்தக் குழந்தையின் அதிர்ஷ்டத்தைப் பற்றி வியந்து கொண்டிருக்கையில், அதன் தாயைப் பற்றிய செய்தி நம்மைத் திகைக்க வைக்கிறது. குழந்தையைப் பெற்று விட்டு, விமானத்தில் தனக்கு ஒன்றுமே நடக்காதது போல் தான்பாட்டுக்கு விமானத்தை விட்டு இறங்கி நடந்து போனாளாம். நம் ஊரிலே பிரசவம் என்றால் ஒரு பெரிய வியாதி மாதிரி பிரமாதப்படுத்தி விடுவார்களே!

* * *

மேல்நாட்டு விமான நிலையத்தில் நடந்த இச் சம்பவத்தைப் பற்றிப் பேசும்போது நம் நாட்டு விமான நிலையத்தில் நிகழ்ந்த சம்பவம் ஒன்று நினைவுக்கு வருகிறது. நமது அருமைத் தலைவர் நேருஜி பாட்னா விமான நிலையத்திலிருந்து புறப்படும்போது ஒரு ஏழு வயதுக் குழந்தை ஒரு மோட்டார் பொம்மையை நேருவுக்குப் பரிசாக அளித்ததாம். நேருஜி "பாப்பா! இந்தச் சின்ன வண்டிக்குள் நான் ஏறிச் சவாரி செய்ய முடியாது! நீயே வைத்துக் கொள்" என்றார்.

"அதெல்லாம் முடியாது. நீங்கள் எடுத்துக்கொண்டுதான் ஆக வேண்டும்" என்று குழந்தை பிடிவாதம் செய்திருக்கிறது.

குழந்தையைத் திருப்தி செய்ய நேருஜி கார் பொம்மையை எடுத்துக் கொண்டு அதன் கழுத்தில் மலர் மாலையை அணிவித்தாராம்!

## பிரார்த்தனைக் கூட்டம்

— கிண்டி ராஜபவனம் —

## காந்தி மண்டபத்தில்

பிப்ரவரி 22-ம் தேதி வெள்ளிக்கிழமை மாலை 5-30 மணிக்கு

வித்வான் ஸ்ரீநிவாசன் அவர்கள் துதி கீதங்கள் பாடுவார்கள்

நாதஸ்வர இன்னிசை - தக்கர்பாபா வித்தியாலய மாணவர்கள், - சாரதா வித்தியாலய மாணவிகளின் தூற்பு யக்ஞம், கீதை பாராயணம், ராமநாம பஜனை

பிரார்த்தனைக் கூட்டத்தில் ராஜாஜி அவர்கள் கலந்து கொள்ளுகிறார்கள்.

GIFT COUPON

5 LBS.

OK

6 POINTS

# பார்த்து வாங்குங்கள்.

இந்த மாதிரி

# இனாம் பரிசுக் கூப்பன்



நீங்கள் வாங்கும்




## ஓ.கே. வனஸ்பதி

டின்களில் உள்ளதா என்று
நன்கு கவனித்து வாங்குங்கள்

1 பவு., 2 பவு., 5 பவு., 10 பவு.,
லீவர்—லிட் டின்களில் கிடைக்கின்றன.

**உங்கள் அருகிலுள்ள 'ஓ.கே.' வியாபாரி
உங்களுக்கு உதவி செய்ய இருக்கிறார்**




குடும்பத்திலுள்ள பெண்கள் கவனிக்கவும்: இந்தப் பரிசுத் திட்டம் உங்கள் லாபத்திற்காகவே ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. உங்களுக்குத் தேவையான ஒரு பூரண ஸெட் பாத்திரங்களை நீங்கள் இனாமாகப்பெறும்வரை இது நீடிக்கும். டின்னில் கூப்பன் இருக்கிறதா எனக் கவனியுங்கள். இல்லையென்றால், "ஏன் இல்லை"? என்று கடைக்காரரிடம் விசாரியுங்கள்.

தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா)
பிரைவேட் லிமிடெட், மதராஸ் - 1

EP




மனிதன் ஓடுகிறான்.

'எங்கே ஓடினாலும் என்னிடமிருந்து தப்ப முடியாது' என்று இறைவன் தொடர்கிறான், ஒரு வேட்டை நாயைப்போல.

'வேட்டை நாயைப் போல' என்று சொன்னேன்? 'வேட்டை நாயாக' என்றுதான் கவிஞன் பிரான்சிஸ் தாம்ஸன் பேசுகிறான். மனிதனுடைய ஆத்மாவை மீட்பதற்கு, இடைவிடாமல் தொடர்ந்து வரும் கடவுளின் எல்லையற்ற ஆற்றலை, வேறு எப்படித்தான் குறிப்பிடுவது?

'என்ன இருந்தாலும் கடவுளை ஒரு வேட்டை நாயாகப் பேசலாமா?' என்று, மனித உலக மரியாதை வேலிக்குள்ளே முடங்கிக் கிடக்கும் மரியாதை வாதி கேட்கிறான். 'கடவுளைத் தலைவன் என்று சொல்லலாம், அரசன் என்று புகழலாம், நண்பன் என்று கூட உரிமை பாராட்டலாம், வேட்டை நாய் என்று பேசினால், அருவருப்பாக அல்லவா இருக்கிறது? நம்மோடு இங்கே வாழும் மனிதன் ஒருவனுக்குக் காட்டும் மரியாதையாவது கடவுளுக்கு நாம் காட்ட வேண்டாமா? கவிஞனுடைய கற்பனைதான் என்றாலும், அதற்கும் ஒரு வரம்பு வேண்டாமா? பொருளுக்கெல்லாம் பொருளாக நிற்கும் பரம்பொருளை நாய் என்று பேசுவது?' இப்படியாகக் கேட்கத் தோன்றுகிறது, இல்லையா?

வரம்பற்ற பொருளாகிய பரம்பொருளைப் பற்றி இப்படித்தான் பேச வேண்டும் என்று வரம்பு கட்ட முடியுமா? என்ன பேசுகிறோம் என்பது இல்லை, எந்த மனநிலையோடு, எந்த நோக்கோடு பேசுகிறோம் என்பதுதான் நாம் கருத வேண்டுவது.

மாகடம்பில் நீர்வாரா மானமிலாப்
பன்றியாய்

என்று இறைவனை 'மானமில்லாப் பன்றி'யாக ஆண்டாள் ஏசவில்லையா? ஆனால் அது ஏச்சாகுமா? ஆகாது. அது போலத்தான், விடாமல் தன்னைத் தொடர்ந்து வந்து, தன்னைப் பிடிக்க முயலும் இறைவனை, வேட்டை நாய் என்று பிரான்சிஸ் தாம்ஸன் உருவகப்படுத்துவதும் தவறாகாது. இங்கே நம்மைச் சுற்றி உள்ள பொருள்களைக் கொண்டுதானே பொருள்கள் யாவையும் கடந்து நிற்கும் ஒன்றைக் குறிக்க வேண்டி இருக்கிறது? அதோடு, வேட்டை நாய் என்று பேசுவதில், வேறொரு குறிப்பும் தோன்றுகிறது. வேட்டை நாயைக் கண்டு ஓடுகின்ற விலங்கின் நெஞ்சில், பரபரப்பும், குழப்பமும், பயமும் முளைத்து வளர்கின்றன. அளவற்ற கருணையினால்தான் இறைவன் உயிரைத் தொடர்ந்து வருகிறான். இது தெரிந்தும், இறைவன் தன்னைப் பிடித்து விட்டால், இங்கு இந்த உலகில் உள்ள எல்லாவற்றையும், இழக்க நேரிடுமோ என்று உயிர் மருள்கிறது. அந்த அச்சத்தில் ஓடுகிறது, ஒளிந்து கொள்ளப் பார்க்கிறது. பயத்தில் துடித்துப் பதுங்குகின்ற விலங்கின் பார்வையில் வேட்டை நாய் எப்படித் தோன்றுமோ, அப்படித்தான், உயிருக்கு இந்த நிலையில் இறைவன் தோன்றுகிறான். இதைச் சொல்கிறான் கவிஞன்:

என்னைத் தொடரும் அவன் அன்பை
  அறிவேன் எனினும் அதை ஏற்றால்
பின்னர் எனக்குப் பிறிதொன்றும்
  இல்லா அவலம் வந்திடுமோ

என்று பயந்தேன் மனம் நொந்தேன்
  ஏதும் உரிமை அற்றவனாய்
என்றே மக்கள் ஒதுக்கிய வோர்
  ஏழை போலத் திரிந்தேன்

இப்படி ஓடி அலைந்து, உள்ளம் என்னும் மாளிகைக்கு வந்து சேர்கிறான் கவிஞன். அந்த மாளிகையில், பற்பல பலகணிகள் உள்ளன. ஒவ்வொரு பலகணி வாசலிலும், மனித உறவுகள் என்ற கொடிகள் பின்னிச் செறிந்து, பலகணியின் குறுக்கே சிவப்புத் திரையாக அசைகின்றன. இவ்வுறவுகளில் ஏதாவது ஒன்றைப் பிடித்துக்கொண்டு, பலகணி வழியாக, உள்ளத்தின் உள்ளே சென்று, மனித உறவுகள் விளைக்கின்ற உணர்ச்சிகளுக்குள்ளே ஒளிந்துகொள்ள எண்ணுகிறான் கவிஞன். அதாவது, மனிதனுக்கு மனிதன் உள்ள எத்தனையோ தொடர்புகளில் ஏதாவது ஒன்றின் மூலமாக நிறைவு கிட்டி விட்டது என்றால், பிறகு இறைவன்



மானேஜர்:—என்ன ஐயா! நான் தேர்தலுக்கு நிற்கிறேன்; நீர் நமக்காகக் கொஞ்சம் பிரசாரம் செய்யணும்.

குமாஸ்தா:— இல்லீங்க, மன்னிக்கணும். வேறே நாலைந்து இடங்களில், 'அட்வான்ஸ்' வாங்கிகிட்டேனுங்க.



தேர்தலுக்கு நிற்க முடியாதவர்.

என்ற நிறைபொருள் தேவை இல்லை அல்லவா? ஆனால், இறைவனை ஒதுக்கியவனுக்கு, மனித உறவுகள் என்ற பலகணிகளும் அடைந்து விடுகின்றன.

உள்ளே ஒளிய இடம் தேடி
  உறவுக் கோடிகள் மிடைந்து அசையும்
உள்ளப் பலகணி வாசலிலே
  ஊர்போய் இழந்த நாடோடிக்
கள்ளன் போல மன்றாடிக்
  கதவு திறக்கக் காத்திருந்தேன்
மெள்ளத் திறக்கும் கதவம் அவன்
  மேவும் விசையில் மூடி விடும்

[மிடைந்து—நெருக்கிப் பின்னி]

அன்பு துரத்தி வருகிறது; அச்சம் கொண்ட உயிர் ஓடுகிறது. துரத்தி வருகின்ற அன்புக்குள்ள வலிமை, தப்பி ஓட முயலும் அச்சத்துக்கு இல்லை என்பது தெரிகிறது. மற்றவர்களோடு தனக்கு உள்ள பலவிதமான உறவுகள், இறைவனை ஒதுக்குவதற்குப் பயன்பட மாட்டா என்பதைக் கவிஞன் உணர்கிறான். சரி, அப்படியானால், இயற்கைப் பொருள்களோடும் சக்திகளோடும், காட்சிகளோடும் தன்னைப் பிணைத்துக் கொண்டு இறைவனிடமிருந்து தப்ப முடியுமா என்று கவிஞன் பார்க்கிறான். இந்த உலகின் கரையிலே ஓடுகிறான். அப்பால் உள்ள நட்சத்திர மண்டலத்துக்குத் தன் மனத்தைப் போக விடுகிறான். அங்கே விண்மீன்கள் அமைத்த கனகவாசலில் நின்று 'கதவைத் திறவுங்கள், உங்கள் எழிலில் ஒளிந்து கொள்கிறேன். அவன் வருகிறான், கதவைத் திறவுங்கள்' என்று தாரகைப் பொற்கோயிற்கதவுகளைத் தட்டுகிறான். ஆனால் கதவு அடைத்துக் கிடக்கிறது. சந்திர மண்டலத்துக்கு ஓடுகிறான். அங்கே, நிலவின் வாசலைத் தட்டித் தட்டிக் கலகல என்று வெள்ளி ஒலி எழுப்பியதுதான் மிச்சம், வாசல் திறந்தபாடில்லை. உதயமும் அந்தியும், வானிலே வர்ண மலர் தூற்றுகின்றன. 'இம்மலர்களை என் பேரில் குவித்து என்னை மறையுங்களேன்' என்று முறையிடுகிறான். பயனில்லை.

உலக வரம்பின் மீதோடி
  உயர்வான் மீனப் பொற் கோயில்
நிலைகள் அதிர இடித்தேன் அந்
  நிலைக் கதவம் தான் திறவா.
நிலவின் வெள்ளித் தலை வாசல்
  நிலையும் குலுங்க அசைத்திட்டேன்
கல கலென்னப் பேசினவே
  அன்றிக் கதவம் தான் திறவா.

---



# சேமிப்பவர்

## சிறந்த சேவை செய்பவர்

●

புது இந்தியாவை நிர்மாணிக்கும் மாபெரும் பணிக்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 4800 கோடி அடுத்த ஐந்தாண்டுகளில் செலவழிக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. இப் பெருந்தொகையில் ரூ. 500 கோடி தேசீய சேமிப்பு மூலம் திரட்டியாக வேண்டும். எனவே நீங்கள் அளிக்கும் தொகை — அது எவ்வளவு சிறியதாயிருந்தாலும் நாட்டின் முன்னேற்றத்துக்காக உபயோகிக்கப்படும்.

●



நாட்டின் வருங்காலத்திற்கு முதலீடு செய்க

# தேசீய சேமிப்பு

சமுதாய செழிப்பு

மேற்கொண்டு விவரங்களுக்கு மற்றும் அல்லது விபத்திரங்களுக்கு எழுதவும் : தேசீய சேமிப்பு கமிஷனர், சிம்லா அல்லது உங்கள் ராஜ்யத்திலுள்ள பிரதேச சேமிப்பு அதிகாரி.

DA 56/313 TR

நிறைந்த காதல் வரை கடந்து
நின் நேசம் எங்கும் தொடர்கின்றான்
மறைந்து எங்கேனும் ஒளியேனேல்
மற்று இங்கு என்னைக் கண்டிடு
வான்.

செறிந்த இளவான் மலர் குவிந்துச்
செவ்வரி மங்கல் துகில் விரித்து
விரைந்து வந்தேனைமறை மின்னென
விழுந்தேன் வைகறை அந்தி
யிடம்.

[செவ்வரி—சிவந்த கோடுகள்; துகில்-ஆடை]

நட்சத்திரங்களும், சந்திரனும், உதயமும், அந்திப பொழுதும் எவ்வளவு அழகுடையவை! அவற்றின் அழகிலே தோய்ந்து தோய்ந்து, கவி உள்ளம் எவ்வளவு இன்பம் பெற்றிருக்கிறது! என்றாலும், இந்த இன்பமும் உயிருக்கு நிறைவு தரவில்லை. இவ்வியற்கைப் பொருள்களும், காட்சிகளும் இறைவனுக்குத் தொண்டர்கள்; அவனுக்கு உண்மையாக நின்று, அந்த அளவுக்குக் கவிஞனுக்குப் புகலிடம் அளிக்க மறுக்கின்றன. 'ஐயோ, என்னை ஏமாற்றி விட்டனவே, எனக்குத் துரோகம் செய்துவிட்டனவே' என்று கலங்குகிறான் கவிஞன்:

இறைவன் தொண்டர் இவற்றை
யெலாம்
எளிதில் மயக்கி என் வசத்தே
இருந்த என்னை ஏமாந்தேன் ;
இம்மியும் உண்மை தளராமல்

கருத்து முழுதும் அவன் பணியில்
களித்த காதல் நிலையில் அவை
சிறுமை வஞ்சம் எனக்கு இழைத்த
சீர் ஒன்றைத்தான் கண்டிட்டேன்.

இயற்கை அழகு இருக்கட்டும், அதுதான் ஏமாற்றி விட்டதே. இயற்கையில் உள்ள வேகம் நிறைந்த பொருள்களோடு, ஓட்டி நின்று பார்க்கலாமா, அப்போதாவது துரத்தி வருகின்ற இறைவன் என்ற வேட்டை நாயிடமிருந்து தப்ப முடியுமா என்று கவிஞன் எண்ணுகிறான். 'காற்றே எனக்குத் துணை செய்' என்று காற்றின் பிடரியின் மீது ஏறிப் போய்த்தாவுகிறான். (தொடரும்)



தமிழ் நாட்டுக்கு மேனாட்டிலிருந்து மாதந்தோறும் எத்தனையோ பிரமுகர்கள் விஜயம் செய்கிறார்கள். அவர்கள் வானளாவிய கோபுரங்களைக் கண்டு வியக்கின்றனர்! மாமல்லபுரத்துச் சிற்பச் செல்வத்தைக் கண்டு வியக்கின்றனர். தமிழ்ப் பெருமக்களின் உயரிய பண்பாட்டைக் கண்டு அதிசயிக்கின்றனர்! இப்படிப் பல இடங்களுக்குச் சென்றாலும் ஓரிடத்தை மறப்பதில்லை. ராஜாஜியுடன் சற்று நிமிஷ நேரமாகிலும் அளவளாவி விட்டுச் செல்லுவதற்கு அவர்கள் மறப்பதில்லை. அப்படிப் பார்க்காமல் செல்லுவது, தங்கள் தமிழ் நாட்டு விஜயம் நிறைவு பெற்றதாக அவர்களுக்குத் தோன்றுவதில்லை. அந்த மகானைத் தரிசிக்காமல் திரும்புவதாவது என்கிறார்கள். ராஜாஜியுடன் சிறிது நேரம் பேசிவிட்டுச் செல்லும்போது, இன்றுதான் நான் பிறந்த பயனை எய்தினேன் என்று உள்ளம் மகிழ்ந்து கூறிவிட்டுச் செல்கிறார்கள். இவற்றை யெல்லாம் கேட்கும்போது தமிழர்களுடைய உள்ளம் பெருமிதத்தால் பூரிக்கிறது! சமீபத்தில் நேருஜியுடன் சென்னைக்கு விஜயம் செய்த லேடி மவுண்ட்பாட்டன் சென்னையிலிருந்த சொற்ப நேரத்தில் ராஜாஜியின் இல்லத்துக்கு விஜயம் செய்து தமது வணக்கங்களைத் தெரிவித்துச் சிறிது நேரம் அளவளாவி விட்டுச் சென்றிருக்கிறார். ராஜாஜியும் லேடி மவுண்ட்பாட்டனும் பேசிக் கொண்டிருக்கும் காட்சியையும், ராஜாஜியின் குடும்பத்தினருடன் புகைப்படம் எடுத்துக் கொண்ட காட்சியையும் படத்தில் காணலாம். கோட் அணிந்து கொண்டு பின்னால் நிற்பவர்தான் கிருஷ்ணகிரித் தொகுதிக்கு பார்லிமெண்ட் அங்கத்தினராக நிற்கும் ஸ்ரீ ஸி. ஆர். நரஸிம்மன். போட்டோ—வி. ஆர். பார்த்தசாரதி

# வட்ட மேஜை

“கல்கி” இதழ்களில் “நல்லவர்களுக்கு வோட்டுப் போடுங்கள் 1, 2”, “வாக்காளர்களுக்கு ஒரு வார்த்தை” என்ற மூன்று தலையங்கங்களையும் கண்டு மகிழ்ந்தேன்.

இன்று காங்கிரஸ்-குறிப்பாகத் தமிழ் நாடு காங்கிரஸ் கட்சியில் உள்ள ஊழல்களையும் குறைபாடுகளையும் அப்படியே படம் பிடித்துக் காட்டியிருப்பதுடன் வாக்காளர்கள் யாருக்கு வோட்டுப் போட வேண்டும் என்பதையும் அழகாக எழுதியிருக்கிறீர்கள்.

இன்று யாருக்கு வோட்டுப் போடுவது? காங்கிரஸ் என்னும் பழம்பெரும் ஸ்தாபனத்துக்கு வோட்டுப் போடலாம் என்றால் அதில் வகுப்புவாதம் என்னும் நோய் புரையோடி விட்டிருக்கிறதே! காங்கிரஸிலிருந்து—குறிப்பாக, தமிழ் நாடு காங்கிரஸிலிருந்து, பழம் பெரும் தேசபக்தர்களும், நல்லவர்களும், தியாகசீலர்களும் அங்கு நடக்கும் அக்கிரமங்களையும், தனிமனிதரின் எதேச்சாதிகாரப் போக்கையும் கண்டு சகியாமல் அதனின்று வெளியேறி விட்டார்களே! த. நா. காங்கிரஸில் பதவி வெறியர்களும், வகுப்புவாதிகளுமாக இருக்கிறார்களே! இன்று காங்கிரஸுக்குள் இருக்கும் ஒரு சில நல்லவர்களை அவர்கள் நல்லவர்கள் என்பதற்காக ஆதரிப்பதா? காங்கிரஸுக்கு வெளியில் ஒரு தலைமுறைக்கு மேல் தேச சேவை செய்து, தன்னலம் கருதாது உழைக்கும் உத்தமர்களை,- திரு சா. கணேசன் போன்ற தியாகிகளை—ஆதரிப்பதா? என்று குழப்பமுற்றிருக்கும் தமிழ் மக்களுக்குத் தங்கள் மேற்கண்ட மூன்று தலையங்கங்களும் கலங்கரை விளக்கமாய் அமைந்துள்ளதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறேன்.

இவைபோன்ற நல்ல பல கருத்துக்கள் மிக்க தலையங்கங்கள் எழுதி நாட்டுமக்களை இனியும் நல்ல வழியில் அழைத்துச் செல்லுமாறு இறைவன் தங்களுக்கு அருள் புரிவாராக!

வன்னியம்பதி
8-2-57

நாகராஜன்

★

“கல்கி” ஒரு போதும் நெறி தவறியதில்லை. இதற்குப் பல சான்றுகள் உள்ளன. 10-2-57 தலையங்கம் உள்ளங்கை நெல்லிக் கனியாக இருக்கிறது. என் போன்ற இளைஞர்கள் உள்ளங்களில் படிந்து கிடக்கும் எண்ணங்களையே தங்கள் பேனா முனையில் கொண்டு வந்திருக்கிறீர்கள். இருப்பினும் அதைப் பன்முறை படித்த பின்னும் என் ஆர்வம் தணியவில்லை. இந்தத் தலையங்கத்துக்காக மட்டும் தங்களைப் பல்லாயிரம் முறை வாழ்த்தினாலும் தகும்.

கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகக் காங்கிரஸுக்காக உழைத்தவர் காமராஜர் அவர்கள். காங்கிரஸுக்காக அனைத்தையும் தியாகம் செய்த சீலர். ஆனால் இன்று அவர் தலைமையில் ‘தமிழ் நாடு காங்கிரஸ் கட்சி’ வீழ்ச்சி தேடிக் கொண்டிருப்பதையும் பல ‘பசுத் தோல் போர்த்திய புலி’கள் இதற்கா ஒன்று சேர்ந்திருக்கும் அவல நிலையையும் அம்பலத்துக்குக் கொண்டு வந்த தனிப்பெரும் பெருமை ‘கல்கி’யையே சாரும்.

பம்பாய்
10—2—57

ஏ. கே. கிருஷ்ணன்

★

பிப்ரவரி பத்தாம் தேதி ‘கல்கி’ இதழ் தலையங்கத்தைப் படித்தேன். படிப்பினை பெற்றேன் என்றுதான் கூற வேண்டும்.

“வாக்காளர்களுக்கு ஒரு வார்த்தை” என்ற தலையங்கம், உரிமையுள்ள ஒவ்வொரு வாக்காளனையும், சிந்திக்கத் தூண்டும் என்பதில் சந்தேகமில்லை. வார்த்தையல்ல அது, வேத வாக்கு என்று கூறுவதே பொருத்தமாயிருக்கும் என்பது என் அபிப்பிராயம். மிகைப்படுத்தி நான் கூறவில்லை.

காங்கிரஸ் கட்சி, சுதந்திரப் போராட்டத்திலே போராடி வெற்றி கண்ட காங்கிரஸ் கட்சி, சாத்விகப் புரட்சி செய்து, சளியாது உழைத்து வெற்றி கண்ட காங்கிரஸ் கட்சி, சுயநலமேயில்லாது பாரத மக்களின் விடுதலைக்காகப் பாடுபட்ட காங்கிரஸ் கட்சி, சத்தியம், அஹிம்சை என்னும் அருமையான கொள்கைகள் கொண்ட காங்கிரஸ் கட்சி, இன்று, சாதி, மதம், இனம் என்னும் பெயரால் தமிழ் நாட்டிலே துவேஷத்தையும், குழப்பங்களையும் தூண்டி விட்டு, தூபம் போடும் கட்சியாக மாறியிருக்கிறது. தயை, கருணை என்ற பெயரால் கடமை என்ன



மனைவி:—தேர்தல் முடிவு வர இன்னும் வெகு நாள் கிடக்கு. அதற்கு இப்பவே பிடிக்கக் கவலைப்படறீங்களே!

வென்பதையே மறந்து, களங்கத்தையும், மாசையும் கற்பிக்கும் கட்சியாகி யிருக்கிறது. பாமரன் நிலைமறந்து, பண்புகெட்டுப் பணக்காரர்களோடு கூடி, குலாவித் திரியும் கட்சியாக ஆகியிருக்கிறது. சூதும், வாதும், சுயநலமும் சூழ்ந்து, சாகஸங்களைத் துணையாகக் கொண்டு சுழலும் கட்சியாக மாறியிருக்கிறது. குரங்கிடம் கொடுத்த பூமாலைக் கதையைப் போல், நழுவி விழுந்த கண்ணாடியைப் போல், காங்கிரஸ் கட்சி சிதறி, சீர்கெட்டு, செம்மை கெட்டு, சின்னாபின்னமாகிச் சீரழிந்து வருவதைப் பார்க்கையில், என்னைப் போன்ற சாதாரண வாலிபர்களது நெஞ்சே வெடிக்கும் நிலையடையும் போது, அந்தக் கட்சிக்காக அல்லும், பகலும் அரும் பாடுபட்ட உத்தமர்களின் மனம் எவ்வளவு வேதனைப் படும்?

அதனால் பொது மக்கள், மக்களுக்குப் பாடுபடுபவர்களுக்கு, பல கலைகள் பயின்றவர்களுக்கு வாக்குகளை வளிக்க வேண்டும்.

மதுரை
10—2—57

டி. தேவராஜன்

★

**கா**ங்கிரஸின் புனிதப் பாதையைக் கரடு முரடாக்கி அவற்றில் முள்ளும் புதரும்படர்ந்து அழியும்படி இந்தப் பொதுத் தேர்தலில் காங்கிரஸின் பெயரால் கேடு விளைவிக்கிறார்கள் சில கங்காணிகள். அவர்களுக்குத் தங்கள் வாக்குரிமைகளைக் கொடுக்காமல், காங்கிரஸிலேயே நல்லவர்களாகப் பார்த்து வாக்குச் சீட்டுகளை வழங்க வேண்டும் என்று வற்புறுத்தி வரும் தங்கள் தலையங்கக் கருத்துக்களைத் தக்க சமயத்தில் ஏற்றுக்கொண்டு அதைப் பயன்படுத்தாமல் போனால் நாமே நம்மை அழிவதற்கு வழி தேடிக் கொண்டவர்களாவோம். இது எங்களுடைய ஆணித்தரமான அபிப்பிராயமாகும்.

திருவல்லிக்கேணி
15—2—57

பி. சுந்தரராஜன்
பி. ஜானகி
எஸ். பத்மா
எம். சீனிவாசன்

★

**பி**ப்ரவரி மாதம் பதினேழாம் தேதி "கல்கி" இதழில் வெளியான "வாக்காளர்களின் கடமை" என்னும் தலையங்கம் தமிழ் நாட்டு மக்களுக்கு மட்டுமின்றி, பிழைப்புக்காகத் தாய்நாட்டை விட்டு நெடுந்தூரம் வந்திருக்கும் என் போன்ற எண்ணற்ற தமிழர்களுக்கும் வழிகாட்டும் ஓர் கலங்கரை விளக்கம். அதற்கடுத்து வெளி வந்திருக்கும் காட்டூர் கண்ணன் அவர்களின் கவிதை மிகவும் உருக்கமாக இருக்கிறது.

எங்களில் விரல் விட்டு எண்ணக் கூடிய ஒரு சிலரைத் தவிர மற்றப்படி எல்லோர் குடும்பங்களும் இன்று தமிழ் நாட்டில்தான் இருக்கின்றன. அவர்களுடைய வோட்டுச் சீட்டுகள் தவறான "பேர்வழி"களுக்குச் செல்லாமல் தடுக்கத் தேவையான நடவடிக்கைகளை வட நாட்டில் வாழும் தமிழ் அன்பர்கள் தக்க தருணத்தில் எடுக்கத் தவற மாட்டார்கள் என்று பரிபூரணமாக நம்புகின்றேன். இவ்வெண்ணமே ஓங்கி நிற்கும் உள்ளங்களுக்கு



தேர்தலுக்கு நிற்கும் மந்திரியைப் பார்த்து:— **வாங்க! வாங்க! போன தேர்தலின்போது தங்களைப் பார்த்தது. சௌக்கியமா?**

மிருந்த ஆறுதல் அளிக்கும் முறையில் அமைந்திருக்கிறது இவ்வாரத் தலையங்கம்.

பம்பாய்
15—2—57

மூர்த்தி

★

**ப**ணக்கார அபேட்சகர்கள் ஏழை அப்பாவி வாக்காளர்களிடம் ஒரு வாக்குச் சீட்டுக்கு இவ்வளவு தொகை என்று நிர்ணயம் செய்து கொண்டு விடுகிறார்கள். அதற்கான பணத்தை முன் கூட்டியே வாக்காளரிடம் கொடுப்பதில்லை. வாக்காளர் வாக்குச் சீட்டைப் பெற்றுக் கொண்டு வோட்டுச் சாவடிக்கு உள்ளே போய்ப் பெட்டியில் வாக்குச் சீட்டைப் போடாமல் வாக்குச் சீட்டைத் திரும்பி வெளியே எடுத்து வரவேண்டும். பிறகு பணக்கார அபேட்சகரின் ஏஜண்டிடம் வாக்குச் சீட்டைக் கொடுத்து ஒப்பந்தப்படி பணத்தைப் பெற்றுக் கொண்டு போக வேண்டும். இம்மாதிரி பல வாக்காளர்களிடம் வாக்குச் சீட்டுக்களைச் சேகரித்துக் கொண்டு, பிறகு தமக்கு மிகவும் நம்பிக்கை உள்ள ஒரு வாக்காளரை வோட்டுப் போடுவதற்கு அனுப்பி அவரிடம் தான் சேகரித்து வைத்திருக்கிற வோட்டுக்களைக் கொடுத்து எல்லா வாக்குச் சீட்டுகளையும் தன்னுடைய பெட்டியில் போடச் சொல்லி விடுவார்கள். ஆகையால் காரைக்குடி போன்ற முக்கியமான தொகுதிகளில் இது மாதிரி நடக்காமல் கவனமாகக் கவனித்துக் கொள்ள வேண்டும்.

சேலம்
15—2—57

ரா. துரைசாமி

# ஈழநாட்டுப் பிரயாணம் 7

காலை வேளை. மலர்களின் நறுமணம் மலைப்புறங்களிலிருந்து மிதந்து வந்தது. அப்பொழுதுதான் சூரியன் உதயமாகிக் கொண்டிருந்தான். மரங்களின் இலைகள், புல் வரிசைகள், புஷ்பச் செடிகள் மீதெல்லாம் பனித்துளிகள் பளபளத்துக் கொண்டிருந்தன. மலைகளின் மோன தெளிவுகளுக்கிடையே மலைப் பாம்புபோல் நீண்டு கிடந்தது ரயில் பாதை. அந்தப் பாதையில் 'வீல்' 'வீல்' என்று ஊதிக் கொண்டு சென்றது புகைரதம். ரயிலின் இந்தச் சத்தத்தைத் தவிர வேறு சத்தம் இல்லை. ரத்தினபுரியைச் சுற்றிலும் ஒருவித அமைதி குடிகொண்டிருந்தது. நகர்ப்புறத்தில் கண்ட பரபரப்பு, அவசரம், தடபுடல் ஒன்றையும் காண முடியவில்லை. மக்கள் அவரவர்கள் காரியங்களை நிதானமாகப் 'பார்த்துக் கொண்டிருந்தனர்.

ரத்தினபுரியைச் சுற்றிலும் உள்ள இயற்கைத் தெய்வத்தின் அழகை வர்ணிக்கவே முடியாது. சற்றுக் கலை உணர்ச்சியும் கவிதை உள்ளமும் படைத்தவர்கள் இரத்தினபுரிக்குச் சென்றால் அங்கேயே தங்கி விடுவார்கள். துன்பப்பட்ட இதயத்தைத் துடைப்பதற்குத்தான் இயற்கைத் தெய்வத்துக்கு எவ்வளவு சக்தியிருக்கிறது! இயற்கை வாய் திறந்து பேசவில்லை; ஆனால் தன்னுடைய அழகால் நம்மை மயக்கி விடுகிறாள். மனத்துயரைப் போக்கி விடுகிறாள். இயற்கைத் தெய்வத்துக்குப் பேச்சு என்னத்துக்கு?

ரத்தினபுரியை அழகுபடுத்திக் கொண்டு ஓடும் களு கங்கைக்கரை ஓரமாகச் சென்றால் எத்தனை எத்தனையோ காட்சிகள் நம் கண் எதிரே தோன்றி மறைகின்றன. ஒவ்வொரு கணமும் ஒரு புதிய சித்திரம்; அத்தனையிலும் புதுப்புது உருவம்; புதுப் புது அழகு. ஏதோ ஒரு இனந் தெரியாத மரம் நீண்ட தன் கிளைகளை நீட்டிக் கமுகு மரத்துடன் கொஞ்சுவது போலிருக்கிறது. சற்று நேரத்துக்கெல்லாம் தன் ரத்தினம் போன்ற மலர்களைப் பலா மரத்தினிடம் காட்டச் சென்று விடுகிறது. கூந்தற் பனை கைகளை ஆட்டிக் கலகலவென்று சிரிக்கிறது. மரகதம் போலிருக்கும் மூங்கிற் போத்துகள் இங்கு ஒயிலாகப் பரதம் பிடிக்கின்றன. தூரத்தில் நிற்கும் அரச மரங்கள் ஒற்றைக் கால் மண்டபங்கள் போல் கம்பீரமாக நின்று கொண்டிருக்கின்றன. மரங்களுக்கு மத்தியிலும், ஒவ்வொரு மரத்துக் கிளைகளின் இடையிலேயும் தோன்றும் நீல வானம் எத்தனைவிதமான உருவத்தைத்தான் எடுத்துக் கொள்ளுமோ! நடு நடுவில் மேகக் கூட்டங்கள் அழகிய விமானங்கள்போல அணி வகுத்துப் பவனி வருகின்றன. அவை எடுக்கும் புதுப் புதுத் தோற்றங்களுக்கும் கணக்கில்லை. இதற்கு மத்தியில் சின்னச் சின்னப் பறவைகள் கூட்டம் கூட்டமாக, வரிசை வரிசையாகப் பறந்து வான வெளிக்கு மாலைசூட்டுவதுபோல் செல்லும் காட்சி, கண்கொள்ளாக் காட்சி! மரத்துக்கு மரம் தாவிப் பறக்கும் பட்சி ஜாலங்களின் கலகலத் தொனியும், சூரியன் ஒளி ஆங்காங்கே மரங்களின் அடர்த்திக்கு நடுவே ஊடுருவிப் பாய்ந்து வந்து தரையில் ஒளியையும் நிழலையும் ஒன்றுடன் ஒன்று சேர்த்துப் பிணைத்துக் காட்டும் விந்தையும் ரத்தினபுரியை மாயாபுரியாக்கி விடுகின்றன.

தூரத்தில் எங்கிருந்தோ இனிய குரல் எடுத்துக் கூவுகிறது பூங்குயில். அதன் குரலுக்குத்தான் எத்தனை இனிமை! எப்படிப்பட்ட வசீகர சக்தி! அதுவும் களுகங்கைக்கரையின் சோலைக்குள் இருந்து கேட்கும் போது உண்டான ஆனந்தத்தை எப்படிக் கூறுவது? இத்தனை அழகுகளையும் கண்ணால் பார்த்துக் களித்துக் கொண்டு, விதம் விதமான பறவைகளின் இனிய கானங்களையும் காதால் கேட்டு அனுபவித்துக் கொண்டு களுகங்கையின் கரை ஓரமாகச் சென்றோம். இயற்கைத் தெய்வத்தின் மணம் நிறைந்த மூச்சுக் காற்று எங்களைத் தழுவியபோது இணையற்ற இன்பத்தை அனுபவித்தோம். இயற்கையின் மிருதுவான மடியில் நாங்கள் எங்களை மறந்து



# ஈழநாட்டுப் பிரயாணம் (7)

காலை வேளை. மலர்களின் நறுமணம் மலைப்புறங்களிலிருந்து மிதந்து வந்தது. அப்பொழுதுதான் சூரியன் உதயமாகிக் கொண்டிருந்தான். மரங்களின் இலைகள், புல் வரிசைகள், புஷ்பச் செடிகள் மீதெல்லாம் பனித் துளிகள் பளபளத்துக் கொண்டிருந்தன. மலைகளின் மோன தெளிவுகளுக்கிடையே மலைப் பாம்புபோல் நீண்டு கிடந்தது ரயில் பாதை. அந்தப் பாதையில் 'வீல்' 'வீல்' என்று கூவிக் கொண்டு சென்றது புகைரதம். ரயிலின் இந்தச் சத்தத்தைத் தவிர வேறு சத்தம் இல்லை. ரத்தினபுரியைச் சுற்றிலும் ஒருவித அமைதி குடிகொண்டிருந்தது. நகர்ப்புறத்தில் கண்ட பரபரப்பு, அவசரம், தடபுடல் ஒன்றையும் காண முடியவில்லை. மக்கள் அவரவர்கள் காரியங்களை நிதானமாகப் 'பார்த்துக் கொண்டிருந்தனர்.

ரத்தினபுரியைச் சுற்றிலும் உள்ள இயற்கைத் தெய்வத்தின் அழகை வர்ணிக்கவே முடியாது. சற்றுக் கலை உணர்ச்சியும் கவிதை உள்ளமும் படைத்தவர்கள் இரத்தினபுரிக்குச் சென்றால் அங்கேயே தங்கி விடுவார்கள். துன்பப்பட்ட இதயத்தைத் துடைப்பதற்குத் தான் இயற்கைத் தெய்வத்துக்கு எவ்வளவு சக்தியிருக்கிறது! இயற்கை வாய் திறந்து பேசவில்லை; ஆனால் தன்னுடைய அழகால் நம்மை மயக்கி விடுகிறாள். மனத்துயரைப் போக்கி விடுகிறாள். இயற்கைத் தெய்வத்துக்குப் பேச்சு என்னத்துக்கு?

ரத்தினபுரியை அழகுபடுத்திக் கொண்டு ஓடும் களு கங்கைக்கரை ஓரமாகச் சென்றால் எத்தனை எத்தனையோ காட்சிகள் நம் கண் எதிரே தோன்றி மறைகின்றன. ஒவ்வொரு கணமும் ஒரு புதிய சித்திரம்; அத்தனையிலும் புதுப்புது உருவம்; புதுப் புது அழகு. ஏதோ ஒரு இனந் தெரியாத மரம் நீண்ட தன் கிளைகளை நீட்டிக் கமுகு மரத்துடன் கொஞ்சுவது போலிருக்கிறது. சற்று நேரத்துக்கெல்லாம் தன் ரத்தினம் போன்ற மலர்களைப் பலா மரத்தினிடம் காட்டச் சென்று விடுகிறது. கூந்தற் பசிய கைகளை ஆட்டிக் கலகலவென்று சிரிக்கிறது. மரகதம் போலிருக்கும் மூங்கிற் போத்துகள் இங்கு ஒயிலாகப் பரதம் பிடிக்கின்றன. தூரத்தில் நிற்கும் அரச மரங்கள் ஒற்றைக் கால் மண்டபங்கள் போல் கம்பீரமாக நின்று கொண்டிருக்கின்றன. மரங்களுக்கு மத்தியிலும், ஒவ்வொரு மரத்துக் கிளைகளின் இடையிலேயும் தோன்றும் நீல வானம் எத்தனைவிதமான உருவத்தைத்தான் எடுத்துக் கொள்ளுமோ! நடு நடுவில் மேகக் கூட்டங்கள் அழகிய விமானங்கள்போல அணிவகுத்துப் பவனி வருகின்றன. அவை எடுக்கும் புதுப் புதுத் தோற்றங்களுக்கும் கணக்கில்லை. இதற்கு மத்தியில் சின்னச் சின்னப் பறவைகள் கூட்டம் கூட்டமாக, வரிசை வரிசையாகப் பறந்து வான வெளிக்கு மாலைசூட்டுவதுபோல் செல்லும் காட்சி, கண்கொள்ளாக் காட்சி! மரத்துக்கு மரம் தாவிப் பறக்கும் பட்சி ஜாலங்களின் கலகலத் தொனியும், சூரியன் ஒளி ஆங்காங்கே மரங்களின் அடர்த்திக்கு நடுவே ஊடுருவிப் பாய்ந்து வந்து தரையில் ஒளியையும் நிழலையும் ஒன்றுடன் ஒன்று சேர்த்துப் பிணைத்துக் காட்டும் விந்தையும் ரத்தினபுரியை மாயாபுரியாக்கி விடுகின்றன.

தூரத்தில் எங்கிருந்தோ இனிய குரல் எடுத்துக் கூவுகிறது பூங்குயில். அதன் குரலுக்குத்தான் எத்தனை இனிமை! எப்படிப் பட்ட வசீகர சக்தி! அதுவும் களுகங்கைக்கரையின் சோலைக்குள் இருந்து கேட்கும் போது உண்டான ஆனந்தத்தை எப்படிக் கூறுவது? இத்தனை அழகுகளையும் கண்ணால் பார்த்துக் களித்துக் கொண்டு, விதம் விதமான பறவைகளின் இனிய கானங்களையும் காதால் கேட்டு அனுபவித்துக் கொண்டு களுகங்கைக் கரை ஓரமாகச் சென்றோம். இயற்கைத் தெய்வத்தின் மணம் நிறைந்த மூச்சுக் காற்று எங்களைத் தழுவியபோது இணையற்ற இன்பத்தை அனுபவித்தோம். இயற்கையின் மிருதுவான மடியில் நாங்கள் எங்களை மறந்து



பட்டது. எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னும் இந்த வைரம் மாளவ தேசத்து மன்னனிடமிருந்து அலாவுதீன் கைக்குச் சென்றது.

அலாவுதீனிடம் சென்ற கோஹினூர் வைரம் அவனுக்குச் சந்ததியே இல்லாமல் அவன் குடும்பத்தை அழித்தது. அவனிடமிருந்து பல கைகள் மாறிக் குவாலியரை ஆண்ட ராஜபுத்திர மன்னன் கைக்கு வந்தது.

பிறகு ஹுமாயூன் கைக்குச் சென்றது. கோஹினூர் வைரம் கிடைத்த சில ஆண்டுகளில் ஹுமாயூன் ராஜ்யத்தை இழந்தான்.

இந்த வைரத்தை அணிய எண்ணித்தான் ஔரங்கசீப் தன் சொந்த சகோதரனைக் கொன்று தகப்பனையும் சிறையில் அடைத்தான். டில்லிக் கொள்ளைக்குப் பிறகு அது மகம்மது ஷாவின் ஆபரணங்களில் இல்லாததைக் கண்டு நாதிர்ஷா திகைத்துப் போனான். கடைசியில் எப்படியோ மகம்மதுஷா தம் தலைப்பாகையில் வைரத்தை மறைத்து வைத்திருப்பதைத் தெரிந்து கொண்டான். உடனே அவனிடம் சமாதானம் செய்து கொள்ள



முயன்றான் நாதிர்ஷா. மகம்மதுஷாவிடம் சென்று, "நம் சமாதானத்துக்கு அடையாளமாக நாம் இருவரும் ஒருவர் தலைப்பாகையை ஒருவர் மாற்றிக் கொள்வோம்" என்றான் நாதிர்ஷா. இவ்வாறு மகம்மதுஷாவிடம் இருந்த வைரம் நாதிர்ஷாவின் கைக்கு மாறியது. இந்தச் சம்பவத்துக்குப் பின்னரே "தலைப்பா மாற்றும் வேலை செய்யாதே!" என்ற பழமொழியும் ஏற்பட்டது.

தலைப்பாகைக்குள்ளிருந்து வைரத்தை எடுத்துப் பார்த்து அதன் சுடர் ஒளியில் தன்னையே மறந்து 'கோஹ்-இ-நூர்' என்று தன்னையும் அறியாமல் கத்தினான் நாதிர்ஷா. அதாவது 'ஜோதி மலையே!' என்று கூறி வியந்து போனான். இந்த வைரத்துக்குக் கோஹினூர் என்ற சிறப்புப் பெயரும் வந்தது.

ஆப்கானிஸ்தான் அரசனான அஹமது அலியின் கைக்குக் கோஹினூர் சென்றது. பஞ்சாபின் சிங்கமான ரஞ்சித் சிங் ஆப்கானியரை வென்று கோஹினூரைக் கொண்டு வந்தான்.

கோஹினூரின் பிற்காலத்துச் சரித்திரம் எல்லாருக்கும் தெரிந்ததுதான். ஆங்கிலேயர்கள் பஞ்சாபை வென்று கோஹினூரைக் கைப்பற்றினார்கள். இன்றைக்கு அது இங்கிலாந்து அரசியின் சூடாமணியாகி விட்டது.

இவ்வாறு நண்பர் கோஹினூர் கதையைக் கூறி முடிப்பதற்கும் ரத்தினச் சுரங்கம் வருவதற்கும் சரியாக இருந்தது. ரத்தினச் சுரங்கம் என்றால் ஏதோ பெரிய கட்டடங்களும் ஏராளமான இயந்திரங்களும் நூற்றுக்கணக்கான தொழிலாளர்களும் வேலை செய்து கொண்டும் இருப்பார்கள் என்று எதிர்பார்த்துக் கொண்டு வந்தேன். அவர்கள் ஒரு சாதாரணமான கிணற்றைச் சுட்டிக் காட்டி "இதுதான் ரத்தினச் சுரங்கம்" என்றதும் ஒரு கணம் ஒன்றுமே புரியாமல் திகைத்துப் போனேன். "இந்த ரத்தினச் சுரங்கத்தைப் பற்றிய விவரங்களை உங்களுக்கு விரிவாகச் சொல்லக் கூடியவர் அதோ நிற்கிறாரே, அந்தச் சிங்களத் தொழிலாளிதான்" என்று கூறிப் பாரி இல்லத்து நண்பர் அந்தத் தொழிலாளியை எனக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். அவர் சிங்களமும் தமிழும் கலந்த மொழியில் கூறிய விவரங்களை நான் ரத்தினச் சுரங்கத்தை நேரிலேயே பார்த்ததால் ஒருவாறு புரிந்துகொள்ள முடிந்தது.

## ரத்தினச் சுரங்கம் பாரீர்!

திடமான உடல், அகன்ற மார்பு, கம்பீரமான முகம், சற்று வளைந்த மூக்கு, சற்றே சுருக்கம் விழுந்த முகத்தில் 'பளீர்' என்று மின்னும் கண்கள். இடையிலே மட்டும் கட்டம் போட்ட 'லுங்கி' உடுத்தியிருந்தான். உருண்டு திரண்டிருந்த கைகளை முழங்கால் மீது வைத்துக் கொண்டு அமர்ந்திருந்தான். ஏதோ பெரிய வீர புருஷன் போல்தான் அமர்ந்திருந்து பேசினான், அந்த ரத்தினச் சுரங்கத்தின் சிங்களத் தொழிலாளி.

"சுமார் முப்பது வருஷங்களுக்கு மேலாக நான் இந்த ரத்தினச் சுரங்கத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறேன், ஐயா!" என்று ஆரம்பித்தான் அந்தச்சிங்களவன். கமுகுத் தோப்பு மரங்களின் சலசலப்புக்கும், பலாமரத்தைச் சுற்றிச் சுழன்று ரீங்காரம் செய்து கொண்டிருந்த கருவண்டின் சத்தத்துக்கும் மத்தியில்தான் அவன் பேசினான்.

"ரத்தினபுரி நிலத்தில் ரத்தினங்கள் எங்கு வேண்டுமானாலும் கிடைக்கும். நிலத்தின் மேற்பரப்பைப் பார்த்தவுடனேயே இங்கு ரத்தினங்கள் கிடைக்கும், அல்லது கிடைக்காது என்று தெரிந்து கொள்ளும் அனுபவம் எனக்கு உண்டு. என்னைப் போலவே இன்னும் பலர் இந்த நாட்டில் இருக்கிறார்கள். எங்கள் உதவியுடன்தான் ரத்தினச் சுரங்கத்தை வெட்ட ஆரம்பிப்பார்கள்" என்றான்.

"அதெப்படி உங்களுக்கு மட்டும் பூமிக்கு அடியில் குறிப்பிட்ட இடத்தில் ரத்தினங்கள் இருக்கும் என்று தெரிகிறது?"

"அதை விளக்கிக் கூற முடியாது. அனுபவத்தின் மூலமாகத்தான் தெரிந்து கொள்கிறோம். உங்கள் நாட்டில்கூடப் பூமிக்கு அடியில் தண்ணீர் இருக்கிறதா என்று கண்டு

# இதன் பரிசுத்தம் தோலில்



பாதுகாக்கப்படுகிறது.

# துஷார்

விடமின் கொண்ட
வனஸ்பதி

இதன் பரிசுத்தம்
சீல் செய்யப்பட்ட
டப்பாவில்
பாதுகாக்கப்படுகிறது.




2 பவுண்டு,
5 பவுண்டு,
10 பவுண்டு
டின்களில்
கிடைக்கிறது

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிட்., கர்நூல்

பிடிக்கும் ஒருவர் இல்லையா? அவருக்குக்கூட 'பாணி மகராஜ்' என்று பட்டம் சூட்டி ஆயிரக்கணக்கான ரூபாய்களைக் கொடுக்கவில்லையா? அதுபோலத்தான். நாங்கள் குறிப்பிட்டுச் சொல்லும் இடங்களில் பெரும்பாலும் ரத்தினங்கள் கிடைக்கும்.''

''இந்த இடத்தில் ரத்தினம் கிடைக்கும் ரத்தினச் சுரங்கம் தோண்டலாம் என்று நீங்கள் சொல்லிவிட்ட பிறகு உடனே சுரங்கம் வெட்ட ஆரம்பிக்க வேண்டியதுதானே!''

''ரத்தினச் சுரங்கம் தோண்டுவதற்கு முன்னால் முதலில் ரத்தினபுரி 'அர்பன் கவுன்ஸி'லில் நூறு ரூபாய் கட்டி ரத்தினச் சுரங்கம் வெட்ட உத்தரவு பெற வேண்டும்.''

''நூறு ரூபாய் சர்க்காருக்குப் போய்ச் சேர்ந்து விடுமாக்கும்.''

''அதெல்லாம் ஒன்றுமில்லை. ரத்தினச் சுரங்கத்துக்காகப் பூமியைத் தோண்டுகிறோமே அந்தப் பள்ளத்தைத் தூர்த்து விட்டால் மீண்டும் பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம்.''

''ஓஹோ! நினைத்த இடத்தில் பூமியில் குழியைத் தோண்டி அதை அப்படியே விட்டு விடாமல் இருப்பதற்காகச் சர்க்கார் நூறு ரூபாய் வாங்குகிறார்களா?''

''ஆமாம்.''

''பிறகு?''

''பிறகு என்ன? வசதியுள்ளவர்கள், தனிப்பட்ட முறையிலேயே ரத்தினச் சுரங்கத்தைத் தோண்டுவார்கள். வசதி இல்லாதவர்கள் நாலைந்து பேர்களாகக் கூட்டுச் சேர்ந்து கொண்டும் இத்துறையில் ஈடுபடுவார்கள்.''

''ரத்தினச் சுரங்கத்தைப் பார்த்தால் அதற்கு ஒன்றும் மூலதனமே வேண்டாம் போல் தோன்றுகிறதே. ஏதோ கிணறு தோண்டுவது போலப் பூமியைத் தோண்டிவிருக்கிறார்கள். அவ்வளவுதானே!''

''ஆமாம், சுமார் முப்பதடியிலிருந்து நூறு அடி ஆழம் தோண்டினாலே போதும். அப்படித் தோண்டுவதற்கு ஆட்கள் வேண்டாமா? குறைந்தது ஒரு நாளைக்கு எட்டு ஆட்களாவது வேண்டும். அவர்கள் பூமியை வெட்டிக் கொண்டு செல்வார்கள். கூடவே பக்கத்தில் உள்ள மண் சரிந்து விழாமல் இருப்பதற்காக மரப் பலகைகளை அணையாக வைத்துப் பொருத்துவார்கள். ரத்தினச் சுரங்கங்கள் பெரும்பாலும் களுகங்கையின் கரையிலேயே இருப்பதால் விடாமல் தண்ணீர் ஊறிக் கொண்டே இருக்கும். ஊறும் தண்ணீரையும் தொடர்ந்து இறைக்க வேண்டும். இதற்கெல்லாம் பல நாட்கள், மாதங்கள் கூடச் சில சமயங்களில் ஆகும். இதற்கு மத்தியில் அடிக்கடி மழை வேறு வந்து விடும். மழை பெய்ய ஆரம்பித்து விட்டால் சுரங்கத்தையே தோண்ட முடியாது. சுரங்கத்தைத் தோண்ட முடியாவிட்டாலும் சுரங்கம் தோண்டும் ஆட்களுக்கு ஒன்றுக்குப் பாதியாவது கூலி கொடுத்து வர வேண்டும். இதற்குச் சில ஆயிரம் ரூபாய்களாவது செலவு செய்ய வேண்டும். இப்படிச் சில ஆயிரங்கள் செலவு செய்தாலும் ரத்தினங்கள் கிடைக்கும் என்பதை நிச்சயமாகச் சொல்ல முடியாது. அப்படியே கிடைத்தாலும் செலவு செய்த ரூபாய் பெறுமானத்துக்கு நவரத்தினங்கள் கிடைக்குமா என்பதுகூட சந்தேகம்தான்.

அதனால்தான் இத் துறையில் நாலைந்து பேர்கள் கூட்டுச் சேர்ந்தே ஈடுபடுகிறார்கள்.''

''நிச்சயமில்லாத முயற்சிதானே இது?''

''நம்பிக்கை உள்ள முயற்சிதான். சாதாரணமாக மழை பெய்து நின்று விட்டாலே போதும். இந்த ஊர் மக்கள் எல்லாம் பூமியைப் பார்த்துக் கொண்டு நடப்பார்கள். வெள்ளத்தில் மண் அரித்த இடத்தில் ஏதாவது மாணிக்கக் கற்கள் கிடைக்குமா என்று பார்த்துக்கொண்டே போவார்கள்.''

''இப்படிக்கூடக் கிடைக்குமோ?''

''இவ்வூருக்கு அருகில் பெல்மதுல்ல என்ற ஒரு கிராமம் இருக்கிறது. அங்கு ஒரு விவசாயி மழை பெய்து நின்றவுடன் தன் வயலில் உழுவதற்குச் சென்றான். நிலத்தை உழும் போது ஏர் முனையில் கால் ராத்தல் இடையுள்ள பெரிய மரகதம் கிடைத்தது. நாற்பதினாயிரம் ரூபாய்க்கு அதை விற்றான். இப்பொழுதுகூட அந்த ஆள் இருக்கிறான். மிகுந்த சௌகரியத்துடன் இருக்கிறான். இதையெல்லாம் பார்த்துவிட்டுத்தான் எப்பொழுதாவது ஏதாவது ஒரு மாணிக்கக் கல் கிடைக்காதா என்ற ஆசையில் ரத்தினச் சுரங்கத்தைத் தோண்டுவதில் பலர் ஈடுபடுகிறார்கள். அனேகமாக அவர்களுக்கும் அவர்களுடைய உழைப்புக்கும், போட்ட பணத்துக்கும் மோசமில்லாமல் ரத்தினக் கற்கள் கிடைத்துக் கொண்டுதான் வருகின்றன.''

''பூமியைக் குடைந்து கொண்டே போகிறீர்கள்; அதில் ஊறும் தண்ணீரையும் இறைக்கிறீர்கள். பிறகு?''

''முப்பது நாற்பது அடிக்குக் கீழே சில இடங்களில் ஒருமாதிரியான கூழாங் கற்கள் தென்படும். அவைகளைப் பார்த்தவுடன் சுரங்கம் தோண்டுபவர்களுக்கு உற்சாகம் ஏற்பட்டுவிடும். இந்த மாதிரி கூழாங்கற்கள் எந்தப் பக்கம் கிடைக்கிறதோ அந்தப் பக்கமாகத் தோண்ட ஆரம்பிப்பார்கள். அந்தக் கற்கள் பக்கவாட்டில் கிடைத்தால் அந்தப் பக்கத்தில் குடைய ஆரம்பிப்பார்கள். இப்படிக் குடையும் பாதைக்கு 'மாணிக்கப் பாதை' என்று பெயர். இந்த மாணிக்கப் பாதையில் கிடைக்கும் கூழாங்கற்களை உடனுக்குடன் மேலே அனுப்பிக் கொண்டிருப்பார்கள். அந்தக் கற்களுடன் கலந்தே நவரத்தினக் கற்களும் கிடைக்கும்.''

''இந்தக் கற்களைச் சுரங்கத்துக்குள்ளிருந்து எப்படி மேலே கொண்டு வருகிறார்கள்?''

''அதுதான் நீங்கள் பார்த்தீர்களே. சாதாரணமாகக் கிணற்றில் உருளை இருக்குமல்லவா? அதுபோல இரண்டு அடி மூன்று அடி நீளமான மர உருளையைச் சுரங்கத்துக்கு மேலே உள்ள இரண்டு கட்டைகளுக்கு மத்தியில் பொருத்தியிருக்கிறார்கள். அதில் சுரங்கத்தின் ஆழத்துக்கு ஏற்ற வண்ணம் தாம்புக் கயிறு கட்டப்பட்டிருக்கிறது. அக்கயிற்றின்




''மறுபடியும் எங்களை வோட்டு கேட்க வந்தீங்களா? போன தேர்தலில் உங்களுக்கு வோட்டுக் கொடுத்தோமே; அது என்ன ஆச்சு?...அந்த வோட்டை முதலில் திருப்பிக் கொடுத்திட்டுப் பேசுங்க!''

---

இரண்டு முனைகளிலும் பெரிய பீப்பாய்களைக் கட்டியிருக்கிறார்கள். மர உருளைக்கு இரண்டு பக்கங்களிலும் அந்த உருளையைச் சுழற்றுவதற்கு வசதியாகப் பெரிய இரும்புப் பிடி இருக்கிறது. இந்த இரும்புப் பிடியை ஒவ்வொரு புறத்திலும் மூன்று மூன்று ஆட்கள் வீதம் நின்று சுழற்றுகிறார்கள். அப்படிச் சுழற்றும்போது உருளையில் சுற்றியிருக்கும் தாம்புக் கயிற்றின் ஒரு முனையில் கட்டி யிருக்கும் பீப்பாய் சுரங்கத்துக்குள் இறங்குகிறது. அதே சமயத்தில் இன்னொரு முனையில் கட்டியிருக்கும் பீப்பாய் சுரங்கத்துக்குள் இருக்கும் மாணிக்கக் கற்களுடன் மேலே வருகிறது. பீப்பாயில் இருக்கும் மாணிக்கக் கற்களை வெளியே கொட்டிக் கொண்டவுடன் பீப்பாயைச் சுரங்கத்துக்குள் விடுவார்கள். அது சுரங்கத்துக்குள் இறங்கிவிடும். இன்னொரு பீப்பாய்சுரங்கத்துக்குள்ளிருந்து மேலேவரும். இவ்வாறு மாணிக்கப் பாறையில் இருக்கும் ரத்தினக் கற்கள் முடியும் வரையில் எடுத்துக் கொண்டே இருக்க வேண்டியதுதான்.''

''இவ்வாறு எடுக்கும் ரத்தினக் கற்களை எங்கு கொண்டு போய் விற்பார்கள்?''

''ரத்தினபுரியிலேயே இந்தக் கற்களை வாங்கிக் கொள்வதற்கு வேண்டிய வியாபாரிகள் இருக்கிறார்கள். அவர்கள் எல்லாரும் முஸ்லிம்கள்தான். அவர்கள் இந்தக் கற்களை ஏதோ கொஞ்சம் ரூபாய் கொடுத்துத் தான் வாங்குகிறார்கள். பிறகு அதில் இருந்து இனம் பிரித்து அவைகளுக்குப் பட்டை தீட்டி நல்ல விலைக்கு விற்கிறார்கள். உண்மையில் ரத்தினச் சுரங்கத்தைத் தோண்டி ரத்தினங்கள் எடுப்பவர்களைவிட மிக அதிகமான பலனை அடைபவர்கள் பட்டை தீட்டி விற்கும் ரத்தின வியாபாரிகள்தான்.''

''இதற்காகச் சர்க்காருக்காக ஏதாவது விசேஷ வரி செலுத்த வேண்டுமோ?''

''அதெல்லாம் ஒன்றுமில்லை.''

''இந்தத் தொழிலில் தாங்கள் ஏராளமாகச் சம்பாதித்திருப்பீர்கள் இல்லையா?''

''சில சமயம் வெறும் கையுடனும் போயிருக்கிறேன். சுரங்கத்தில் கிடைக்கும் ரத்தினங்களில் தொழிலாளர்களுக்கும் பங்கு உண்டு. இதனால் பல சமயங்களில் பல ஆயிரக்கணக்கிலும் எனக்குப் பொருள் கிடைத்திருக்கிறது. எவ்வளவு கிடைத்தும் என்ன? வீட்டில் என்னமோ நாளைக்குச் சாப்பாடு கிடையாது.''

''ஏன் அப்படி?''

''இந்த நாட்டில்தான் இன்னும் கள்ளை ஒழிக்கவில்லையே! எத்தனை ஆயிரம் வந்தாலும் எல்லாம் அந்தக் குடியைக் கெடுக்கும் குடியிலேதான் தீர்ந்து போய் விடுகிறது'' என்று துக்கத்துடன் கூறினான் அந்தத் தொழிலாளி.

''ரத்தினச் சுரங்கத்தில் வேலை செய்தாலும் மறுநாள் சாப்பாட்டுக்குத் திண்டாட்டம் தானா?'' என்று எண்ணிக் கொண்டே ரத்தினச் சுரங்கத்திலிருந்து புறப்பட்டோம்.

பூமிக்கு அடியில்தான் எத்தனைவிதமான அற்புதங்கள் இருக்கின்றன! இயற்கையின் அற்புதங்களில் சாதாரண கரிகூட அல்லவா ஒளி வீசி மின்னும் வைரமாக மாறிவிடுகிறது.

*** *** ***

ரத்தினபுரியிலிருந்து புறப்படுவதற்கு முன்னால் அங்குள்ள மிகப் பெரிய ஆஸ்பத்திரிக் கட்டடத்தைப் பார்த்துவிட்டுத்தான் போக வேண்டும் என்று வற்புறுத்தினார்கள்.

அப்பாடி! ஆஸ்பத்திரி என்றால் இது அல்லவோ ஆஸ்பத்திரி! இலங்கை சர்க்கார் உண்மையிலேயே பெருமைப்பட வேண்டிய அரிய சாதனை. சுமார் நாற்பது லட்சம் ரூபாயில் எல்லாவிதமான வசதிகளுடன் கூடிய இந்த ஆஸ்பத்திரியைக் கட்டி யிருக்கிறார்கள். ஈழ நாட்டில் வேறு எங்குமே இவ்வளவு பெரிய ஆஸ்பத்திரி இல்லை. இந்த ஆஸ்பத்திரிக்கு அருகிலேயே அதில் தொண்டாற்றும் டாக்டர்கள், நர்ஸுகள், இதர சிப்பந்திகள் எல்லாருக்கும் வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. உயரமான மலைமீது இந்த ஆஸ்பத்திரி கட்டப்பட்டிருக்கிறது. மூன்றடுக்குள்ள இந்த அழகான ஆஸ்பத்திரிக் கட்டடத்தைப் பார்த்தபோது, இந்த ஆஸ்பத்திரியில் வந்து படுத்துக் கொள்வதாக இருந்தால் எந்த மாதிரி கொடிய நோய் வந்தாலும் பாதகமில்லை என்றே எண்ணத் தோன்றியது.

இக்கட்டடத்தைப் பார்த்துவிட்டுத் தமிழ்த் தெய்வம் கோயில் கொண்டிருக்கும் கதிர்காமத்துக்குப் புறப்பட இருந்தோம். அதற்குள் நண்பர் ''இங்கு சமீபத்தில் 'சிவன் ஒளி பாதமலை' என்று ஒரு மலை இருக்கிறது. அதில் ஏறாமல் போகக் கூடாது'' என்றார்.

''அதில் என்ன அப்படி விசேஷம்?''

''எல்லா சமயமும் போற்றும் மலை இது. 'ஒன்றே குலம்! ஒருவனே தேவன்!' என்ற பேருண்மையை விளக்கிக் காட்டும் அற்புதமான மலை. அங்கு போய் நின்று உதய சூரியனைப் பார்த்தால் போதும். பிறவி எடுத்த பயனையே அடைந்து விட்டதாகத் திருப்தி யடையலாம்'' என்று கூறி சிவன் ஒளி பாத மலைக்குச் செல்லும் சாலையில் மோட்டார்காரைத் திருப்பி விட்டார். (தொடரும்)

# மாலவல்லியின் தியாகம்

ஒன்பதாம் அத்தியாயம்

## மாலவல்லியின் காதலன்

பூதுகன் தன் காதலியோடு தனித்துப் பேசிக் கொண்டிருக்கும்போது கொஞ்சம் கூட இங்கிதம் தெரியாமல் வேறொரு பெண் அங்கு வந்து நிற்பது பூதுகனுக்கு மிகவும் விநோதமாகப் பட்டது. அவள் துறவறம் பூண்ட பௌத்த பிக்ஷுணியாகவே இருப்பினும் காதலர்கள் தனித்திருக்கும் இடத்தில் வந்து பிரவேசிப்பது பண்புள்ள காரியமாக அவனுக்குப் படவில்லை. ஒருவேளை மாலவல்லி எங்கேனும் ஒளிந்திருந்து தானும் வைகைமாலையும் பேசிக்கொண்டிருந்த விஷயத்தை ஒட்டுக் கேட்டு அறிந்திருப்பாளோ என்ற சந்தேகம் அவனுக்கு ஏற்பட்டது. இருப்பினும் அப்பொழுது அவள் அங்கு வந்ததையும், ஏதேனும் ஒரு விஷயத்தில் பயன்படுத்திக் கொண்டு விட வேண்டும் என்று விரும்பினான்.

மாலவல்லி அங்கு வந்தது, வைகைமாலைக்கும் சிறிது வியப்பை அளித்தது. ஒரு பெண் தன் காதலனோடு பேசிக் கொண்டிருக்கும் போது வேறொருவர் குறுக்கிடுவது அழகாகாது என்பதைத் துறவு வாழ்க்கையை மேற்கொண்டவர்களால் உணர முடியாது போலிருக்கிறது என நினைத்தாள். இருப்பினும் தன் காதலரைக் கண்ட ஆர்வத் துடிப்பில் மாலவல்லியைத் தான் மறந்து விட்டது தன்னுடைய பிசகும் கூட என்று உணர்ந்தாள். அவள் சிறிது வெட்கம் நிறைந்த குரலில், '' பகவதி! மன்னிக்க வேண்டும். இவர் என்



கி.ரா.கோபாலன்

ளோடு தனித்துப் பேச வேண்டுமென்று விரும்பியதால் உங்களை மறந்து விட்டேன்'' என்றான்.

'' அதனால் பாதகம் இல்லை, வைகை மாலை! நான் உனக்காகச் சிறிது நேரம் வெளியே காத்திருந்தேன். நெடு நேர மாகி விட்டது. நான் போக வேண்டு மல்லவா? அதனால் உன்னிடம் சொல்லிக் கொண்டு போகலாம் என்று வந்தேன்'' என்றாள் மாலவல்லி.

அவள் முகத்தில் வெட்கமும் நாணமும் சிறிது தாண்டவமாடின. வைகை மாலை அவளுக்கு ஏதோ சொல்ல நினைப்பதற்கு முன், பூதுகன் மாலவல்லியிடம், '' பகவதி! உங்களைப் போன்றவர்களெல்லாம் இரவு வேளைகளில் இப்படிப்பட்ட இடங்களுக்கு வர தர்மம் இடம் கொடுக்கிறதா?'' என்று கேட்டான்.



இந்த வார்த்தையைக் கேட்டதும் பிக்ஷுணி மாலவல்லியின் முகத்திலிருந்த நாணக் குறி மறைந்து பரபரப்பு உணர்ச்சி ஏற்பட்டது. '' இங்கு தர்மம் அதர்மம் என்பதெல்லாம் சில காரியங்களுக்காக எழுதி வைக்கப் பட்டவை. புத்தகங்களில் எழுதிவைக்கப்பட்ட தருமங்களையே எல்லாச் சமயங்களிலும் தருமங்களாகக் கொள்ள முடியாது. 'ஒருவருக்கு நன்மையென்று தோன்றியதை அஞ்சாமல் செய்ய வேண்டும். எந்தக் காரியத்தைச் செய்தால் பின்னால் மனம் இன்பம் அடையுமோ, அதன் பயனை உள்ளக் களிப்போடு அனுபவிக்க வேண்டியிருக்குமோ, அதுவே நற்செயல்.' அதோடு மட்டு மல்ல; தருமம் என்று சொல்லப்பட்ட சில விதிகளைச் சில சமயம் நல்லதற்காகத் துறக்கவும் நேரிடலாம். 'மனிதனை மனோதர்மமே உருவாக்குகிறது. சிந்தனைகளே அதன் அடிப்படை. சிந்தனைகளாலேயே அது ஆக்கப்படுகிறது. மனிதன் நல்ல எண்ணத்துடன் பேசினாலும் செயல் புரிந்தாலும் நிழல் தொடர்ந்து செல்வதுபோல் இன்பம் அவனைத் தொடர்ந்து செல்கிறது. 'பொய்யில் மெய்யைக் கற்பனை செய்து கொண்டு, மெய்யில் பொய்யைக் காணும் மருளுடையோர் மெய்ப் பொருளை ஒருநாளும் அடைய முடியாது. அவர்கள் வெறும் மோகத்தால் பீடிக்கப்பட்டு அலைந்து அல்லல் படுவார்கள்' என்பது ததாகதரின் மெய்மொழி'' என்றாள் மாலவல்லி.

'' பகவதி! உங்களுடைய வார்த்தைகள் எல்லாம் மிகவும் இனிமையாகத் தான் இருக்கின்றன. ததாகதர் சொல்லிய ஒவ்வொன்றையும் உணர்ந்து அதன்படி நடப்பதென்று உறுதி கொண்டிருந்தால் இப்படிப் பௌத்த விஹாரங்கள் எல்லாம் சாம்ராஜ்யச் சூழ்ச்சிக்காரர்களை நிறைந்திருக்கக் கூடிய இடமாகி இருக்காது. பகவதி! உங்களுடைய கொள்கைகள் மிகவும் பிடித்திருக்கின்றன. ஆனால் மற்றவர்கள் பௌத்த பிக்ஷுக்களுடைய தர்மங்களை மாத்திரம் விவரிக்கும் நூல்களைப் படித்து விட்டுச் சிந்திக்கும் திறன் இல்லாமல் ஊழலை வளர்த்துக் கொண்டு போகிறார்கள். பகவதி! தாங்கள் காஞ்சியிலிருந்து பூம்புகார் புத்த விஹாரத்துக்கு வந்த காரணம் என்னவோ?'' என்றான் பூதுகன் மெதுவாக.

'' காஞ்சியை விடப் பூம்புகார் மன நிம்மதியை அளிக்கும் இடமாகப் பட்டது. தவிர, சில தகாதவர்களிடையே என்னைப் போன்ற பிக்ஷுணி வசிப்பது கடினமாக இருக்கிறது. அதனால்தான் இங்கு வந்தேன். நாழிகையாகி விட்டது. நான் போகிறேன். இன்று உங்களைச் சந்தித்ததில் மிக்க மகிழ்ச்சி. அதிலும் மறுபடியும் இந் நாட்டில் உன்னதமான சோழ சாம்ராஜ்யத்தை நிறுவ வேண்டும் என்று பாடுபடும் உங்களுக்குப் புத்தர் பெருமானின் அருள் கிடைக்கட்டும். நான் சென்று வருகிறேன்'' என்றாள். பிறகு வைகை மாலையைப் பார்த்து, 'சென்று வருகிறேன்' என்பது போல் தலையை ஆட்டி விட்டு மெதுவாக நடந்தாள் மாலவல்லி.

அவள் சென்ற பின் சில நிமிட நேரம் அங்கே இருள் சூழ்ந்திருந்தது. ஆழ்ந்த சிந்தனையில் இருப்பவன் போல் இருந்த பூதுகன், '' வைகைமாலை! நாட்டில் இன்று நிலவும் பிரபல மதங்களின் மூல புருஷர்களின் உன்னத

நோக்கங்களுக்கும் இன்று நடக்கும் இந்த மதவாதிகளின் போராட்டத்துக்கும் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறது, பார்த்தாயா? களங்கமற்ற அழகு நிறைந்த புத்தரின் திருவுருவத்தையும், கம்பீரமும் சாந்தமும் நிறைந்த வர்த்தமான மகாவீரரின் திருவுருவத்தையும் நாம் மனக் கண்ணால் நினைத்துப் பார்க்கும் போது ஏற்படும் சாந்தி சில போலி மதவாதிகளின் கூச்சல்களையும், துவேஷ உணர்ச்சி நிறைந்த நடத்தைகளையும் நினைத்துப் பார்க்கும் போது எப்படிச் சின்னாபின்னமாகச் சிதைந்து விடுகிறது? போகட்டும், ஒரு விஷயம் இன்று மாலவல்லியால் எனக்கு விளங்கியது. 'வைகை மாலா! எளியமுறையில் பிக்ஷுணிவேடம் தாங்கி இருக்கும் இந்த மாலவல்லியின் வாழ்க்கையின் பின்னணியில் ஒரு ரச





கானகலாதர மதுரைமணி ஐயர் அவர்களின் மருமாள் சௌபாக்கியவதி லலிதாவுக்கும், திண்டுக்கல் திரு எஸ். ராஜகோபால ஐயரின் குமாரன் செல்வன் ஆர். கே. சுப்பிரமணியன் அவர்களுக்கும் ஜனவரி 25-ந் தேதி சென்னை ராயப்பேட்டையில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்கு ஏராளமான நண்பர்களும், உறவினர்களும் விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசி கூறினார்கள்.

வாழ்க, மணமக்கள்!

மான பெரிய கதை இருக்கிறது என்பது எனக்கு விளங்கி விட்டது. இவனைத் தொடர்ந்து வந்த பௌத்தத் துறவியை எங்கேயோ நான் பார்த்த ஞாபகமாக இருக்கிறது. இப்பொழுது அவன் சொல்லியதிலிருந்து தான் அவனும் காஞ்சியைச் சேர்ந்தவன் என்பதை அறிந்து கொண்டேன். நான் எப்பொழுதோ அவனைக் காஞ்சியில் பார்த்தேன் என்ற நினைவு எனக்கு ஏற்பட்டுவிட்டது. அவன் புத்தத்துறவியாவதற்கு முன்னால் தீவிர சமணவாதியாக இருந்தான். அவன் ஜினகிரிப் பள்ளியிலுள்ள வர்த்தமான பேரடிகளின் சிஷ்யன்-அவன் பெயர் ரவிதாசன். அவனைப் பற்றி எனக்கு நன்கு தெரியும். ஆனால் என்னைப் பற்றி அவனுக்குத் தெரிய நியாயமில்லை. இன்று உன்னத நிலையில் இருக்கும் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு அடங்கி இருக்கும் சிற்றரசர்களில் எவர்களைக் கவிழ்க்கலாம், எவர்களுக்கு ஆதரவு அளிக்கலாம் என்கிற சூழ்ச்சியிலேயே எப்பொழுதும் ஈடுபட்டிருப்பவன். சூழ்ச்சி வலை பின்னுவதிலே அவனுக்கு நிகர் அவனேதான்! மாலவல்லிக்கும் இந்த ரவிதாசனுக்கும் ஏதோ ஒரு வகையில் சம்பந்தம் இருக்கத்தான் வேண்டும். மாலவல்லிக்காகவேதான் அவன் மதம் விட்டு மதம் மாறிக் காஞ்சியிலிருந்து பூம்புகார் வந்திருக்க வேண்டும்'' என்றான்.

''இப்பொழுதுதான் எனக்கும் எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிவாகின்றன. மாலவல்லி இத்தகைய காரியங்களில் ஈடுபட்டவளாய் இருப்பினும் அவளுடைய உயிருக்கோ அல்லது கண்யத்துக்கோ எவ்வித ஆபத்தும் ஏற்படாமல் காப்பாற்ற வேண்டியது உங்கள் பொறுப்பு. நான் ஏன் இப்படிச் சொல்கிறேனென்றால் இதில்சாம்ராஜ்ய ஆசை மாத்திரம் இருக்குமென்று நான் நம்பவில்லை. இத்தகைய அழகு நிறைந்த யௌவன மங்கைக்குக் களங்கம் ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணம் உள்ள தூர்த்தரும் இந்த உலகத்தில் இருப்பார்கள் அல்லவா?'' என்றான் வைகைமாலை.

''அப்படியும் நினைப்பதற்குக் காரணம் உண்டு. ஆனால் ரவிதாசனுக்கு அத்தகைய நோக்கம் இருக்குமென்று நான் கருதவில்லை. அவள் மீது அவனுக்கு இச்சை இருந்தால் வேறு வழியில் முயற்சிப்பானே தவிர அவள் மீது குற்றம் கண்டு, அந்தக் குற்றத்துக்காக அவளைப் பௌத்த சங்கத்திலிருந்து நீக்க வேண்டும் என்பதில் சிரத்தை உள்ளவனாக இருக்க மாட்டான். மாலவல்லி இரவு வேளைகளில் உன் வீட்டுக்கு வருவதை ஒளிந்திருந்து பார்த்து அவள் மீது இந்தக் குற்றத்தைச் சொல்லி அவளைப் புத்தசங்கத்தில் வைத்து விசாரணை செய்து அங்கிருந்து வெளியேற்றி விடப் பார்க்கிறான். இன்று மாலை புத்த விஹாரத்தில் பூசை நடக்கும் வேளையில் இவள் புத்த பெருமானின் பொன்னடிகளில் மலர்களைச் சமர்ப்பிக்க அருகதையற்றவள் என்று கூச்சலிட்டு அந்தச் சபையில் அவளை விசாரணைக்கு உட்படுத்தி அவமானப்படுத்த நினைத்தான். ஆனால் மகா உத்தமராக விளங்கும் அக்கமகாதேரர் அதைத் தடுத்து, 'நாளை மறுதினம் பௌர்ணமியன்று நடக்கப் போகும் 'பாடிமோஹ்ஹத்தில்' விசாரிப்போம்' என்று சமாதானப்படுத்தி அடக்கி விட்டார். நிச்சயம் நாளை மறுதினம் மாலவல்லி குற்றம் சுமத்தப்பட்டு விசாரிக்கப்படுவாள். அதன் முடிவு என்னவாகுமோ, தெரியாது. அதற்குள் எத்தகைய மாறுதல்கள் எல்லாம் ஏற்படுமோ? எனக்கு இப்பொழுது கூடப் பெருஞ் சந்தேகம், மாலவல்லியைப் பின் தொடர்ந்து வந்த பிக்ஷு இவள் திரும்புகையில் எங்கேனும் மறைந்திருந்து இவளை வழிமறித்து இவளை ஏதோ கையும் களவுமாய்ப் பிடித்தவளைப் போலக் கலவரம் செய்து அவமானப்படுத்தி விடுவானோ என்று. அதோடு இவள் புத்த விஹாரத்திலிருந்து

# மலிவுதான்!

## ஆனாலும் இரட்டிப்பு விலை

இது ஒரு உயர்ந்த ரக கடிகாரம். இதை நீங்கள் ஒரு நம்பகமான வியாபாரியிடமிருந்து வாங்கும்போது ரசீதும், உத்திரவாதப் பத்திரமும் நீங்கள் பெறவேண்டியது அவசியம். அப்படிக்கில்லாவிட்டால் உங்களுக்கு நஷ்டம்தான்.

தெருவில் நின்று விற்பனை செய்பவன் உங்களுக்கு இந்த கடிகாரத்தை ரசீது, ஒரு வருஷ உத்திரவாதப் பத்திரம் இவைகள் கொடுக்காமல் விற்க முற்பட்டால் இது அநேகமாய் திருட்டுத்தனமாகக் கடத்தப்பட்ட கடிகாரமாகத்தான் இருக்கவேண்டும். இதை வாங்க வேண்டும் என்ற ஆவா உங்களுக்கு ஏற்படுவது சகஜம்தான். ஏன்? பொறுப்புள்ள வியாபாரி சொல்லும் விலையைவிட இது விலை குறைவல்லவா. ஆனால் வாங்குவதற்கு முன் நீங்கள் அடையப் போகும் நஷ்டத்தை சிறிது சிந்தித்துப் பாருங்கள். கடிகாரம் வாங்கும்போது அதை ஒரு கௌரவமான வியாபாரியிடமிருந்து பெறுங்கள். வாங்குமுன் அது ஸ்விஸ் ஜூவெல்ட்-லிவர் கடிகாரம்தானா என்பதை நிச்சயப்படுத்திக்கொள்ளுங்கள். உங்கள் கடிகார வியாபாரியின் அனுபவம் உங்களுக்கு ஆதரவு அளிக்கிறது.

**ஜூவெல்கள் பொருத்தப்பட்ட ஸ்விஸ்—லிவர் கடிகாரம் ஒரு அவசியமான தேவை பொருளேயன்றி ஆடம்பரத்திற்கல்ல**



**ஸ்விட்ஸர்லாந்து கடிகார தயாரிப்பாளர்கள்**

FHS-32 TAM

# உங்கள் குடும்பத்தைக் காப்பாற்றுங்கள்






எங்கெங்கு ஒட்டுவாரொட்டி
அபாயம் இருக்கிறதோ
அங்கெல்லாம்
பென்ஸிடாலை
தாராளமாகக்
கையாளுங்கள்

# பென்ஸிடால்

விஷமில்லை * மணமாக்காது * கறைபடாதது

தயாரிப்பவர்

தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிட்.

கல்கத்தா—29

CGF-2TM-Ta

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை - 1

---

## எல்லா விளையாட்டுகளுக்கும்

# தெம்புடன் இருங்கள்





அடிபட்ட இடங்கள், காயங்கள், சுளுக்குகள், தசைவலிகள், மரத்துப் போதல் முதலியவற்றின் சிகிச்சைக்கும், மற்றும் எவ்விதமான ஒத்தடத்திற்கும் உகந்தது.




# பிலிப்ஸ்

## இன்பிராபில்

எல்லா பிலிப்ஸ் அங்கீகாரம் பெற்ற வியாபாரிகளிடமும் கிடைக்கும்.



பிலிப்ஸின் விற்பனையும் சேவையும் கை கோர்த்து ஒருங்கே செல்லுகின்றன



ரூ 55 -நிகரம்
(உள்ளூர் வரிகள் தனி)

PSPH 2/0

வெளி வந்ததையும், இவளைப் பின் தொடர்ந்து ரவிதாசன் வந்ததையும் பிக்ஷு வேடத்தில் இருக்கும் வேறொரு வஞ்சகனும் பார்த்திருக்கிறான். அவன் சாதாரண மனிதன் இல்லை. எங்கேனும் கண்காணாத இடத்தில் சோழ வம்சத்தின் சிறு பூண்டு எழுந்தாலும் கிள்ளி எறிந்து விட வேண்டும் என்ற நோக்கம் கொண்டவன். நீ திகைப்படையாமல் இருந்தால் அவன் பெயரையும் உனக்குச் சொல்லுகிறேன்'' என்றான் பூதுகன்.

''அவன் யார்?'' என்று கேட்டாள் வைகைமாலை துடிப்போடு.

'அவன் யார்...' என்று துடிப்போடுகேட்ட வைகைமாலையின் உணர்ச்சியைப் பூதுகன் உணர்ந்து கொண்டானாயினும் கொஞ்சம்அமைதியாகவே, ''அவன் வேறு யாரும் இல்லை. தஞ்சை மன்னன் மாறன் முத்தரையரின் சேனாநாயகன். அவன் பெயர் கலங்கமாலவரையன். போர்முகத்தில் நின்று வெற்றி பெற வேண்டியவன், இன்று புத்த பிக்ஷு வேடம் தாங்கி முத்தரையரின் அரசைக் காப்பாற்ற நினைக்கிறான். கொடும்பாளூர் வீரர்களின் வாள் வலிமைக்குப் பயந்து அவன் பூம்புகார் புத்த விஹாரத்தைப்புகலிடமாகக் கொண்டிருக்கிறான்'' என்று கூறினான்.



இதைக்கேட்டதும் வைகைமாலை மிக்க கலக்கம் அடைந்தவளாய், ''அப்படியா? மாலவல்லி இங்கு வந்து போகிறாள் என்பதை அறிந்தாலே இவனுக்கு இன்னல் விளைவிக்க அவன் முயற்சிப்பான். நாங்கள் சோழ வம்சத்தினரிடம் எத்தகைய பற்றுள்ளவர்கள் என்பதைக் கொடும்பாளூர் அரசர்கள் எங்களுக்குச் செய்யும் மரியாதையிலிருந்து இவன் நன்கு உணர்ந்து கொண்டிருப்பான். மாலவல்லி இந்த வீட்டுக்கு வருவதை அவன் அறிந்தால் அவள் மீது சந்தேகம் கொண்டு அவளுக்குத் தீங்கு செய்ய நினைத்தாலும் நினைப்பான். மாலவல்லி எவ்வித இடையூறுமில்லாமல் புத்தவிஹாரத்துக்குச்சென்றிருப்பாளா என்று எனக்கு அச்சமாக இருக்கிறது. நீங்கள் இனியும் இங்கு தாமதிக்க வேண்டாம். நாம் அப்புறம் பேசிக் கொள்ளலாம். நீங்கள் இப்பொழுதே புறப்பட்டு வேகமாகப் போய்ப் பார்த்து விட்டு வாருங்கள்'' என்றாள்.

அவளுடைய பதற்றத்தையும் திகிலையும் பார்த்த பூதுகன் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டான். ''எது நடந்தாலும் விடிந்தால் தெரிந்து விடும். உன் மாலவல்லிக்கு எவ்வித ஆபத்தும் ஏற்பட்டு விடும் என்று நான் நினைக்கவில்லை. உன்னைப் போல் அல்ல அவள். எத்தகைய ஆபத்து ஏற்பட்டாலும் அதிலிருந்து தப்பித்துக் கொள்ளும் சாமர்த்தியம் அவளிடம் இருக்கிறது என்று தான் நான் கருதுகிறேன். வைகைமாலா! நெடு நாட்களுக்குப் பின் இங்கு வந்த என்னை இப்படி நீ விரட்டி அடிக்காதே. இந்த வைகாசி மாதத்துப் பூர்வபக்ஷத்துச் சந்திரன் நமக்கு இன்பம்அளிப்பதற்காக வானில் வந்து காத்து நிற்கிறான். இந்த உன்னத மாளிகையின் மேன் மாடத்தில் உல்லாசக் கூடம் நம்முடைய வரவை எதிர்நோக்கி அந்த நிலவொளியில் அமிழ்ந்து கிடக்கிறது. நமக்காக மலர் மணத்தை வாரி வரும் தென்றல் காற்று அடிக்கடி மேன் மாடத்தில் வந்து பார்த்து நாம் இல்லாதிருப்பதைக் கண்டு ஏமாற்றமடைந்து விடுகிறது. உன் மனோதர்மத்தை அறியாத உன் இளமை எழில் வாழ்வில் ஒவ்வொரு நாளிலும் வாட்டம் அடைந்து கொண்டே வருகிறது. அடங்காத ஆசை அலைமோதும் என் உள்ளம் அவ்வாசையிலேயே கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து கொண்டே போகிறது. இரவும், நிலவும், இளங்காற்றும், எழில் மணமும் இளமையின் துடிப்பும் எல்லாம் வீணாகும்படி வாழ்வதுதானா வாழ்க்கை? இத்தனை இன்பங்களும் காத்திருக்க இன்று கிடைத்தபொழுதை வீணாக்கினால் நாளை எப்படியோ? வைகைமாலா! வாழ்க்கையில் இன்பம் அனுபவிக்க வேண்டிய காலங்களைத் தவற விடுவது போன்ற பெரு நஷ்டம் வேறு எதிலும் இல்லை. இந்த இளமைப் பருவத்தில் எழும் உணர்ச்சி முதுமைப் பருவத்தில் திரும்பி வருவதில்லை. இப்பொழுது நாம் அனுபவிக்கும் இன்பமோ, அனுபவிக்க வேண்டிய இன்பமோ முதுமைப் பருவத்தில் நமக்குக் கிட்டுவதில்லை. இன்று அனுபவிக்க வேண்டியதை எதற்காகவோ நாளைக்கு ஆகட்டும் என்று விட்டுவிட்டால் அதை வாழ்வின் நஷ்டக்கணக்கிலே தான் எழுத வேண்டும்'' என்றான்.

வைகைமாலை சிறிது கோபமும் பரிவும் நிறைந்த குரலில் பேசினான்: ''வாழ்க்கையில் ஒவ்வொரு செயலையும் லாப நஷ்டக் கணக்கில் வைத்துப் பேசும் ஒரு கொள்கைதான் எனக்கு விநோதமாய் இருக்கிறது. வாழ்வில் லாபம் என்று கருதுவதெல்லாம் வெறும் மாயை. நஷ்டம் என்று கருதுவதும் அப்படியே. உங்களைப் போன்ற இன்ப வேட்கையில் ஈடுபட்டவர்களுக்குச் சிற்றின்பத்தை அனுபவிப்பது ஒரு லாபம். அதைப்போல் துறவு வாழ்க்கையில் ஈடுபட்டவர்களுக்குப் பேரின்பத்தை அனுபவிப்பது ஒரு லாபம். இப்படித்தான் ஒவ்வொருவருக்கும். நீங்கள் இன்ப சுக போகங்களை விட்டுத் துறவு பூணுவதில் வாழ்க்கையில் நஷ்டம் என்கிறீர்கள். துறவு வேட்கையில் நாட்டங் கொண்டவர்கள் இன்ப வேட்கையில் நாட்டம் செலுத்திய ஒவ்வொரு நாளும் வாழ்க்கையில் நஷ்டம் என்று கருதுகிறார்கள். நான் சொல்லுகிறேன்-வாழ்க்கையின் அனுபவங்களை லாப நஷ்டங்களாகக் கருதினாலும் இன்று நஷ்டமாகக் கருதுபவற்றை நாளை அனுபவிக்கப் போகும் பெரும் லாபத்தை உத்தேசித்துத்தான் நஷ்டமடைந்தோம் என்று கருத வேண்டும். இப்படி உங்களோடு பேசிக் கொண்டே போனால் பேச்சு வளரும். நீங்கள் என் வார்த்தையைக் கேட்க மாட்டீர்களா? உங்களுக்கு அடிமைப்பட்டவன் நான். நம்முடைய சுகத்தையே நாம் பெரிதாகக் கருதக் கூடாது. மாலவல்லியின் நிலை எப்படியோ? அதை நான் அறிந்து கொள்ளும் வரையில் என் மனம் நிம்மதி அடையாது. உங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன். நீங்கள் உடனே போங்கள். நான், இந்த இரவு—அதைச் சோபிக்க வைக்கும் நிலவு—இந்த நிலவொளியில் தவழ்ந்து வரும் காற்று — இவைகளில் அமிழ்ந்திருக்கும் உல்லாசக்கூடம்—மனத்துடிப்பு எல்லாம் அப்படியே இருக்கும். இன்று இல்லாவிட்டால் நாளை திரும்பி வரும். ஆனால் இன்று நாம் செய்ய வேண்டிய கடமைகளில் சிறிது தவறி விட்டோமேயானால் இதனால் ஏற்படப் போகும் இடையூறுகளுக்காக நாம் பின்னால் வருந்தும்படி நேரிடலாம். நீங்கள் இப்பொழுதே போங்கள். மாலவல்லியின் கதி என்ன ஆகுமோ?'' என்று துடித்தான்.

பூதுகன் அதற்கு மேலும் அவ்விடம் நின்றால் வைகைமாலையின் கோபமும், வருத்தமும் அதிகமாகும் என்பதை உணர்ந்து அவள் வார்த்தைக்கு இணங்கிப் புறப்படத் தீர்மானித்தான். ''சரி, நான் போகிறேன். இரவு எந்நேரத்தில் வேண்டுமானாலும் வந்து கதவைத் தட்டுவேன். திறக்கத் தயாராயிரு'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான்.

அவன் பட்டினப்பாக்கம் மருவூர்ப்பாக்கம் இவைகளைத் தாண்டி, மிகவும் வேகமாக நடந்து கடற்கரையை அடைந்தான். அவன் கடற்கரையோரமாக நடந்து சம்பாதிவன விஹாரத்தை நோக்கிச் சென்றபோது கடற்கரையில் கலங்கரை விளக்கத்துக்குச் சமீபமாக இரண்டு உருவங்கள் ஒன்றையொன்று ஒட்டினாற் போல் நடந்து செல்வதைக் கண்டான். சட்டென்று அவனுடைய வேகத்தில் தளர்ச்சி ஏற்பட்டது. அவன் இருந்த இடத்துக்கும் அந்த உருவங்கள் இருந்த இடத்துக்கும் சுமார் நூறு கஜ தூரமாவது இருக்கும். அந்த உருவங்கள் அவன் கண்களுக்குச் சரியாகத் தெரியவில்லையாயினும் அவை ஒரு ஆணும் பெண்ணும்தான் என்பதை அவனால் எளிதில் உணர்ந்து கொள்ள முடிந்தது.

அந்தச் சமயத்தில் அவர்கள் இருவரும் யாரோ இளங் காதலர்களாக இருக்கக் கூடும் என்று எண்ணி அலட்சியமாக விட்டு விட்டுச் செல்ல அவனுக்கு மனம் இல்லை. அவன் மனத்தில் ஏதேதோ எண்ணங்கள் எழுந்தாடின. ஒரு வேளை அவள் மாலவல்லியாக இருக்குமோ என்ற சந்தேகம்தான் அவனுடைய குழப்பத்திடையே முன்னணியில் வந்து நின்றது. இந்தச் சந்தேகம் அவன் மனத்தில் வலுக்கவே அதைக் கண்டறிந்து விட நினைத்தான். சம்பாதிவனத்தை நோக்கி நடந்து கொண்டிருந்த அவனுடைய கால்கள் சட்டென்று கலங்கரை விளக்கத்தை நோக்கி அதிவேகமாக நடக்கத் தொடங்கின. இளம் காதலர்கள் தன்னுடைய வரவைப் பற்றி என்ன நினைப்பார்களோ என்ற எண்ணம் அவன் மனத்தில் அப்பொழுது ஏற்படவில்லை. அவர்களைப் போலத் தானும் கடற்கரைக்கு உலாவ வந்தது போல அப்படியே அந்த வழியாகச் சென்று அவர்கள் யாரென்று பார்ப்பதில் பிசகில்லையல்லவா?

அவன் கலங்கரை விளக்கத்தை நெருங்கிய போது அவர்கள் அந்த ஸ்தூபிக்குச் சிறிது தூரத்துக்கு அப்பால் அமர்ந்து ஏதோ உல்லாசமாகப் பேசிக் கொண்டிருந்தனர். அந்த இடத்துக்கு வந்ததும் அவனுடைய சந்தேகம் தெளிவாகியது. அவன் நினைத்தபடியே அவள் மாலவல்லிதான். ஆனால் அவன்?... அவனைப் பூதுகன் இதுவரை பார்த்ததில்லை. அதோடு மட்டுமல்ல. இவ்வளவு அழகான வாலிபனை அவன் இதுவரை எங்கும் பார்த்ததேயில்லை. (தொடரும்)

---



# ஷண்முகானந்த சபையின் கலைவிழா





நாட்டில் எந்தத் தொகுதியில் எந்தக் கட்சி அபேட்சகர் நின்று ஜயித்தாலும் சரி, தோற்றாலும் சரி, கலைத் தொகுதிகளில் மட்டும் பாரத தேசத்தின் லலித கலைகள் பரவும் பிரமாத வெற்றியைப் பெற்று வருகின்றன. தமிழர்கள் எங்கெல்லாம் இருக்கிறார்களோ, அங்கெல்லாம் அவர்கள் லலிதகலை வளர்ச்சியின் அபிவிருத்தியில் பங்கெடுத்துக் கொள்ளாமல் இருப்பதில்லை. வறண்ட பிரதேசங்களை வளங்கொழிக்கும் பூமியாகவும், கடல் கடந்த பிரதேசங்களைக் கலை வளரும் பண்ணையாகவும் மாற்றும் சக்தி வாய்ந்தவர்கள் தமிழ் மக்கள்.

பம்பாய் மாதுங்கா என்ற பகுதியில் ஏராளமான தென்னிந்தியர்கள் குடியேறி இருக்கிறார்கள். அதில் மிகப் பெரும்பாலோர் தமிழ் மக்கள். அவர்கள் அங்கு தமிழையும், சங்கீதக் கலையையும் வளர்ப்பதற்குப் பல சங்கங்கள் நிறுவி, பாடுபட்டு வருகிறார்கள். அதில் சங்கீதக் கலையைக் கடந்த பல ஆண்டுகளாக மிகச் சிறந்த முறையில் வளர்த்து வரும் சபை ஷண்முகானந்த சபை.

ஜனவரி 4-ல இந்தச் சபையின் சங்கீத, நடன, நாடக விழா 'ஜாம் ஜாம்' என்று ஆரம்பமாகி இருபத்தொரு நாட்கள் ரஸிகப் பெருமக்களின் பேராதரவுடன் பிரமாதமாக நடைபெற்றது.

மேற்படி மகத்தான விழாவின் கலை நிகழ்ச்சிகளையெல்லாம் இந்தப் பக்கத்திலிருக்கும் படங்களில் காணலாம்.

1. ஆலத்தூர் சகோதரர்கள் பாடுகின்றனர். 2. ஆந்திர ராஜ்யமந்திரி ஸ்ரீ கோபால ரெட்டி சங்கீத விழாவை ஆரம்பித்து வைக்கிறார். 3. கமலா லக்ஷ்மண் நடனம் ஆடுகிறார். 4. ஷண்முகானந்த சபையின் மாணவிகளின் இசை நிகழ்ச்சி 5. கானசரஸ்வதி டி. கே. பட்டம்மாளின் கச்சேரி நடக்கிறது. 6. செம்மங்குடி சீனிவாசய்யர் பாடுகிறார். 7. பம்பாய் கவர்னர் ஸ்ரீ பிரகாசா நாடக விழாவைத் துவக்கி வைத்துப் பேசுகிறார். 8. எம். எல். வசந்த குமாரி பாடுகிறார். 9. காருகுறிச்சி அருணாசலம் நாகஸ்வர இசை பொழிகிறார். 10. டி. கே. எஸ். சகோதரர்களின் ஔவையார் நாடகம் நடக்கிறது. 11. அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் கச்சேரி. 12. மதுரை மணிஐயர் பாட்டு 13. விழாவுக்கு வந்திருந்த ரஸிகப் பெருமக்களின் கூட்டத்தில் ஒரு பகுதி. 14. எம்பார் விஜயராகவாச்சாரியாரின் காலட்சேபம். ***

தேவியின் கடிதம்

# படித்த பெண்

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சுஜாதா,

பெண் கல்வியைப் பற்றி நீ எழுதும்படி அடிக்கடி கேட்கிறாய். என் 'அபிப்பிராயம் உனக்கு ஏற்குமென நம்புகிறேன்.

'அடுப்பு ஊதும் பெண்களுக்குப் படிப்பு எதற்கு?' என்ற கேள்வி மறைந்து விட்டது. பாரதியார் கண்ட புதுமைப் பெண்களைத் தான் இன்றைய உலகம் விரும்புகிறது. நாட்டில் பெண்கள் மிகுதியாக இருக்கிறார்கள். மற்ற நாடுகள் எவ்வளவோ துறைகளில் முன்னேறி வருகின்றன. அவைகளில் நமக்குப் பொருந்தாத கொள்கைகளை விட்டு விடுவோம். ஆனால் மேல் நாடுகளில் போற்றப்படும் பெண்கல்வியை நாம் விரும்பி ஏற்க வேண்டியதுதான்.

படிப்பும் காலதேச வர்த்தமானத்துக்கு ஏற்ப மாறும் தன்மை உடையது. ஆனால் நம் நாட்டில் தர்க்கம், வியாகரணம் படித்த பெண் மேதைகள் இருந்திருக்கிறார்கள். நாட்டை ஆளும் பொறுப்பை ஏற்ற அரசிகள் எத்தனையோ பேர்கள் மிகப் படித்தவர்களாக இருந்திருக்கிறார்கள். சகலகலா வல்லியான பெண்களும் நம் நாட்டில் இருந்திருக்கிறார்கள்.

'இன்று பெண்களுக்குச் சாதாரண கல்வி போதுமானதா? அல்லது விசேஷக் கல்வி அறிவு தேவையா?' என்பதுதான் பிரச்னை.

கொஞ்ச காலத்துக்கு முன் படித்த பெண்கள் கர்விகளாக நடந்து கொண்டார்கள். பெரியவர்களுக்கு மரியாதை செய்யாமல் இருந்தார்கள். அதனால் சில பெரியவர்கள் படித்த பெண்களை விரும்பாமலும் இருந்தார்கள். பெண்களுக்குக் கல்வி அறிவு கூடாது என்றும் அது அவர்களுடைய பெண்மையைக் குறைத்து விடுகிறதென்றும் கருதினார்கள்.



ஆனால் இன்று அந்த விருப்பத்தின் நிலை மாறி விட்டது. படித்த பெண்கள் படிக்காத பெண்களை விட நன்றாகப் பண்பாட்டுடன் நடந்து கொள்ளுகிறார்கள்; அன்பாகவும், மரியாதையாகவும் பழகுகிறார்கள். கல்வியறிவைப் பெறுவது என்றால் வெறும் ஏட்டுக் கல்வியை மட்டும் அது குறிப்பதல்ல. கற்ற கல்விக்கு ஏற்ற அடக்கம் முக்கியம். வித்தையின் பயனே விநயத்தில்தான் அடங்கியிருக்கிறது.

நான் அநேகம் படித்த பெண்களுடன் பழகி அவர்களுடைய குண விசித்திரங்களைக் கவனித்து வருகிறேன். நன்றாகப் படித்துப் பட்டம் பெற்ற ஒரு பெண்ணுடன் தினம் பழகும் ஒரு வாய்ப்பும் எனக்குக் கிடைத்திருக்கிறது. இந்தப் பெண்ணின் எளிமையான வழக்கங்களும் குடும்பத்துடன் ஒன்றிப் போகும் மனப்பான்மையும் பாராட்டத் தக்கவை. அந்தப் பெண்ணிடம் எனக்குத் தனிப்பட்ட மதிப்பு ஏற்பட்டு விட்டது.

முன் காலத்தைப் போல் நாம் கிராமங்களில் வாழவில்லை. புருஷனுடைய உத்தியோகம் உலகத்தின் மறுகோடியில் கூட இருக்கிறது. அங்கெல்லாம் குடும்பம் நடத்த வேண்டியிருக்கிறது. அப்போது படித்த பெண்கள் சுலபமாக வாழ்க்கை நடத்துகிறார்கள். நன்றாகப் படிக்காத பெண்கள் கஷ்டப்படுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. அவர்கள் தங்களுடைய சொந்த வேலைகளைக் கவனித்துக் கொள்ள மற்றவர்களுடைய தயவைத் தேட நேர்ந்து அவதிப்படுவார்கள்.

''படித்துவிட்டு என்ன செய்யப்போகிறாள்? அவளும் குடும்பம் நடத்தித் தாய்மையைத் தானே அடையப் போகிறாள்'' என்று சிலர் சொல்வதைக் கேட்கிறோம். படித்த பெண்ணாயிருந்தால், அவள் குடும்பம் நடத்துவதற்கு இன்னும் பொருத்தமான பெண் என்றுதான் கருத வேண்டும்.

பெண்கள் தங்களை உயர்த்திக் கொள்ளுவதற்காகத்தான் படிப்பு என்று கருதினால் போதும். அந்தப் படிப்பு அகம்பாவம் கொள்வதற்காகவோ, பிறரை அலட்சியம் செய்வதற்காகவோ இல்லை. இதை அநேகம் பெண்கள் உணர்ந்து விட்டார்கள். மிகச் சில படித்த பெண்கள் கர்வமாக இருந்தால் அதுவும் காலக்கிரமத்தில் மாறி விடும்.

சமூகத்தில் பத்து வருஷங்களிலே நகரங்களில் வேகமான மாறுதல் ஏற்பட்டுள்ளது. பெண்கள் பெரும் பாலும் கல்லூரியில் படிக்கிறார்கள். ஆனால் பெண்களைத் தனிக் கல்லூரியில் சேர்ப்பது தான் சிறந்தது. *கூட்டு முறைக் கல்வியைத் தவிர்க்கலாம்.

கல்லூரிப் படிப்புக்கு வசதி இல்லா விட்டால் வீட்டிலேயே அறிவை விருத்தி செய்து கொள்ளலாம். ''கற்றது கைம்மண் அளவு கல்லாதது உலகளவு'' அல்லவா?

அவ்வையார் பிறந்தநாடு தமிழ்நாடு. அவ்வையின் கல்வியறிவு எவ்வளவு உயர்வானது. எப்படிப்பட்ட புலவர்கள் எல்லாம் அவ்வையின் அறிவாற்றலுக்குத் தலை வணங்கியிருக்கிறார்கள். இப்படித் தமிழ் நாட்டில் எத்தனையோ படித்த மாதரசிகள் இருந்திருக்கிறார்கள். அந்த நிலையை இன்றையப் பெண் குலம் அடைய வேண்டுமல்லவா? இப்படிக்கு, பூமாதேவி



# மிகச் சிறந்த முறையில் விமானப் பிரயாணம்

நீங்கள் பி.ஓ.ஏ.ஸி. விமானம் மூலம் மிகச்சிறந்த முறையில் பிரயாணம் செய்யுங்கள். உலகத்திலுள்ள சகல விமான மார்க்கங்களிலும் பறந்து சென்று 37 வருஷ அனுபவம் பெற்றது எங்கள் சர்வீஸ். மற்றும், பிரயாணிகளின் நலனைப் பேணுதல், விமானம் ஓட்டுதல் சர்வீஸ் நடத்தும் திறமை, கண்யமான நடத்தை, சேவை இவைகளில் 37 வருஷ அனுபவம் வாய்ந்தது பி.ஓ.ஏ.ஸி.

உங்கள் உள்ளூர் டிராவல் ஏஜெண்டையோ அல்லது பம்பாய், கல்கத்தா, டில்லி, மதராஸிலுள்ள பி.ஓ.ஏ.ஸி. ஆபிஸையோ கலந்துக்கொள்ளுங்கள்.

**பி.ஓ.ஏ.ஸி. உங்கள் நலனைக்கருதி சேவை புரிகிறது**

# FLY B·O·A·C

**பி.ஓ.ஏ.ஸி. விமானம் மூலம் பறந்து செல்லுங்கள்**

**பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேஸ் கார்ப்பரேஷன்**

# ரதிக்கேற்ற மன்மதன்

ராஜ்

பழனி வேலாயுதத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமானால் பழனி மலைக்கே நாம் போக வேண்டும். அங்கு அப்பன் பழனி ஆண்டியைத் தரிசிக்கப் போகுமுன் கொடி மரத்தின் மேல் உயிருடன் உட்கார்ந்து கொண்டிருக்கும் சேவலைப் பார்க்காமல் இருக்க முடியாது. அந்தச் சேவலுக்கும் வேலாயுதத்துக்கும் சம்பந்தம் உண்டு என்று பலர் பேசிக் கொள்கிறார்கள். அதற்குக் காரணமும் கூறுகிறார்கள்.

பழனியில் வேலாயுதத்தின் கோழிப் பண்ணையைப் பற்றித் தெரிந்தவர்கள் தான் வேலாயுதத்துக்கும் அந்தக் கொடி மரச் சேவலுக்குமுள்ள சம்பந்தத்தைச் சொல்லுவார்கள். வேலாயுதத்தின் கோழிப்பண்ணை மிகப் பிரசித்தமானது; அதுவே அவனுக்கு ஜீவநாடி. அங்கு கிடைக்கும் முட்டைகள் அனந்தம். அவ்வளவு வெள்ளை முட்டைகளும், வெள்ளி ரூபாய்களாக மாறி வேலாயுதத்தின் இரும்புப் பெட்டியில் தஞ்சமடையும். வேலாயுதத்துக்கு உலகில் உள்ள உறவினர்கள் பண்ணையிலுள்ள கோழிகள்தான்.

அவன் தனிக் கட்டை. கட்டுமஸ்தான தேகம்; இடுப்பில் நாலு முழம் வேட்டி; மேலே நாலு முழம் துண்டு; சுருண்ட மயிர்; அடர்ந்த கிராப்புத் தலை; அவன் அழகு கண்டவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்.

பண்ணைக்குப் பக்கத்தில் ஒரு காணி நிலத்தில் கோழிகளுக்கு வேண்டிய தானியங்கள் பயிராகி வந்தன. தவிர, நன்செயில் விளையும் நெல்லைப் பிரித்து வைக்கோலைப் போர் கட்டி, பண்ணைக் கூடத்தில் போட்டிருப்பார்கள். வேலாயுதத்துக்குப் பிடித்த பொழுதுபோக்கு வைக்கோல் போரில் உட்கார்ந்து கோழிமுட்டைகளை ஒரு துண்டால் துடைத்துத் துடைத்துக் கூடையில் வைப்பதுதான்.

ஒருநாள் வேலாயுதம் வைக்கோல் போரில் உட்கார்ந்துகொண்டு ஒன்று, இரண்டு என்று பத்து முட்டைகளை எண்ணிக் கூடையில் வைத்து விட்டுத் திரும்பினான். மெதுவாக அவனருகில் ஒரு கை தோன்றியது. இரண்டு முட்டைகள் மேல் கையை வைத்தது. இதைக் கண்ட வேலாயுதம் 'லபக்' என்று கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். வாழைத் தண்டுபோல் தளதள வென்ற கை. கூர்ந்து கவனித்தால் இரண்டு கறுப்பு வளையல்கள் வேறு அதில் பிரகாசமாக விளங்கின. கொஞ்சம் பலத்துடன் அந்தக் கையைப் பிடித்து இழுத்தான். அவன் முன்னால் வந்த உருவம் ஒரு பெண். பெண் என்றால் வெறும் சாதாரணப் பெண்ணல்ல. பயம் குடி கொண்ட அந்த முகத்தில் என்ன அழகு! அந்த உடல் வனப்புத்தான் எப்படி இருந்தது!

"திருடி" என்றான் வேலாயுதம்.

"நான் திருடி இல்லை" என்றாள் பயத்துடன் அந்தப் பெண்.

"திருடி இல்லையா? அப்படியானால் ஏன் முட்டையை எடுத்தாய்?"

"அது என்னுடையதுங்க!"

"உன்னுடையதா? பொய் சொல்லாதே! என் கண் முன்னே கையும் களவுமாகப் பிடிச்சிருக்கேன்!"

"இல்லீங்க, என் கோழி இட்ட முட்டைங்க!"

"பலே! உன் கோழி இங்கே வந்து முட்டையிட்டதா?"

"ஆமாங்க. என் கோழி இங்கே இருக்குங்க!"

"என்ன பொய்? உன் கோழி இங்கே எங்கே இருக்குது?"

"கோவிச்சுக்காதீங்க. என்னிடம் ஒரு பெட்டைகோழி மட்டும் இருந்ததுங்க. உங்க பண்ணையிலே கொண்டு விட்டு இருக்கேன்!"

"ஏன் இங்கே கொண்டு விட்டே?"

"சொல்ல வெட்கமா இருக்குங்க!"

"வெட்கமென்ன? முட்டை திருட வெட்கமில்லை?"

"என் கையை முதலில் விட்டுடுங்க. பிறகு சொல்றேன்."

"விட்டால் ஓடிப்போய்விடுவாய்!"

"சத்தியமா ஓட மாட்டேன். இங்கே உங்க பண்ணையிலே நல்ல சேவலுங்க இருக்குது இல்லே..?" என்று 'களுக்' கென்று சிரித்து விட்டு ஓடினவளை,



சடக்கென்று கையைப்பிடித்துக்கொண்டான் வேலாயுதம்.

"சரி, நிசமாக உன் பெட்டைக் கோழி என் பண்ணையில் இருந்தால் காண்பிப்பாயா?" என்று கேட்டான்.

"கட்டாயம் காண்பிப்பேன். அதற்கு அடையாளம் உண்டுங்க" என்று அவனுடன் கோழிகள் இருந்த இடத்தை நோக்கிச் சென்றுள் அந்தப் பெண். கோழிகளைத் தள்ளிக் கொண்டே ஒரு கோழியை எடுத்து வந்தாள். "இது என் பெட்டைங்க. இது நடந்தால் தெரியும்" என்று கீழே விட்டாள். அது ஓடியதும் 'கல் கல்' என்ற சத்தம் கேட்டது. காலில் சிறு சிறு பித்தளை வளையங்கள் மாட்டி இருந்ததால் அது ஓடும்போது ஒரு இனிய சத்தம் கேட்டது. இதைக் கண்ட வேலாயுதத்துக்குச் சிரிப்பு தாங்கவில்லை.

"பெண்ணே! உன்னை மன்னிச்சுட்டேன். நீ யார்? எங்கே இருக்கே? எல்லாம் எனக்குச் சொல்லணும். வா, வைக்கோல் போருக்குப் போகலாம்" என்று கூறி அவளுடன் போனன்.

"எங்க வீடு உங்க வயல் வரப்புக்களுக்கு மேலண்டைக் குடிசை. எனக்கு ஒரு பாட்டியிருக்காங்க. அவள் கூட இருக்கேன். எங்க ஊர் ஒட்டன் சத்திரம்."

"என்ன, ஒட்டன் சத்திரமா!" என்று திகைப்புடன் கேட்டான் வேலாயுதம்.

"ஏன், அந்த ஊர் உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டாள்.

"இல்லை, மேலே சொல்லு!"

"எனக்கு அப்பா இல்லை. அம்மா இல்லை. அதனுலேதான் என் பாட்டி என்னை என் மாமனுக்குக் கட்டிக் கொடுத்து........."

"பின்னே நீ கல்யாணமானவளா?"

"இல்லீங்க. கட்டிக் கொடுக்கணும்னு சொல்லுது. ஆனல்....என் மாமனுக்கு வயது நாற்பத்தைந்து தான் ஆகுது. பதினைந்து வயசுப் பெண்ணுக்கு அவருதான் நல்ல புருசராம். பாட்டி தான் சொல்லுது. அவருக்குக் குழந்தைகளில்லையாம். மூத்த தாரம் செத்து விட்டதாம்" என்று அடுக்கினுள் அவள்.

"ரொம்ப சரி. உன் பெயரென்ன?"

"என் பெயர் ரதி. எங்க ஊரிலே காமன் பூசை நடக்கும்போது எங்கம்மா வயிற்றிலே நானிருந்தேனும். எங்கப்பா பிள்ளை பிறந்தால் மன்மதன் என்று பெயர் வைக்கணும்னு சொன்னுங்களாம். ஆனல்



நான் பெண்ணாய்ப் பிறந்துவிட்டேன். என்ன செய்யலாம்! என் தலைவிதி.''

''தலைவிதின்னு ஏன் சொல்லறே? உனக்கென்ன? ரதி நீ. மன்மதன்போலப் புருசனைக் கட்டிக்கப்போறே. உனக்கு என்ன குறைச்சல் ரதி?'' என்று வேலாயுதம் கூறியதும் அப்பெண் தலை குனிந்தாள். தரையில் சொட்டுச் சொட்டாக நீர் விழுந்ததும் துணுக்குற்ற வேலாயுதம், ''ரதி! இது என்ன. ஏன் அழறே? இங்கே வா, அழாதே'' என்று ஆதரவோடு கூறினான்.

''இல்லை, அழவில்லை. நான் பிறந்தே இருக்க வேண்டாம்.''

''அப்படியெல்லாம் பேசாதே. நீ பிறந்தது தப்பில்லை. கவலைப்படாதே!''

''நிசமாகத்தானா? நான் கவலைப்பட வேண்டாமே?''

''ஆமாம். உன்னைக் காணாமல் பாட்டி கவலைப்படப் போவுது. வீட்டுக்குப் போ. ரதி, இந்தா, முட்டைகள் இரண்டல்ல; ஆறு எடுத்துக்கொண்டு போ.''

''சரி, போகிறேன்.''

''ஓடு, பார்க்கலாம்'' என்றான் வேலாயுதம். அவள் தலைப்பின்னல் ஆட ஓடிய ஓட்டம் அவன் இதயத்திலே ஆழப் பதிந்து விட்டது.

அதுமுதல் வேலாயுதத்தின் கோழிப் பண்ணையில் வைக்கோல் போரின்மேல் வளர்ந்தது இரு உள்ளங்களின் தூய காதல். ஒரு நாள் இருவரும் பேசிக் கொண்டிருக்கையில், ''ரதி, உன் மாமன் பெயர் என்ன?'' என்று கேட்டான் வேலாயுதம்.

''மதுரைப் பிள்ளை'' என்று பதில் வந்தது. ''மதுரைப்பிள்ளை'' ''மதுரைப் பிள்ளை'' என்று அவன் மனத்தில் பல தடவைகள் உச்சரித்துக் கொண்டான்.



# நிம்மதியான பிரயாணத்திற்கேற்ற டயர்

இப்பொழுது நவீன பாதுகாப்பு வசதிகளுடன் கூடிய—புதிய டிலக்ஸ் சாம்பியன் டியூப்லெஸ் டயரை பயர்ஸ்டோன் ஸ்தாபனம் அளிக்கிறது. எவ்விலையிலும் எந்த டயரும் இதற்குமுன் அளிக்காத பாதுகாப்பை உங்களுக்கும் உங்கள் குடும்பத்திற்கும் கொடுக்கிறது. முழு மன அமைதியுடன் பிரயாணம் செய்ய முதன் முறையாகத் தயாரிக்கப்பட்ட டயர் இது ஒன்றே.



**வெடித்து விடாத பாதுகாப்பு**

அபாயகரமாக வெடித்து விடுமோ என இனிமேல் அஞ்ச வேண்டாம். இந்த டயரில் காற்று புகாதபடி ஒரு பாதுகாப்பு உள்உறை பொருத்தப்பட்டிருக்கிறது. வெடிக்கவோ, கிழிக்கவோ, தேய்ந்து போகவோ எதுவுமில்லை.



**துவாரமிட இயலாத பாதுகாப்பு**

புதிய டிலக்ஸ் சாம்பியன் டயரின் பாதுகாப்பு உள் உறை, துவாரமிடும் பொருள்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, காற்று விரைவில் போகாதபடி தடுக்கிறது. போக்குவரத்து அதிகம் உள்ள ரஸ்தாக்களில் டயர்களை மாற்ற வேண்டுமே எனக் கவலைப்பட வேண்டியதில்லை.



**அதிக கூடுதலான மைல்கள்**

புதிய டிலக்ஸ சாம்பியன் டயர் அதிக மைல்கள் ஓடுகின்றன. மேல் பாகம் கெட்டியாக இருப்பதாலும், அதன் தட்டையான டிரெட்கள் சமமாக தேய்வதாலும் அதிக நாள் நீடித்து நன்கு உழைக்கிறது.

**Firestone**

புதிய டிலெக்ஸ் சாம்பியன்
**டியூப்லெஸ் டயர்**

"ஏன் அவரை உங்களுக்குத் தெரியுமா?" என்று வியப்புடன் கேட்டாள்.

"தெரியுமாவா? எப்படித் தெரியும்? உலகத்தில் எத்தனையோ மதுரைப் பிள்ளைகள் இருக்கிறார்கள்" என்று கூறி அவன் ஆகாயத்தை நோக்கினான்.

இதற்குப் பிறகு ஒருநாள் அவசரம் அவசரமாக ரதி பண்ணைக்கு ஓடி வந்தாள். அவளுடைய மருண்ட பார்வையும், அவிழ்ந்த கூந்தலும் அவள் ஒரேயடியாகப் பயந்துவிட்டாள் என்பதை அறிவித்தன. "என்ன ரதி, ஏன் இப்படிப் பதற்றம்? என்ன விஷயம்?" என்று கேட்டான் வேலாயுதம்.

"அத்தான்!" என்று அவன் கையைப் பிடித்துக் கொண்டாள் ரதி.

"ஐயோ! அவரு வந்துட்டாரு. என்னை ஊருக்கு அழைத்துக் கொண்டு போகிறாராம். அதைக் கேட்டதும் நான் பதறிப் போய் ஓடி வந்து விட்டேன். என்னைக் காப்பாத்துங்க."

"ரதி! நீ இங்கே வந்தது அவருக்குத் தெரியுமா?" என்று கேட்டான் அவன்.

"நான் ஓடி வந்ததைப் பார்த்துவிட்டாரு. ஐயோ, அதோ பாருங்க" என்று வேலிக்கு வெளியே காண்பித்தாள். திரும்பியதும் அவளைக் காணோம். ஆனால் வைக்கோல் போர் கொஞ்சம் கலைந்திருந்தது. அந்தப் போருக்குள் அடைக்கலம் புகுந்தாள் ரதி. அவள் காண்பித்த திக்கை நோக்கினான் வேலாயுதம். கையில் ஒரு தடியுடன் ஒரு ஆசாமி ஓடிவந்தார். மறு கணம் வேலியை ஒரே தாண்டாகத் தாண்டி வேலாயுதத்துக்கு முன் வந்து நின்றார்.

"டேய், அந்தப் பெண் எங்கே இருக்கிறாள்? சொல்லு! இல்லாவிட்டால் இந்தத் தடி உன் தலையைப் பதம் பார்க்கும்!" என்று அவர் கத்தினார்.

அப்பொழுது இதைக்கேட்ட ரதி நடுங்கிட்டாள். அதனால் கொஞ்சம் வைக்கோல்போரில் சிறிது சலசலப்பு உண்டாகியது. "அப்படியா! இந்த வைக்கோல் போருக்குள் ஒளித்து வைத்திருக்கிறாயா? மதுரைப் பிள்ளையை என்னவென்று எண்ணி விட்டாய்?" என்று தடியைக் கீழே போட்டார். மடியைப் பிரித்து அதிலிருந்து சில பீடிகளைத் தள்ளிவிட்டு ஒரு நெருப்புப் பெட்டியைக் கையில் எடுத்தார். "வைக்கோல் போரில் புகுந்து கொண்டால் விட்டு விடுவேனா? போரோடு நெருப்பை வைச்சுடறேன்; ஒரேயடியாக ஒழிந்து போகட்டும்! எனக்குத் துரோகமா செய்கிறாய்?" என்று ஒரு குச்சியை எடுத்துப் பற்ற வைக்கப் போனார்.



கரூர். டி. ஆர். வைத்தியநாத ஐயரின் குமாரத்தி சௌ. சரோஜாவுக்கும், சென்னை, ஸ்டான்லி வைத்தியக் கல்லூரிப் பேராசிரியர் டாக்டர் ஏ. அனந்தநாராயண ஐயர் குமாரர் சிரஞ்சீவி ஏ. கிருஷ்ணாவுக்கும் 21-1-57 அன்று கரூரில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்கு உறவினர்களும் நண்பர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர்.

வாழ்க மணமக்கள்!

அப்பொழுது சடேரென்று நெருப்புப் பெட்டி மேலே பறந்தது. வேலாயுதம் கொடுத்த ஒரு அடி அந்த வேலை செய்தது. ஆனால் மதுரைப் பிள்ளை பயப்படவில்லை. "அயோக்கியப் பயலே!" என்று தடியை எடுத்து ஓங்கினார்.

"பிள்ளைவாள்! நிறுத்துங்கள். ஒரு விஷயம் சொல்கிறேன் கேளுங்க. அப்புறம் இரண்டு பேரும் ஒரு கை பார்க்கலாம். என் வைக்கோல் போருக்கும் நெருப்பு வைக்கலாம். சுமார் இருபத்தைந்து வருஷங்களுக்குமுன்னே ஒட்டன் சத்திரத்தில் சந்திரமதின்னு ஒரு பெண் மணி இருந்தாள், தெரியுமா? அந்தக் காலத்திலே அவள் புருசர் நன்றாகக் குடிப்பார். தன்னையே மறப்பார். வீட்டுக்கு வருவார், சந்திரமதியை உதைப்பார், அடிப்பார். மகராசி பொறுத்துப் பொறுத்து உயிர் வாழ்ந்தாள். ஆனால் அவள் கருத்தரித்தாள். தன் வயிற்றில் வளரும் ஒரு உயிருக்காக அவள் இந்த அடியும் உதையும் வாங்க மறுத்தாள். ஆனால் அவள் அருமைப் புருசருக்கு நெஞ்சில் ஈரம் இடையாது. ஒருநாள் நல்ல குடி போதையில் இருந்த அந்த மகராசர் அவளை அடிக்க ஆரம்பித்தபோது, அவள் ஓட ஆரம்பித்தாள், ஓடினாள், ஓடினாள். இவர் பிடிக்கு அகப்படக் கூடாது என்று அங்கு அருகே உள்ள வயலில் இருந்த ஒரு பெரிய வைக்கோல் போரை நோக்கி ஓடினாள். இதைக் கண்ட அந்த ராட்சத புருசர் சும்மா விட்டாரா?

போரை நோக்கி ஓடினார். வைக்கோல் போரில் தீ வைத்தார். வீடு திரும்பினார். ஆனால் மயக்கம் தெளிந்தது. பார்த்தார். எதிரே வயலில் ஒரு பெரிய பூதம் போல் நின்ற வைக்கோல் போர் நின்ற இடம் தரை மட்டமாகிக் கருகிக் கிடந்தது. அப்பொழுதுதான் அந்த மனுசருக்கு அவர் செய்த குற்றம் தெரிந்தது. மனைவி எரிந்து சாம்பலாகி விட்டாள் என்று எண்ணினார். ஊராருக்குத் தெரிந்தால் அவர் கதி என்ன ஆகும்! ஓட்டன் சத்திரத்தை விட்டு ஒருவரிடமும் சொல்லாமல் ஓட்டம் பிடித்தார். எங்கு போனாரோ?''

''தம்பி, நிறுத்து. ஏன் இந்தக் கதையெல்லாம் என்னிடம் சொல்கிறாய்?'' என்றார் மதுரைப்பிள்ளை உதடு துடிக்க.

''கேளுங்கள், ஐயா! ஏன் பதறுகிறீங்க? அவர் நினைத்தது போல் சந்திரமதி இறந்து போகவில்லை. ஒரு மிருகத்துடன் வாழ்வதைவிட ஓடிப் போய் எங்கேயாவது வயிறு வளர்த்துத் தன் வயிற்றிலுள்ள சிசுவைக் காப்பாற்ற எண்ணினாள். கண்ணீரும் கம்பலையுமாகப் பழனிக்கு முருகனிடம் வந்தாள். அந்தப் பழனியாண்டி அவளைக் காப்பாற்றி அவளுக்கு வாழ்வளித்தார். அவளும் ஒரு மகனைப் பெற்றெடுத்தாள். தாயும் மகனும் வாழ்ந்தார்கள். ஆனால் தாயார் திடீரென்று காலமானாள். மகன் உழைப்பினாலும், ஊக்கத்தினாலும் முன்னுக்கு வந்து ஒரு கோழிப்பண்ணைக்கு எசமானனான். என்ன ஐயா! ஏன் அழுகிறீங்க?'' என்றான் வேலாயுதம்.

''மகனே!'' என்று அவனை ஆவேசத்தோடு கட்டிக்கொண்டார் பிள்ளை.

''ரதி, ஓடி வா! கொஞ்சம் தண்ணீர் கொண்டா'' என்றான் வேலாயுதம். அவளும் ஓடி வந்தாள் தண்ணீருடன். அவருக்குக் கொஞ்சம் மயக்கம் தெளிந்ததும் கண் விழித்தார். ''ரதி! நான் பொல்லாதவனம்மா. இதோ, என் மகன் இவன்தான்'' என்றார்.

''மாமா! நான் அவர் சொன்னதெல்லாம் கேட்டுக்கிட்டுதான் இருந்தேன். என் மாமா பிள்ளைதானா இவரு?''

''ஆமாம், ரதி!'' என்று கூறி மகனைப் பார்த்து, ''தம்பி, உன் பெயரென்ன?'' என்று கேட்டார் மதுரைப் பிள்ளை.

''வேலாயுதம், அப்பா!''

''வேலு! ரதி உன் அத்தை பொண்ணு. அவள் குடிசையிலே உன் பாட்டி இருக்கிறாள்.''

''அப்படியா ரதி! நீ என் ரதிதானா?''

''ஆமாம், அத்தான்! நான் உங்க ரதி தான்!'' என்றாள் ரதி. இருவரும் மாமாவின் பக்கம் திரும்பினார்கள். ஆனால் மதுரைப் பிள்ளை கையில் தடியுடன் தாயாரைநோக்கி மெதுவாக நடந்தார்.

வைக்கோல் போரில் ஏறி உட்கார்ந்தான் வேலாயுதம். ''ஏய் ரதி! இங்கேவா முட்டைகளை எல்லாம் எண்ணி வீட்டில் கொண்டுபோய் வை.''

''எந்த வீட்டில் வைக்கணும்?''

''ஏன் நம்ம வீட்டில்தான்!''

''இல்லை, குடிசைக்குப் போகச் சொன்னீங்களோன்னு பார்த்தேன்.''

''ரதி, இனிமேல் அங்கு நீ போகக் கூடாது. அங்குள்ளவங்க இங்கே வந்து விடுவாங்க. சரி உன் நடனக் கோழியை எடுத்துக் கொண்டு வா'' என்றான். அவளும் அதைக் கொண்டு வந்தாள். 'கல் கல்' என்று அந்தக் கோழி நடந்தது நடனமாடுவது போலிருந்தது. இதைக் கண்ட வேலு சிரித்தான்.

''என்ன மச்சான் சிரிக்கிறீங்க?''

''ஒண்ணுமில்லை ரதி! இந்தப் பெட்டை ஆடுகிறது; நீ பாடேன்!''

''வேலவரே உம்மைத் தேடி ஒரு மடந்தை'' என்று பாட ஆரம்பித்தாள்.

''நிறுத்து! நீ பட்டிக்காட்டுப் பெண். உனக்கு இவ்வளவு எப்படிப் பாடத் தெரியும்?''

''என்ன சொன்னீங்க? பட்டிக் காட்டுப் பெண்ணா? சரி, நல்லாப் பாடவும் ஆடவும் தெரிஞ்ச பட்டணத்துப் பெண்ணைக் கண்ணாலம் கட்டிக்குங்க. நான் போறேன்!''

''ஏய் ரதி! இப்பொழுதே உனக்கு இவ்வளவு கோபம் வருகிறதே, கல்யாணம் செய்து கொண்ட பிறகு...'' என்று இழுத்தான். ரதி சிரித்தாள். சிறிதுநேரம் சென்றதும், ''ரதி, இந்தக் கோழிப்பண்ணைக் கோழிகள்தானே நம்மைச் சேர்த்து வைத்தன?'' என்று கேட்டான் வேலாயுதம்.

''இல்லை. பழனியாண்டி!''

''நான்மட்டும் என்ன சொன்னேன்?''

''நீங்கள் கோழி என்றீர்களே?''

''நம்ம பழனி ஆண்டவன் கொடியிலே இருப்பது என்னவாம்?''

''கோழி! சேவல்!''

''உனக்குப் புரிந்து விட்டதே. பழனி ஆண்டவனுக்குக் காணிக்கையாகப் பண்ணையிலிருந்து ஒரு அழகான சேவலைக் கோயிலுக்கு விடப் போகிறேன். நீ என்ன சொல்கிறாய்?''

''நீங்க சொல்லி விட்டால் வேண்டாம்னு சொல்வேனா?'' என்றாள் ரதி.

ரதியும் வேலாயுதமும் கோவிலுக்கு விட்ட சேவல்தான் இன்று கூடப் பழனிக் கோயில் கொடி மரத்தில் நிற்பதாக உலாவும் ஒரு வதந்தியை இப்பொழுது மறுக்கத் தோன்றுமா!

# வாழ்க்கையில் நீங்கள் பெறுவதென்ன?

## விளங்கும் வீரியமா








அல்லது



வாழ்க்கையின் சந்தோஷத்தை கவலை, தெம்பின்மை, சிரமம் முதலியன கெடுக்காமல் காத்துக்கொள்ளுங்கள். வாழ்க்கையில் உண்மை வெற்றி தெம்பினால்தான் ஏற்படும்—ஸனடோஜன் புதுபலம் அளித்து, உடல்வலிமை மனசக்தி அதிகரிக்கச் செய்கிறது. 25,000 த்துக்கு மேற்பட்ட வைத்தியர்கள் அதன் அபூர்வ சக்தியளிக்கும் குணத்திற்கு அத்தாட்சி அளிக்கிறார்கள்.



**ஸனடோஜன்**
-மிக்க உயர்ந்த பால் டானிக்



# அந்தரங்கக் காரியதரிசி

ஆசிரியர்: கே. எம். முன்ஷி
தமிழாக்கம்: ரா. வீ.



மேன்மை தங்கிய ஸர் மோகன்லால் அவர்கள் வியாபாரத் தலைநகரமான பம்பாயில் குறிப்பிடக்கூடிய மிகப் பெரும் புள்ளிகளில் முதன்மையானவர். அவருக்குச் சொந்தமாக எத்தனையோ பண்டகசாலைகள் இருந்தன. அவற்றுக்குக் கணக்கு வேண்டும் என்று விரும்பினால், தூக்க முடியாத கனமான அவரது சாவிக் கொத்தைத் தான் கேட்க வேண்டும்.

அவர் மாபெரும் கம்பெனி ஒன்றின் பூரண உரிமையாளர். ஆறு கம்பெனிகளுக்கு மானேஜிங் ஏஜண்ட். முப்பத்தாறு கம்பெனிகளுக்கு டைரக்டர். இன்னும் எத்தனை எத்தனையோ கம்பெனிகளுக்குப் பங்குதாரர். இவற்றுக்கெல்லாம் ஒரு புள்ளிவிவரம் தயாரிக்க வேண்டும் என்று வந்தால், பிறர் உதவியின்றி அவரால் தானாகத் தயாரிக்க முடியவே முடியாது.

எல்லாவற்றுக்கும் மேலாக, அவர் பொது நல வாழ்விலும் பெரும் அக்கறை கொண்டிருந்தார். ராஜாங்க சபையிலிருந்து நகர பரிபாலன சபை வரை அவர் அங்கம் வகிக்காத சபை கிடையாது; உற்சாகத்துடன் பங்கு எடுத்துக் கொள்ளாத கூட்டங்கள் கிடையாது. அரசாங்க ஆதரவுள்ள கமிட்டிகளும் சரி, அரசாங்க ஆதரவற்ற கழகங்களும் சரி, அவர் பெயரின்றிச் சோபித்ததில்லை; முன்னுக்கும் வந்ததில்லை. பிரஸிடென்ஸி அஸோஸியேஷன், ராடிகல் லீக், உலகச் சமாதானப் பிரியர் சங்கம், உலகப் போர் வெறியர் ஸ்தாபனம், சமூகச் சீர்திருத்தக் கழகம், வியாபார அபிவிருத்தி சங்கம், உள்நாட்டு வியாபாரிகள் சேம்பர், அயல்நாட்டு வியாபாரிகள் அஸோஸியேஷன், துணி, மணி, கரும்பு, வெல்ல சர்க்கரை கீரை, பருப்பு, கடலை முதலிய பொருள் விற்போர் பாதுகாப்புச் சங்கம், தக்ளி அபிவிருத்தி மன்றம், கைத்தறிக் கமிட்டி, மில் முதலாளிகள் க்ஷேம சங்கம், தொழிலாளர் அபிவிருத்திக் கழகம், ஒத்துழையாமைப்

போர் வீரர் படை. ஒத்துழைப்புப் போர் வீரர் படை — இவைபோன்ற இன்னும் எத்தனை எத்தனையோ ஸ்தாபனங்களுக்கு அவர் தலைவர், உபதலைவர், காரியதரிசி, உப காரியதரிசி, கூட்டுக் காரியதரிசி, துணைக் காரியதரிசி, பொக்கிஷதார், அங்கத்தினர், போஷகர், ஸ்தாபகர் என்று ஏதாவது ஒரு பதவி வகித்தார்.

அதோடு, தாம் எடுத்துக் கொண்ட பணியைக் குற்றங் குறையின்றித் திறம்பட நிர்வகிக்க வேண்டும் என்ற ஒரே நல்ல நோக்கத்துடன், அந்த அந்த விஷயங்களில் தேர்ச்சி அடைந்தவர்களாகத் தேர்ந்தெடுத்து ஒரு பெரும் பட்டாளத்துக்கே உத்தியோகம் போட்டுக் கொடுத்திருந்தார். அத்தனை பேருடைய அறிவையும் ஆற்றலையும் சாதுரியமாகப் பயன்படுத்திக் கசக்கிப் பிழிந்து வேலை வாங்குவதில் ஸர் மோகன்லாலுக்கு உள்ள திறமையை என்னவென்று புகழ்வது? அதன் பலனாக, அவரது பணமும் புகழும் காட்டாற்று வெள்ளமாகப் பெருகிக் கரை புரண்டு ஓடலாயின.



சில காலமாக ஸர் மோகன்லாலுக்கு ஒரு பெரும் குறை. விலைமதிக்க முடியாத அவரது பொழுது கால் காசுக்குப் பிரயோசனமில்லாத சின்னஞ் சிறு குடும்பக் காரியங்களில் வீணாகி வந்தது. அப்பப்பா! அதனால் எத்தனை காரியங்கள் ஈடேறாமலே போய் விட்டன! கணக்கில் அடங்காத கல்யாணம், கார்த்திகைகள், மாப்பிள்ளை அழைப்புகள், இறுதி யாத்திரைகள் ஆகியவை அவர் கலந்து கொள்ள இயலாமற் போனமையினால் சோபிக்காமல் போய் விட்டன. அதுமட்டுமா? உற்றார் — உறவினர்களின் துயரங்களைத் துடைத்தெறியும் பெருமையையும் அவர் அடைய முடியாமற்போய் விட்டது. எத்தனையோ தேவைப் பட்டவர்கள் அவரிடம் பொருளுதவி நாடி வருவார்கள். அவர்களுக்குப் பொருளுதவி செய்வது முன்னே, பின்னே இருந்தாலும், தமது பெருமை உயரக்கூடிய வகையில் ஆறுதல் அளித்து நாலு வார்த்தைகள் எழுதக்கூட அவருக்கு நேரம் இல்லை. அவர் சமீபத்தில் புது மணம் புரிந்து கொண்டிருந்த இளம் மனைவி உடல்நிலை-மனநிலை இரண்டும் சரியில்லாமல் பிரபல டாக்டர்களின் மேற்பார்வையில் டும்மஸ் என்னும் ஊரில் இருந்தாள். அவளது மன நிலையை ஒருநிலைப்படுத்தி வைப்பதற்கு இரண்டு மூன்று நாட்களுக்கு ஒரு தடவையாவது ஸர் மோகன்லால் உணர்ச்சி நிறைந்த கடிதங்கள் எழுதி வந்தால் நலமாயிருக்கும் என்று டாக்டர்கள் ஆலோசனை கூறியிருந்தார்கள். ஆனால் இக் காரியத்துக்குத்தான் எத்தனை இடையூறுகள்! இப்படிச் செய்ய முடியாமற் போகவே, தாம்பத்திய வாழ்க்கையின் உணர்ச்சி நிலைகளைப் பற்றி டாக்டர்களிடம் அவர் எவ்வளவோ பெரிய பெரிய பேச்சுக்களைக் கேட்கும்படியாகி விட்டது. அதில் தமது பொன்னான நேரத்தை அநாவசியமாக வீணாக்கும்படியும் ஆகி விட்டது!

இத்தகைய அவசியமான காரியங்களைக் காரியாலயத்துச் சம்பளம்பெறும் சிப்பந்திகள் சரிவரச் செய்வதில்லை. அதனால் அவரது செயலாற்றும் திறமையில் கறை படியும் போலிருந்தது. அதற்கு அவர் இடம் கொடுக்க விரும்பவில்லை. ஒருநாள் இதற்கு ஒரு முடிவு கண்டே தீருவது என்ற முடிவுக்கு வந்தார். அதிர்ஷ்டவசமாக அதற்கு ஒரு வழியும் தோன்றியது. மற்ற அலுவல்களைக் கவனிக்கத் தனித்தனி இலாக்காக்களும் காரியதரிசிகளும் ஏற்படுத்தியிருந்தது போலவே, குடும்ப சம்பந்தமான அலுவல்களைக் கவனித்துக் கொள்வதற்கும் ஒரு தனி இலாகா ஏற்படுத்தி அதற்கு ஒரு அந்தரங்கக் காரியதரிசியும் நியமித்து விடுவது என்று தீர்மானித்தார். அவரது அந்தத் தீர்மானம் உடனடியாகப் பிரபல பத்திரிகைகளில் விளம்பரமாக வெளி வந்தது.

குறிப்பிட்ட தினத்தன்று குறிப்பிட்ட நேரத்தில், ஸர் மோகன்லால் மூலமாக நிர்மாணிக்கப்பட்ட உத்தியோக சுயம்வர மண்டபத்தில், தன் கழுத்தில்தான் மாலை விழும் என்ற நம்பிக்கையுடன் பல விண்ணப்பதாரர்கள் சாதக பட்சியாகக் குழுமி விட்டனர்.

அப்பொழுது ஸர் மோகன்லால் தமது விசாலமான அறையின் அரையே அரைக்கால் பகுதியை அடைத்துக் கொண்டிருக்கும் மேஜைக்கெதிரே அமர்ந்திருந்தார். அவர் எதிரே அன்றைய தினக் குறிப்பேடு திறந்து கிடந்தது. 'மூன்று அடித்து முப்பத்தொன்பது நிமிஷத்துக்கு நகரபரிபாலன சபையின் விஷயாலோசனை கமிட்டிக் கூட்டம்' என்ற குறிப்பைக் கவனித்த அவரது பார்வை அதற்குமேலிருந்த குறிப்பிலும் அவரை யறியாமலே சென்றது. 'மூன்று அடித்துப் பதினைந்து நிமிஷத்துக்கு அந்தரங்கக் காரியதரிசியின் பதவி.' உடனே ஸர் மோகன்லால் மேஜையின்மீது வைத்திருந்த வெண்கலப் பூனையின் வாலை அழுத்தினார். கண கண வென்று மணி ஒலித்தது. அதைத் தொடர்ந்து அவரெதிரே வில்லைச் சேவகன் நின்றான்.

"தலால் ஸேட்டை வரச் சொல்!"

ஸர் மோகன்லால் நிமிர்ந்து பாராமலே சொன்னார். வில்லைச் சேவகன் வெளியே சென்றான். அதை அடுத்து நடுத்தர வயதுடைய ஒரு மனிதர் அவரெதிரே நின்றார்.

"வேலைக்கு மனுப் போட்டிருக்கிறவர்கள் வந்திருக்கிறார்களா?"

"ஆமாம்! வந்திருக்கிறார்கள்!"

"மொத்தம் எத்தனை பேர்?"

"பதின்மூன்று பேர்."

"அதிர்ஷ்டக்கட்டை நம்பர். இருந்தாலும் பரவாயில்லை. ஒவ்வொருவராக உள்ளே அனுப்பு!" என்று கட்டளையிட்டார்.

"சரி, சார்!" என்று கூறித் தலாவ்லேட் வெளியே சென்றார்.

மறு கணம் ஒரு பார்ஸி வாலிபன் உள்ளே நுழைந்தான். ஆள் வாட்டசாட்டமாக உயரமாக இருந்தான். அழகாகவும் இருந்தான். 'துறு துறு' என்ற குணம் படைத்தவனாகவும் தோன்றினான். அவன் உடுத்திருந்த ஆடம்பர உடையும் ஆகிருதியும் துணிக்கடை விளம்பரத்தின் உருவம்தான் உயிர் பெற்றுவந்துவிட்டதோ என்று எண்ணும்படி அமைந்திருந்தன. அவனது கருண்ட தலைக் கேசங்களில் இரண்டொரு கொத்துக்கள் முன்நெற்றியில் வந்து விழுந்திருந்தன. பிரேம் இல்லாத கண்ணாடி அவன் முகத்தை அலங்கரித்துக் கொண்டிருந்தது. அவன் அணிந்திருந்த உடை மடிப்புக் கலையாமல், தொய்ந்து போகாமல் இருந்தது. சலவைக் கஞ்சியின் மொர மொரப்போடு தையற்காரனின் கைத்திறனும் அபூர்வம் என்பதை எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தது.



விறைப்பாக நின்ற அவனது உடல் இடுப்போடு சற்றுக் குனிந்து வணக்கம் தெரிவித்தது. உதடுகள் ஒரு புன்முறுவலைக் 'காட்டுவது போலக் காட்டி மறுபடியும் பழையபடியே குவிந்தன. வாலிபன் முன் நெற்றியில் புரண்ட தலைமயிரை ஒரு தடவை இடதுகையினால் ஒதுக்கி விட்டுக் கொண்டான்.

ஸர் மோகன்லால் தலை நிமிர்ந்து அவனை ஒருமுறை பார்த்து விட்டுக் கேட்டார்:

"பெயர்?"

"பேஸி கல்தான்!"

வாலிபன் சற்று நெருங்கி வந்தான்.

மனுக்கள் கட்டிலிருந்து அவன் மனுவை எடுத்தார் ஸர் மோகன்லால்.

"வயது?"

"இருபத்தெட்டு!"

மனுவை ஒருபுறம் வைத்தார் மோகன்லால். "சரி! உம்மை எடுத்துக் கொள்வதாயிருந்தால், நானே கடிதம் வரும்!" என்று கூறிக் கழுத்து அசைப்பினாலேயே அவனை வெளியே போகுமாறு உத்தரவிட்டார்.

கல்தான் மூன்று நாட்களாகவே இந்த 'இன்டர்வியூ'வுக்காக விழுந்து விழுந்து தன்னைத் தயார்ததுக்கொண்டிருநதான். எத்தனை எத்தனையோ கேள்விகளை எதிர்பார்த்துப் பதிலை உருப் போட்டு வைத்துக் கொண்டிருந்தான். பதில் சொல்லும் பொழுது எப்படி எப்படியெல்லாம் தன் உடல் உறுப்புகளுக்கு வேலை கொடுக்க வேண்டும் என்பதற்குப் பல ஒத்திகைகளும் பார்த்துக் கொண்டிருந்தான். அத்தனை முயற்சிகளும் ஒரு நொடியில் வீணாகிப் போய் விட்டன. ஸர் மோகன்லால் அவனுக்குத் தன் திறமையைக் காட்ட வாய்ப்பே அளிக்காமல் ஏமாற்றி விட்டார். இந்த எதிர்பாராத ஏமாற்றம் அவனைப் பேய் அறைந்தாற்போல் நிலைகுலைந்து நிற்கும்படி செய்துவிட்டது.

தலை நிமிர்ந்த ஸர் மோகன்லால், "இன்னும் ஏன் நிற்கிறீர்?" என்றார். கல்தான் வேறு வழியின்றி வெளியேறினான்.

உடனே ஒரு மராத்தியர் உள்ளே நுழைந்தார். அவர் அணிந்திருந்த சிவப்பு நிறத் தலைப்பாகையும், செருப்பும், அவர் பேஷ்வா காலத்தைச் சேர்ந்தவர் என்பதைச் சொல்லாமலே சொல்லிக் காட்டின. அவருக்கு வயது சற்று அதிகம். பரந்த அநுபவம் பெற்றவர் என்பதை முகக்குறியே எடுத்துக் காட்டியது. நான்கைந்து கேள்விகள் கேட்டு ஸேட்ஜி அவருக்கும் விடை கொடுத்து அனுப்பினார். அடுத்தவர் வருவதற்குள்ளாக 'இவர் நம் காரியத்துக்குப் பயன்படுவாரோ?' என்று எண்ணிப் பார்க்க நினைத்தார்.

ஆனால் மூன்றாவதாக உள்ளே நுழைந்தவர், அவர் மூளைக்கு அந்தச் சிரமத்தை வைக்கவில்லை. வந்தவரின் முகத்தில் காம்பீர்யம் குடி கொண்டிருந்தது. நடையில் மத்தகஜத்தின் மெதுத்தன்மை மிளிர்ந்தது. விழிகளில் ஒரு ஒளியைக் காணோம். ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருப்பவரைப்போன்று,— இல்லை, இல்லை எதையோ பறி கொடுத்து விட்டவரைப் போன்று—உள்ளுக்குள் சுருங்கிக் கொண்டிருந்தன. இடுப்பு ஒடிந்து, தொடித்ததைப் பார்க்

# பினிக்ஸ் உங்களை அழகு படுத்துகிறது

**பினிக்ஸ் ப்ரிண்ட்ஸ், வாயில்கள், லீனேஸ்**

அழகு வாய்ந்த பினிக்ஸ் ப்ரிண்ட்ஸ், வாயில்கள் மற்றும் லீனேஸ் இவைகளை உபயோகியுங்கள். உங்கள் வனப்பை எடுத்துக்காட்ட அவை உதவுகின்றன. உங்களுக்கு மகிழ்ச்சி உண்டாக்கும் முறையில் அவை தயாரிக்கப்பட்டவை. நாள் முழுவதும் அணிந்தபோதிலும் அவை மொற மொறப்பையும் புதுமையையும் இழக்கமாட்டா.

Ruia fabrics

அவை நேர்த்தியானவை என்பதை நீங்கள் **உணர்வீர்கள்**



தி பினிக்ஸ் மில்ஸ் லிமிடெட், லோயர் பரேல், பம்பாய்—13

கப் பார்க்கப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் போலத் தோன்றியது.

ஸர் மோகன்லால் அதைக் கவனித்தார். அவர் நிலைத்த பார்வையில் ரகசியமே உருவான ஒரு இளநகை ஓடி மறைந்தது.

“உமது பெயர்?”—குஜராத்தி மொழியில் கேட்டார் ஸர் மோகன்லால்.

“மதுபர்க்க சங்கர சாஸ்திரி.”

“எந்த ஊரோ?”

இந்தக் கேள்வியைக் கேட்கும் பொழுது, கல்யாண காலத்தில் மதுபர்க்கம் அருந்துவது போன்ற சுவையை ஸர் மோகன்லாலின் நா சுவைத்தது.

“நடியாத்.”

சாஸ்திரியின் நடை, உடை, பாவனையைக் கண்ணுற்ற ஸேட்ஜிக்கு ஒரு வேடிக்கை தோன்றியது. கேலியாக, “எழுதப் படிக்க வருமா?” என்று கேட்டார்.

“எனது சிற்றறிவுக்கு எட்டிய வரையில் குஜராத்தி அன்னையின் பாதாரவிந்தங்களில், இப்படி எப்பொழுதாவது பத்ரம், புஷ்பம், பலம், தோயம், அதாவது இலை, பூ, பழம், நீர் என்ற வகைகளில் ஏதாவது அர்ப்பணித்து வந்திருக்கிறேன்!” என்றார் மதுபர்க்க சங்கர சாஸ்திரி. அதைச் சொல்லும் பொழுது அவர் குரலில் ஒரு காம்பீர்யமும் அதைத் தொடர்ந்து கர்வமும் தொனித்தன.

ஸர் மோகன்லாலின் சாந்தமான முகத்தில் மீண்டும் ஒருமுறை சிரிப்பு இழையோடியது. “சரி, உமக்கு என்ன சம்பளம் வேண்டும்?” என்று கேட்டார்.

“பம்பாய் வாழ்க்கை...”

ஸர் மோகன்லால் கடிகாரத்தைப் பார்த்தவாறே, “குழந்தை குட்டிகள் இருக்கின்றனவா?” என்று கேட்டார்.

“இருக்கின்றன!” என்று சொன்ன மதுபர்க்க சாஸ்திரி ஏதோ யோசனையில் ஆழ்ந்தவர் போல், “ஆனால் தற்சமயம் பம்பாயில் இல்லை!” என்றார்.

“இருநூற்றைம்பது சம்பளம். என் வீட்டிலேயே இருப்பு; சாப்பாடு இரண்டும். சம்மதமா, சொல்லும்!” என்று தந்தி பாஷையில் கேட்டார் ஸர் மோகன்லால்.

சாஸ்திரியின் விழிகள் அகல விரிந்தன. “தங்கள் சித்தம் என் பாக்கியம்!” என்றார்.

“இன்றைக்கே வேலையை ஒப்புக் கொள்ளலாம் அல்லவா?”

“எனக்கு வேறு ஒன்றும் வேலை இல்லை!”

“அப்படியானால் உட்காரும். இதோ உமது மேஜை!” என்றார் மோகன்லால்.

மதுபர்க்க சாஸ்திரிக்கு வாய்மொழியாகவே நியமனப் பத்திரம் வழங்கிவிட்டு, மின்சார யந்திரத்தைப் போன்ற வேகத்துடன் உத்தரவிடலானார், மோகன்லால். “நான் இப்பொழுது வெளியே போய்க் கொண்டிருக்கிறேன். ஐந்தேகால் மணிக்குத் திரும்பி வருவேன். இந்தாரும், கடிதம். இந்த ஆசாமிக்கு இருபத்தைந்து ரூபாய் அனுப்ப வேண்டும். பணம் அனுப்பி விருப்பதாக ஒரு கடிதமும் எழுதிவிடும். ஆள் கொஞ்சம் அகம்பாவி, தன்மானம் உள்ளவன். தர்மத்துக்காக நாம் அவனுக்குப் பணம் கொடுத்துக் கொண்டிருக்கிறோம் என்ற எண்ணம் விழக் கூடாது!”

ஸேட் இன்னுமொரு கடிதத்தை எடுத்தார்.

“இந்தாரும், இன்னொரு கடிதம். இது மனோரமாவினுடையது!”

சாஸ்திரியின் விழிகள் வியப்பினால் பிதுங்கி வெளியே விழுந்து விடும் போலாகி விட்டன.

“மனோரமா என் மனைவி. அவள் ரூப்மஹலில் இருக்கிறாள். வியாதிக்காரி. அவள் மனத்துக்கு ஆறுதல் ஏற்படும் வகையில் ஒரு கடிதம் எழுதி வையுங்கள்!”

“என்னையா சொல்கிறீர்கள்?”

“ஆமாம்! இதில் என்ன தவறு? நான் வந்ததும் பார்த்து அனுப்புகிறேன்!”

ஸர் மோகன்லால் மணி அடித்து வேலைக்காரனைக் கூப்பிட்டார். அவன் வந்ததும், “இந்தப் பையைக் கொண்டு போய் காரில் வை!” என்று உத்தரவிட்டார்.

தலால் ஸேட் மறுபடியும் உள்ளே வந்தார்.

“ஸார்!”

“இதோ பார்! மிஸ்டர் சாஸ்திரிக்கு இன்று முதல் மாதம் இருநூற்றைம்பது



ரூபாய் சம்பளம். இவர் பெயரை எழுதிக் கொள். இவருக்கு இங்கேயே ‘ஸீட்’ போட்டுவிடு. மற்ற விண்ணப்பதாரர்களை நீயே பார்த்து அனுப்பிவிடு!”

இவ்விதம் கூறியதும் ஸர் மோகன்லால் வெளியே புறப்பட்டு விட்டார்.

## 2

ஸர் மோகன்லால் வெளியே போய் விட்டார். ஆனால் மதுபர்க்க சாஸ்திரி சித்திரப் பதுமையாக ஸ்தம்பித்து நின்றார்.

இருநூற்றைம்பது ரூபாய் சம்பளம்; தங்க இடமும் உண்ண உணவும் இலவசம்; ஸேட்ஜியின் உத்தரவு; அவர் மனைவிக்குக் கடிதம் எழுத வேண்டிய பொறுப்பு தம் தலையில் சார்ந்தது;—எல்லாமாகச் சேர்ந்து சாஸ்திரியின் மூளையைக் குழப்பி மனத்தைச் சஞ்சலத்தில் ஆழ்த்திவிட்டன.

தலால் ஸேட் சிரித்தவாறே அவரிடம் சில கேள்விகளைக் கேட்டார். ஆனால் சாஸ்திரி சரியான பதில் கொடுக்கவில்லை. சாஸ்திரி ஒருவேளை கர்வியோ என்னவோ என்று என்

னித் தலால் ஸேட் அங்கிருந்து போய் விட்டார். சாஸ்திரியோ ஸேட்ஜியின் மனைவி எழுதிய கடிதத்தைக் கையில் வைத்துக் கொண்டு செய்வது அறியாது திகைத்தார்.

மதுபர்க்க சாஸ்திரியைச் சரியாகப் புரிந்து கொள்ளாதவர்களுக்கு இந்தப் புதிர் புரிவது சற்றுச் சிரம சாத்தியமான காரியம்தான்.

நடியாத்வாசியான மதுபர்க்க சங்கர சாஸ்திரி தம் முயற்சியில் படித்து முன்னுக்கு வந்தவர். அவருக்கு அசைக்க முடியாத ஒரு நம்பிக்கை. அதாவது, சிருஷ்டியின் இருதயஸ்தானம் குஜராத். அதன் நடுப் புள்ளி நடியாத். அதற்கு ஆதாரப் புள்ளி அவர். அதோடு அவருடைய இன்னொரு நம்பிக்கையும் என்னவென்றால், கோவர்த்தனராம் போன்ற நடியாத்தைச் சேர்ந்த புகழ் பெற்ற புலவர்களின் கீர்த்தி என்னும் மணி மகுடம் தமது தலையை அலங்கரிப்பதற்காகவே அவர்கள் தலையில் ஒடு ஒடுவென்று ஆடத் தொடங்கி விட்டது என்பதுதான்.

அவரைப் பொறுத்தவரை உலகம் நடியாதின் ஒரு தெரு; உலக இலக்கியம் அவரது கிராமத்தைச் சேர்ந்த புலவர்களின் வாயினின்று எழுந்த கர்ஜனையின் எதிரொலி. இவ்வளவே.

மதுபர்க்க சாஸ்திரிக்குத் தமது படிப்பிலும் நடியாத்தின் பெருமையிலும் எத்தனை பக்தி சிரத்தை இருந்ததோ, அத்தனை பக்தி சிரத்தை தமது மனைவியிடமும் இருந்தது. அவர் அவளைத் தமது வழிபடு தெய்வமாகவே மதித்து வந்தார். உலகத்துப் பெண் சிருஷ்டிகளுக்குள் குஜராத்திப் பெண்களின் அழகும் பண்புந்தான் எல்லாவற்றிலும் சிறந்தது என்பது அவர் அபிப்பிராயம். அந்தக் குஜராத்திப் பெண்களுக்குள்ளே தமது தர்ம பத்தினி ஒருத்திதான் கடந்தகால, நிகழ்கால, வருங்கால அழகிகளில் எல்லாம் தலை சிறந்தவள், குணக் களஞ்சியமானவள் என்பதும் அவரது அசைக்க முடியாத நம்பிக்கை.

அதனால்தான் ஸர் மோகன்லால் தமது மனைவியின் கடிதத்தை அவரிடம் கொடுத்த பொழுது மதுபர்க்க சாஸ்திரி உடலும் உள்ளமும் ஒருங்கே குலுங்கத் துணுக்குற்றார்.

இந்தப் பாவி உலகம் ஏன் இன்னும் பாதாளத்தில் அழுந்தாமல் கிடக்கிறது? இந்த உலகத்தில் இவ்வளவு மட்டரகமான கணவன்மார்கள் கூட இருக்கிறார்களா? அன்பே உருவான மலர் உள்ளம் படைத்த மனைவிமார்களுக்குக் காதல் கடிதம் எழுதச் சம்பளம் பெறும் சிப்பந்திகளை நியமிப்பதா? என்ன கண்றாவி! இன்றுவரை கேள்விப்படாத விஷயமாயிருக்கிறதே! அட, கடவுளே, மனிதன் இவ்வளவு கீழ்த் தரமாகவா போக வேண்டும்? பம்பாய் நகரத்தில் அதோகதி என்னும் ஆழமான குழியில் அழுந்திக் கிடக்கும் எத்தனையோ கேடுகெட்ட மனிதர்கள் இருக்கிறார்கள் என்று அவர் கேள்விப்பட்டிருக்கிறார். ஆனால் இந்தப் பணக்கார மனிதர் தம் அருமை மனைவிக்கு இழைக்கும் துரோகத்தைப் பார்க்கும்போது அந்தக் கேட்டிலும் கேடுகெட்ட மனிதர்களைக்கூட நல்லவர்கள் என்று கூறி விடலாம் போலிருக்கிறதே!

எத்தனை அன்புடன், எத்தனை உற்சாகத்துடன், எத்தனை மென்மையான எண்ணத்துடன் அந்த மாமலராள் இவருக்குக் கடிதம் எழுதியிருக்கிறாளோ, யார் கண்டார்கள்? உணர்ச்சிக்குச் சற்றும் மதிப்புக் கொடாத இவரும் ஒரு மனிதரா? உண்மைக் கணவரா? மூன்றும் மனிதனைக் கொண்டு பதில் எழுதச் சொல்பவர் உணர்ச்சியே சிறிதும் அற்ற வெறும் கட்டையாகத்தான் இருக்க வேண்டும்; கருங்கல் நெஞ்சம் படைத்தவராகத்தான் இருக்க வேண்டும். மதுபர்க்க சங்கர சாஸ்திரியினால் அதற்கு மேல் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை.

அவர் உள்ளம் தழுதழுத்து மெழுகாக உருகி விட்டது. துர்வாஸ முனிவர் எந்த கையை கனல் கக்கும் பார்வையுடன் பார்த்து மக்களைப் பஸ்மமாக்கி விருப்பாரோ, அதே கோபம் கொண்ட விழிகளுடன் மதுபர்க்க சாஸ்திரி ஸர் மோகன்லாலின் மேஜையைப் பார்க்கலானார்.

மேஜையின் மேல் சென்ற அவர் பார்வை அதன் மேல் திறந்து கிடந்த குறிப்பேட்டையும் ஒரு நோட்டம் விட்டது. அதிலிருந்து ஸர் மோகன்லால் சீக்கிரமே திரும்பி விடுவார் என்றும் தெரிய வந்தது. அதோடு இருநூற்றைம்பது ரூபாய், உணவு, ஜாகை வசதி ஆகியவை நினைவுக்கு வந்தன. கடமையை நிறைவேற்றாமல் இருப்பது தம் மீது எத்தனை பெரிய மாசைக் கற்பிக்கக்கூடும் என்பதும் நினைவுக்கு வரவே, அவசரம் அவசரமாகக் கடிதத்தை எடுத்துப் படிக்கலானார்.

"அன்பே,

தங்கள் கடிதம் கிடைத்தது. என் உடல் நிலை வரவரக் குணமாகி வருகிறது. தாங்கள் எப்பொழுது என்னைப் பார்க்க வரப் போகிறீர்கள்?

தங்கள்,

மனோரமா."

கடிதம் சிறியதுதான். கடுகு சிறுத்தாலும் காரம் போகாது என்றபடி இனிமை நிறைந்ததுவா இருக்கிறது! பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத அழகுள்ள எழுத்து! அதோடு எழுதும் முறையிலும் உயர்ந்த பண்பு! எல்லாவற்றுக்கும் மேலாக எழுதுபவருடைய பெயரிலும்தான் என்ன மனோரம்யம்!

பம்பாய்ப் பணக்காரர்கள் உலகத்தைப் பொருட்படுத்த மாட்டார்கள் என்பது வேலை பார்க்கும் ஊழியர்களுக்குத் தெரியும். ஆனால் அன்பே உருவான மனைவிமார்களையும் அப்படித்தான் நடத்துவார்கள் என்று தெரிந்திருக்க நியாயம் இல்லையல்லவா? இதை நினைத்துப் பார்க்கவே மதுபர்க்க சாஸ்திரிக்கு மனம் கூசியது: தலைகற்றியது.

அவர் தம் மேஜைக்கெதிரே உட்கார்ந்து கொண்டார். வெற்றுக் காகிதத்தை எடுத்து வைத்துக் கொண்டு பதில் எழுதலானார். என்ன என்னவோ எழுதினார், அடித்தார், திருத்தினார், சேர்த்தார். அப்புறம் காகிதத்தையே கிழித்துக் குப்பைத் தொட்டியில் போட்டார். பிறகு புதிதாக இன்னொரு காகிதத்தை எடுத்து வைத்துக் கொண்டு மறுபடியும் எழுத முனைந்தார். இரண்டு தடவை பேனாவைக்கூட மாற்றினார். உணர்ச்சி நிறைந்த அவரது உள்ளத்தில் எண்ணங்களுக்கு மேல் எண்ணங்கள் அலைமேல் அலையாகமோதலாயின. (அடுத்த இதழில் முடியும்)

# நான்தான் டீ

## என்னை நன்றாகப் பாருங்கள்

ஒவ்வொரு ஆண்டும் பல லட்சக் கணக்கில் கோப்பைகளையும், தட்டுகளையும் உற்பத்தி செய்வதன் மூலம், நம் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த உதவுகிறது பீங்கான் தொழில். வளர்ச்சியுற்றுக்கொண்டிருக்கும் அத்தொழிலை எனது "தேநீர் கூஜாத்தலை" சின்னமாகக் கொண்டிருக்கிறது.

எனது உடலின் மற்ற அங்கங்கள் "இரண்டு இலைகளும்–ஒரு மொக்கும்". இவற்றிலிருந்து தயாரிக்கப்படும் பானம் உலகம் முழுவதும் அருந்தப்படுகிறது. மற்றும், எனது பசுமையான இலைகள், நான் வளரும் பல ஏக்கராக்களைக் கொண்ட பரந்த நிலப்பரப்பையும், இவ் விரிந்த நிலப்பரப்பில் என்னை வளர்க்கும் பல்லாயிரக் கணக்கான மக்களையும் உங்களுக்கு நினைவூட்ட வேண்டும். நிலக்கரி, சிமெண்ட், உரங்கள், டீ யந்திரங்கள், பிளைவுட் மற்றும் பல தொழில்களுக்கு நான் அளித்திருக்கிற பலத்தைப் பற்றியும் அவை உங்களுக்கு நினைவூட்டும் என்று சொல்லத்தேவையில்லை. தற்பொழுது இந்தியாவில் ஒவ்வொரு ஆண்டும் ஏறக்குறைய அறுபது லட்சம் டீ பெட்டிகள் பிளைவுட்டினால் தயாரிக்கப்படுகின்றன.

எனவே, பாரதத்தின் விவசாயம், மற்றும் ஆலைத்தொழில் துறைகளில் நான் மிகவும் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளேன். நான் நிலத்தில் உழைக்கும் உழைப்பாளிக்கும், ஆலையில் வேலை செய்யும் தொழிலாளிக்கும் நண்பன். எல்லாவற்றிற்கும் மேலாக உங்கள் இன்ப துன்பங்களில் உற்ற நண்பனாக விளங்குகிறேன்.






**நான்தான் டீ — இந்தியாவின் செல்வம்**

பாலர் மலர்



இவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வாத்தியம் வாசிக்கிறார்கள். அது என்ன வாத்தியம்?

இந்த வளையத்தைப் பார்க்கும் போது ஒரு சமயம் இந்தப் பக்கமாகவும் இன்னொரு சமயம் அந்தப் பக்கமாகவும் திரும்பிக் கொண்டிருப்பதைக் காணலாம்.



## மறுபடியும் கவலை!

○*○

பணக்காரர் ஒருவர் ரொம்பச் சிந்தனையாக இருந்தார். அவருடைய சிநேகிதர் ஒரு ஏழைக் குமாஸ்தா. ஆனால் ரொம்பத் தாராள மனம் உள்ளவர். அந்தப் பணக்காரர் தம்மிடம் நிறையப் பணம் இல்லாததையும், செலவு அதிகமாயிருப்பதையும் எண்ணிக் கவலைப்பட்டார். தம் வீட்டுக் கூரையைப் புதுப்பித்து அதனால் ஏற்பட்ட செலவையும் சொல்லி வருத்தப்பட்டார்.

அதற்கு அந்தக் குமாஸ்தா, "ஏன் கவலைப்படுகிறீர்கள்? கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொடுக்கும்!" என்று சொன்னார்.

அவர் அப்படிச் சொன்னதுதான் தாமதம்; அவர் வாக்கு உடனே பலித்துவிட்டது. உடனே கூரையைத் தட, தடவென்று பிய்த்துக் கொண்டு ஏராளமான பணம் வந்து விழுந்தது.

"சபாஷ்! உங்களுக்குக் கஷ்டமே இல்லை!" என்று கூறினார் குமாஸ்தா.

அந்தப் பணக்காரர் முன்னைவிட அதிக துக்கத்துடன், "சந்தோஷமா? இப்போது தான் கூரையைப் பழுது பார்த்தேன். அது இப்போது பிய்ந்து விட்டது. மறுபடியும் புதுக் கூரை போட வேண்டும் என்றால் அதற்கு என்ன செலவாகும்?" என்று கூறினார். அவர் குரலில் வருத்தம் நன்கு தொனித்தது.

குட்டிக் கதை











# வியாபாரியின் மகன்

## 4. முரட்டுக் குதிரை!

ஒருநாள் அரசன் இவானை அழைத்தான். இவான் வந்து சேர்ந்தான். அரசன் அவனைப் பார்த்து, "இவான், நீ ரொம்பவும் கெட்டிக்காரன் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ஆனாலும் நீ செய்ய வேண்டிய மூன்றாவது சாகசக் காரியம் ஒன்றிருக்கிறது. என்னிடம் ஒரு முரட்டு அடங்காப்பிடாரி குதிரை யிருக்கிறது. அதை அடக்கி விட்டால் என் மகளை உனக்குத் திருமணம் செய்து வைக்கிறேன்!" என்றான்.

"இது ரொம்பவும் சுலபமாயிற்றே!" என்று சொல்லிவிட்டு இவான் மிகுந்த மனத் திருப்தியோடும் சந்தோஷத்தோடும் தனது இருப்பிடத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.

சற்று நேரத்துக்கெல்லாம் அவன் காதலி வந்து சேர்ந்தாள். அவளிடம் அன்று நடந்ததெல்லாம் இவான் சொன்னான். அதை அவள் கேட்டாளோ இல்லையோ, 'பகீர்' என்றாகி விட்டது! "இவானே! உன்னைப் போன்ற முட்டாள் கிடையாது. இந்தக் காரியத்தைச் செய்து முடிப்பது மிகவும் கஷ்டமாயிற்றே! ஏனெனில் ராட்சத மன்னனே அல்லவா அந்த முரட்டுக் குதிரை? அவர் உன்னைக் கிறுகிறு என்று தலையைச் சுழல வைத்து வான மண்டலத்துக்குத் தூக்கிச் செல்வார்; பிறகு கனாந்தகாரமான காட்டில் தூக்கி எறியப் பார்ப்பார். உன் எலும்புகளை யெல்லாம் நொறுக்கித் தூள் தூளாகப் பறக்கவிட முயல்வார்! நீ என்ன செய்யப் போகிறாய், பாவம்! இருந்தாலும் ஒரு காரியம் செய். கருமானிடம் போய் நல்ல பளுவான சுத்தி ஒன்று செய்யச் சொல்லி வாங்கிக் கொள். குதிரை அட்டகாசம் செய்யும் போதெல்லாம், அதன் மண்டையில் ஓங்கி அடித்துக் கொண்டேயிரு!" என்று அவனுக்கு யோசனை கூறினாள் வாஸிலிஸா.

மறுநாள் குதிரை லாயக்காரர்கள், லாயத்திலிருந்து முரட்டுக் குதிரையைப் பிடித்துக் கொண்டு

வந்தார்கள். அந்தக் குதிரை வரும்போதே குதிரைக்காரர்களின் பிடியிலிருந்து திமிறி ஓடி விடப் பார்த்துக் கால்களை உதைத்தது. 'உர் உர்' என்று பயங்கரமாக மூச்சு விட்டது. இவான் சாமர்த்தியமாக அதன் முதுகின் மீது ஏறி அமர்ந்தானோ இல்லையோ, காற்றென விண்ணில் கடுகி மறைந்தது! வானமண்டலத்தில் கண்டபடி குதித்து இவானைப் பயமுறுத்திற்று. ஆனால் இவானோ அதன் மண்டையில் கத்தியால் அடித்துக் கொண்டேயிருந்தான்.

முரட்டுக் குதிரையாக வந்த மன்னன் வலி தாங்க மாட்டாமல் பூமியில் இறங்கினான். இவான் குதிரையைக் கொண்டு போய் லாயத்தில் விட்டு விட்டு, தனது இருப்பிடத்துக்குப் போனான். சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொண்ட பிறகு நேரே அரசனிடம் வந்தான்.

அந்தச் சமயத்தில் மன்னன் தலையில் பெரிய கட்டுப் போட்டுக் கொண்டு வலி பொறுக்க முடியாமல் படுக்கையில் படுத்துக் கிடந்தான். "மகாராஜா! தாங்கள் சொன்னபடி குதிரையை வசப்படுத்தி விட்டேன்" என்றான் இவான்.

இவான் சொன்னதைக் கேட்டதும், "ரொம்ப சந்தோஷம். நாளைக்கு வந்து என் புதல்விகளில் உனக்குப் பிரியமானவளைத் தேர்ந்தெடுத்துக் கொள்! இப்பொழுது எனக்குத் தலையை வலிக்கிறது. போய் விட்டு வா" என்றான்.

மறுநாள் மன்னன் தனது குமாரிகளில் ஒருத்தியைத் தேர்ந்தெடுப்பதில் மூன்று பரீட்சைகள் நடத்தினான். எதற்கு இந்த மூன்று பரீட்சைகள்? இவான், தான் காதலித்த வாஸிலிஸாவைத் தேர்ந்தெடுப்பதில் ஒரு முறை தவறி விட்டானானால் அவனைத் தண்டிக்கலாம் என்றுதான். ஆனால் அரசனின் தந்திரத்தை ஏற்கெனவே அறிந்திருந்த வாஸிலிஸா தக்கபடி இவானுக்கு எச்சரிக்கை செய்திருந்ததால் இவான் வெற்றியடைந்து விட்டான். வாஸிலிஸாவை இவானுக்குக் கொடுத்து மணம் செய்து வைப்பது தவிர அரசனுக்கு வேறு வழி இல்லை என்றாகி விட்டது!

கல்யாணம் வெகு சிறப்பாக நடந்தது. இவானும் வாஸிலிஸாவும் அந்த அரண்மனையிலேயே சந்தோஷமாக வாழ்ந்து வந்தார்கள்.

* * *

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு இவான் தன் சொந்த தேசத்துக்குப் போக வேண்டும் என்று தீர்மானித்தான். வாஸிலிஸாவும் ஒப்புக்கொண்டாள். அரசனிடம் சொன்னால் போக அனுமதிக்க மாட்டான். ஆதலால் ஒரு நாள் நள்ளிரவு ஒரு குதிரை மீது ஏறி அமர்ந்து இருவரும் ஓடி விட்டார்கள். பொழுது விடிந்ததும் இந்தச் செய்தி அரசனுக்கு எட்டியது. உடனே வாஸிலிஸாவும் இவானும் எங்கிருந்தாலும் பிடித்து வரும்படி தனது பணியாட்களுக்கு மன்னன் கட்டளையிட்டான்!

குதிரைமேல் போய்க் கொண்டிருந்த வாஸிலிஸாவும் இவானும் காலைச் சூரியன் உதயமானவுடன் ஓர் இடத்தில் சற்றுத் தங்கினார்கள். அப்போது வாஸிலிஸா இவானிடம், "நீங்கள் பூமியின்மீது காதை வைத்துக் கேட்டு என்ன சத்தம் என்று சொல்லுங்கள்" என்றாள்.

"குதிரைகளின் குளம்புச் சத்தம் கேட்கிறது!" என்றான் இவான்.

"நம்மைத் துரத்திக் கொண்டு அரண்மனை ஆட்கள் வருகிறார்கள். ஆதலால் நீங்கள் ஒரு காய்கறித் தோட்டமாக மாறி விட வேண்டும். அந்தத் தோட்டத்தில் ஒரு கீரைத்தண்டாக நான் நிற்கிறேன்" என்றாள். அப்படியே மாறி விட்டனர்.

அரண்மனை ஆட்கள் அவ்வளவு தூரம் வந்தனர். இவானையோ, வாஸிலிஸாவையோ காணாமல் திரும்பிச் சென்று, "நாங்கள் வெகுதூரம் வரை தேடிச் சென்றோம். ஒரு காய்கறித் தோட்டமும், ஒரு கீரைத் தண்டும்தான் இருந்தன! வேறு ஒன்றுமில்லை!" என்று கூறினார்கள்.

"முட்டாள்களே! அந்தக் கீரைத் தண்டுதான் வாஸிலிஸா! அவளுடைய தந்திரங்கள் உங்களுக்குத் தெரியவில்லையே! போங்கள் உடனே! அந்தக் கீரைத்



துண்டை வேரோடு பறித்துக் கொண்டு வாருங்கள்" என்றான் மன்னன்.

அரண்மனை ஆட்கள் திரும்பி வருகிறார்கள் என்ற செய்தி அறிந்தவுடன் வாஸிலிஸா கிணறாகவும் இவான் ராஜாளிப் பறவையாகவும் மாறிவிட்டனர்.

வெறுங் கையுடன் திரும்பி வந்த ஆட்களைப் பார்த்த அரசனுக்குத் தன் சேவகர்களை நம்பினால் காரியம் நடக்காது என்று தானே புறப்பட்டான்.

பூமியில் காதை வைத்துக் கேட்ட இவான், "வாஸிலிஸா! இந்தத் தடவை குதிரைகளின் குளம்புச் சத்தம் மட்டுமின்றித் தாரை தப்பட்டை முரசு எல்லாம் கேட்கின்றன!" என்றான்.

"அப்படியானால் நம்மைத் தேடிக் கொண்டு என் அப்பாவே புறப்பட்டு விட்டார் என்றுதான் பொருள். இவரிடமிருந்து தப்புவதற்கு என்ன வழி?" என்று யோசித்தாள். தன்னிடம் ஒரு பிரஷ், ஒரு சீப்பு, ஒரு துண்டு இருப்பது நினைவு வந்தது. இவற்றைக் கொண்டு அரசனிடமிருந்து தப்பி விடலாம் என்ற முடிவுக்கு வந்தாள்.

அரசன் அவர்களை நெருங்கி வந்து விட்டான் என்று அறிந்தபோது வாஸிலிஸா தனது பிரஷை எடுத்துப் பின் பக்கமாக ஆட்டினாள். அங்கே ஒரு பெரிய காடு எழுந்தது. ஒரு சாண் இடைவெளி கூடக் கிடையாது. அவ்வளவு அடர்த்தியான காடு. அந்தக் காட்டு மரங்களை வெட்டிச் சாய்த்து வழி செய்து கொண்டு வருவதற்குள் அரசனுக்குப் போதும் போதும் என்றாகி விட்டது.

அதற்குள் இவானும் வாஸிலிஸாவும் தங்கள் சொந்த ஊரை நாடி வெகு தூரம் வந்து விட்டார்கள். எனினும் காட்டை வெட்டி வழி செய்து கொண்ட மன்னன் வெகு வேகமாக இவர்களை நெருங்கி வந்து விட்டான். அப்போது வாஸிலிஸா, தனது சீப்பைப் பின் பக்கம் ஆட்டினாள். அங்கே ஒரு பெரிய மலை எழுந்தது! மலையைக் குடைந்து குகைப் பாதையமைத்துக் கொண்டு வருவது அரசனுக்குப் பெரும் பாடாக இருந்தது. எனினும் எப்படியோ குடைந்து கொண்டு வந்து இவானையும் வாஸிலிஸாவையும் கைநீட்டிப் பிடிக்கும் தூரத்துக்கு வந்து விட்டான். அப்போது வாஸிலிஸா தனது துண்டை அசைத்தாள். அவ்வளவுதான். பெரிய சமுத்திரம் எழுந்தது. சமுத்திரத்தைக் கடக்க முடியாமல் அரசன் அவர்களை விட்டு விட்டுத் திரும்பிச் சென்றான்.

இப்படிப் பல இடையூறுகளைக் கடந்து இவானும் வாஸிலிஸாவும் சந்தோஷமாகச் சென்றார்கள்.

இவான் தனது சொந்த நாட்டின் எல்லையை அடைந்தபோது, "வாஸிலிஸா! நீ இங்கேயே இரு. நான் என் வீட்டுக்குப் போய் உன்னை அழைத்து வந்திருப்பதாக என் பெற்றோர்களிடம் சொல்லி உனக்கு நல்ல வரவேற்பளிக்க ஏற்பாடு செய்கிறேன்!" என்றான்.

'சரி, அப்படியே செய்யுங்கள். நீங்கள் ஊருக்குப் போய் உங்கள் அப்பா அம்மா எல்லாருக்கும் வணக்கம் செலுத்துங்கள். ஆனால் உங்கள் பாட்டியை மட்டும் வணங்கிவிடாதீர்கள். பாட்டியை வணங்கினால், என்னை அந்தக் கணமே மறந்து விடுவீர்கள்!" என்றாள்.

ஊருக்குச் சென்ற இவான் தன் பெற்றோர்களைக் கண்டதும் உண்டான ஆனந்தத்தில் எல்லோரையும் வணங்கினான். ஆம் வாஸிலிஸா செய்த எச்சரிக்கையையும் மறந்து பாட்டிக்கும் வணக்கம் செலுத்தினான். அவ்வளவுதான்! வாஸிலிஸாவின் நினைவு அந்தக் கணமே அவன் உள்ளத்தை விட்டுப போய் விட்டது!

சில நாட்களுக்குப் பிறகு இவானின் பெற்றோர்கள் அவனுக்குக் கல்யாணம் செய்து வைக்க ஏற்பாடு செய்தனர். ஒரு பெண்ணைப் பார்த்தனர். கல்யாண நாள் வைத்தனர்.

இந்தச் செய்தி அந்த நாட்டின் எல்லையிலிருந்த வாஸிலிஸாவுக்கு எட்டியது. அவள் ஒரு பிச்சைக்காரி போல் வேஷமணிந்து திருமண தினத்தன்று கல்யாண வீட்டில பிச்சை எடுக்க வந்தாள்.

கல்யாண மாப்பிள்ளை அவனுடைய பெற்றோர்கள் பெண் வீட்டார் எல்லாரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். அப்போது அங்கு ஒரு பெண் புறாவைத் தூக்கிக் கொண்டு ஆண் புறா வந்தது.

ஆண் புறாவைப் பார்த்துப் பெண் புறா, "ஆமாம், உன் உறவு எனக்கு வேண்டாம்! இந்த வியாபாரியின் மகன் இவான் தன் காதலியை மறந்தாற்போல் ஒரு நாள் நீயும் என்னை மறப்பவன்தானே!" என்றது.

இவ்விதம் மூன்று முறை கூறியது. அப்போதுதான் இவானுக்குத் தன் காதலி வாஸிலிஸாவின நினைவு வந்தது. உடனே வாசல் பக்கம் ஓடி வந்தான இவான். வாசலில் பிச்சைக்காரி உடையில் வாஸிலிஸா நின்றிருப்பதைப் பார்த்தான். அவ்வளவுதான். அவன் அடைந்த குதூகலம் கொஞ்சநஞ்சமல்ல. தான் செய்த தவற்றுக்குத் தன்னை மன்னிக்கும்படி கெஞ்சினான். பிறகு அவளை உள்ளே அழைத்து வந்து தன் பெற்றோர்களுக்கு அறிமுகப்படுத்தி எல்லா விவரங்களையும் கூறினான்.

தனக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பெண்ணுக்கும் பெற்றோர்களுக்கும் நிறையப் பணமும் காசும் கொடுத்தனுப்பினான். தனது உண்மைக் காதலி வாஸிலிஸாவுடன் நீண்ட நாட்கள் சந்தோஷமாக வாழ்ந்து வந்தான். (முற்றும்)

# புது பாட்டரி

## வாங்கப் போகிறீர்களா?

## சிறந்ததையே வாங்குங்கள்

# ஒக்ஸ்

## பாட்டரியை வாங்குங்கள்




பெட்ரோல் அல்லது டீஸல் கொண்டு இயங்கும் எந்தவித வாஹனத்திற்கும் ஏற்றதொரு ஒக்ஸ் பாட்டரி இருக்கிறது.

**ஜார்ஜ் ஒக்ஸ் பிரைவேட் லிட்.**

இந்தியாவெங்கும் அங்கீகாரம் பெற்ற




போர்ட் விநியோகஸ்தர்கள்

நியூ க்வீன்ஸ் ரோடு, பம்பாய் 4

# பானுவின் காதலை

### 15. யோசனையும் முடிவும் !

சின்னதுரை பானுவுக்குப் பரிந்து பேசியதைக் கண்டு கமலம்மாளுக்கு ஆத்திரமும் கோபமும் பொங்கி வந்தன.

"பானுவுக்குக் கல்யாணம் ஆயிற்றே, இல்லை பொய்யோ! அவள் பேச்சை நிஜம் என்று நம்புகிறாயேடா? அப்படி இருந்தால் ஏண்டா, இப்படி இங்கே ஓடி வருகிறாள்? அசடு!" என்று அவள் இடித்துரைத்தாள்.

"என்ன அம்மா! இப்படி ஒரேயடியாக..."

"இங்கே ஒரு நாள் வைத்துக் கொள்ளக்கூட நான் சம்மதிக்க மாட்டேன், சின்னு. மானக்கேடு! காலையில் கையிலே கால் அரையைக் கொடுத்து வந்தவழியே போ என்று அனுப்புவார்களா, வைத்துக் கொண்டு ஊர் சிரிக்கச் சீராடுவார்களா? சில சமயம் நீ அசட்டுப் பிசட்டென்று நடந்து கொள்கிறாய். அது எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை!" என்று கண்டிப்பாக முடித்துவிட்டாள் கமலம்மாள்.

சின்னு கோபத்தோடு, "உன்னுடைய கால் அரைக்குக் கதியில்லாமல் அவள் இங்கு வந்திருக்கவில்லை!" என்றான்.



"இருக்கட்டும். குபேர சம்பத்துடன் வந்திருக்கட்டும். போய்ப் படுத்துக் கொள்ளடா புத்தி கெட்டவனே! மணி நாலடிக்கும் தறுவாயாச்சு" என்றாள் கமலம்மாள்.

உள்ளே பானு குலுங்கக் குலுங்க விம்மும் ஒலி அவன் உள்ளத்தைத் துளைத்தது. என்ன செய்வது?

ஒரு மாதிரியாகப் பொழுது விடிந்தது. வீட்டில் உள்ளவர்கள் அனைவரும் சின்னுவையும் பானுவையும் குற்றக் கண் கொண்டு பார்த்தார்கள். கூடிக் கூடிக் 'கசமுசு' என்று பேசிக்கொண்டார்கள். பானு அதிகாலையிலேயே எழுந்து பல் துலக்கி முகத்தைக் கழுவிவிட்டாள். ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டாற் போல் அவள் கண்களில் உறுதி ஒளிவிட்டது. கமலம்மாள் காப்பி அரிப்பைப் பற்ற வைத்துக் கொண்டிருக்கும்பொழுது சேலைத் தலைப்பை இழுத்துச் செருகிக் கொண்டு நிலத்தில் நெற்றி தோய அவளுக்கு நமஸ்காரம் செய்தாள். "நான் போய் வருகிறேன், அத்தை! ஏதோ உங்களையெல்லாம் பார்க்க வேண்டும் போல் இருந்தது. பைத்தியக்காரி போல் வந்தேன்..... வரட்டுமா, அண்ணா!" என்றாள். அதே கணம் பதிலை எதிர்பாராமல் புறப்பட்டும் விட்டாள்.

இன்னும் படுக்கையை விட்டு எழுந்திருக்காமலேயே கூரையைப் பார்த்துக் கொண்டு படுத்திருந்த சின்னத்துரை திடுக்கிட்டு எழுந்தான். உடனே அவன் சட்டென்று பாயைச் சுருட்டி மூலையில் வைத்துவிட்டு, வாயிற்புறம் பல் துலக்குவதற்குச் செல்லுபவனைப் போல் மெள்ள நழுவினான்.

அவள் நேராகக் காவேரிக் கரைக்குத் தான் போவாள் என்பது அவனுடைய அனுமானம். படித் துறையில் இந் நேரம் கும்பல் இருக்கும். எனவே, நேராகப் படுகைக் கரைக்குப்போவாள் என்பதும் நிச்சயம்.

அவளுக்குப் பத்தடி பின்னாலேயே சின்னு நடந்தான். அவள் திரும்பியே பார்க்காமல் விடுவிடென்று சந்து திரும்பிப் பெரிய வீதிக்குள் புகுந்து ரயில்வே ஸ்டேஷன் பாதையில் நடந்தாள். ஸ்டேஷன் கட்டடத்துக்குள் நுழைந்து, தூங்குமூஞ்சி மரத்தின் கீழ் இருந்த பெஞ்சியில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

காலை வேளையாதலால் ஸ்டேஷன், பால் தவலைகளும் தொழிலாளர்களும் சாப்பாட்டுத் தூக்குகளுமாகக் கலகலப்பாக இருந்தது. 'ஷட்டில்' வந்து நின்றிருந்தது. யாரும் அவளை என்ன ஏதென்று விசாரிக்கவில்லை.

சின்னத்துரை நேராக அவள் அருகில் போய் நின்றான்.

"இதுதான் நல்ல பெண்ணுக்கு அடையாளம். திரும்ப ஊருக்குப் போகிறாயா, பானு?" என்றான்.

அவள் பதிலே பேசவில்லை. ஆனால் கைவிரல்களைக் கோத்துக் கோத்துப் பிரித்துக் கொண்டிருந்தாள்.



"நானும் வரட்டுமா, பானு? எனக்கும் பெரியவரைப் பார்க்க வேண்டும் போல் இருக்கிறது."

அவள் விரல் சொட்டையை விட்டு அவனை நிமிர்ந்து பார்த்தாள். அந்தப் பார்வையின் அர்த்தம் அவனுக்குச் சிறிதும் விளங்கவில்லை.

"...கொஞ்ச நாளைக்கு இப்படித்தான் இருக்கும். நாலைந்து மாதங்கள் போய் ஒரு குட்டிப் பயல் பிறந்து விட்டால் அப்போது எல்லாம் சீர்திருந்திப் போகும், பானு!" என்று சிரித்துக் கொண்டே சின்னு பெரிய கிழவனைப் போல் சமாதானம் கூறினான்.

"நான் அங்கே போகப் போவதில்லை, அண்ணா!"

தெறித்து விழுந்தாற் போல் வந்தன வார்த்தைகள். அதைக் கேட்டதும் அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது.



"பின்னே? ரயில் பாதையில் தலை கொடுப்பதாக உத்தேசமா?"

அழுது அழுது ஓய்ந்திருந்த பானு அபூர்வமாகச் சிரித்தாள்.

"என்னைச் சாகச் சொல்லுகிறாயா, அண்ணா? நான் ஏன் சாக வேண்டும்? எனக்கும் வாழ்வதற்கு உரிமை உண்டு. இல்லையா?" என்று கேட்டாள்.

சின்னத்துரை அவளை ஒரு நிமிஷம் கூர்ந்து நோக்கினான்.

இவளுக்கு ஏதாவது 'மறை' தளர்ந்து போயிருக்குமோ?

"பேஷாக வாழ். இப்போது காப்பி வாங்கித் தரட்டுமா? காப்பி முதல் தரமாக இருக்கும். நல்ல வேளையாக அம்மா கொடுத்த காப்பியை வேண்டாம் என்று வந்தாய். முக்கால் பாகம் கொத்துக் கடலைக் காப்பி."

"வாங்கிக் கொண்டு வாருங்கள்" என்று அவள் இடுப்பில் சேலை மடிப்பில் செருகிக் கொண்டிருந்த சிறிய பர்ஸை எடுத்து எட்டணா சில்லறையைக் கொடுத்தாள்.

அவன் காப்பி வாங்கி வந்து கொடுத்தான். அவன் மறுபடியும் கேட்டான்:

"எங்கே போகப்போகிறாய், பானு?"

"எங்கேயோ போகிறேன். உங்களுக்கு என்னால் தொந்தரவும் அவப்பெயரும் கூடாதல்லவா? நீங்கள் திரும்பிப் போய் விடுங்கள், அண்ணா!" என்றாள் பானு.

"அப்படியானால் இங்கிருந்து காவேரிக்கரைக்குப் போகிறாயாக்கும்?"

"நான் நிச்சயமாக இப்போது சாக மாட்டேன், அண்ணா! காவேரித் தண்ணீரை நினைத்து விட்டாலே எனக்குக் குளிருகிறது."

"பின்னே எங்கேதான் போவாய்?"

"நானே இன்னும் யோசித்து முடியவில்லை. எங்கே என்று கேட்டால்...?"

சின்னத்துரைக்குச் சட்டென்று ஒரு யோசனை உதித்தது.

ராகவபுரத்தில் வியாபார மூலம் அவனுக்குப் பழக்கமான அம்மாளின் நினைவு வந்தது. பள்ளிக்கூடத் தலைவி அவள். தனியாக ஒரு வீட்டில் அந்த அம்மாள் இருந்தாள். 'அநாதைப் பெண், இவள். நாலைந்துநாட்கள் பள்ளிக்கூடத்தில் ஏதேனும் வேலைகொடுத்தேனும் வைத்துக் கொள்ளுங்கள்' என்று கேட்கலாமே? அந்த அம்மாள் அப்படி மாட்டேன் என்று நிராகரித்து விடமாட்டாள். அதற்குள் அவனே புறப்பட்டுப் போய் மார்க்கபந்துவைப் பார்த்து, ஒரு மாதிரியாகப் பானுவை அவர்கள் வீட்டில் சேர்த்து விடலாம் அல்லவா? ஆனால் அவன் யோசனை அவளுக்குத் தெரியக் கூடாது.

"நான் ஓரிடத்திலே வேலைக்கு அமர்த்தி விடட்டுமா, பானு?" என்று கேட்டான் சின்னத்துரை.

"எங்கே? யார் வீட்டிலே?"

அவள் சிரிப்பிலே கேலி, துன்பம் இரண்டும் இழையோடின.

"நீ ஒப்புக் கொள்கிறாயா, சொல்?"

"என்னை யார் வேலைக்கு வைத்துக் கொள்வார்கள், அண்ணா?"

"உனக்குச் சம்மதமா சொல்லு. நான் மீதியை ஏற்பாடு செய்கிறேன்."

"அப்படி யார் இருக்கிறார்கள்?"

சின்னத்துரை வேலை தாற்காலிகமாக நாலைந்து நாட்களுக்கு என்பதை மறைத்துக் கொண்டு தன் யோசனையை வெளியிட்டான்.

"எனக்குப் பள்ளிக்கூடத்தில் என்ன வேலை கொடுப்பார்கள்? வீட்டிலே சமையல் வேலைதான் கொடுப்பார்கள். அதுவும்கூட எனக்கு நம்பிக்கையாகப் படவில்லை...."

"கேட்டுப்பார்க்கக்கூடாதா, பானு?"

அவள் அரை மனசாகத் தலையை ஆட்டி வைத்தாள்.

"அப்படியானால் நீ இங்கேயே இருக்கிறாயா? ஒரு நொடியில் வீட்டுக்குப் போய்விட்டு வந்து விடுகிறேன்!"

"ஒரு நொடி என்ன? வண்டிதான் போய்க் கொண்டே இருக்கிறதே? வீட்டுக்குப் போய் வேலைகளை முடித்துக் கொண்டு வாருங்கள். நான் இங்கேயே

# விரைவில் ஆரோக்கியம் பெறும் வழியை அவன் கண்டுகொண்டான்

இந்த வாலிபரைப் போன்று நீங்களும் கடும் உழைப்பிற்குப் போதிய தெம்புணர்ச்சி இன்றி இருந்தால், அதன் காரணம் ஒரு வேளை உங்களுக்குத் தேவையான எல்லா ஊட்டமும் உங்கள் ஆகாரத்திலிருந்து கிடைக்காமலிருக்கலாம். நீங்களும் அவர் செய்ததைப் போன்று செய்யவும்— உங்கள் தினசரி சாப்பாட்டுடன் 'ஓவல்டின்'னையும் சேருங்கள். இந்த ருசிமிக்க பானம், இயற்கையின் மிகச் சிறந்த ஆகாராதிகளுடன் அதிகப்படி வைட்டமின்களும் சேர்ந்து தயாரிக்கப் பெற்ற சுத்தமான போஷாக்காகும். இது சுலபமாக ஜீர்ணிக்கக் கூடியது. அத்துடன் இதர ஆகாராதிகளையும் ஜீர்ணிக்க உதவுகிறது. இரவில் உறங்கு முன் ஒரு கப் சாப்பிடுவதால் நல்ல நித்திரையை விருத்தி செய்து உங்கள் உடலுக்கும் மூளைக்கும் புத்துணர்ச்சியளித்து உங்கள் சக்தியையும் சத்துவத்தையும் அதிகரிக்கச் செய்கிறது.




ரேடியோ சிலோன் ஓவல்டின் அமெச்சூர் நேரங்களைக் கேளுங்கள்: (தமிழ் 41.72 மீட்டர்கள்) சனிக்கிழமைகளில் இரவு 8 முதல் 8.30 மணி வரை. (ஆங்கிலம் — 9520 கிலோ சைகிள், 31 மீட்டர்கள்) ஞாயிற்றுக்கிழமைகளில் இரவு 8 முதல் 8.30 மணி வரை.

பிரதியொரு டின்னும் ஆரோக்கிய மயமான

# ஓவல்டின்



விநியோகஸ்தர்கள்:

கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.

IV. 503

# கிரைப் ஸிரப் - ஐ. டி. எல்.

சிசுக்களின் ஜீரணக் கோளாறுகளை நீக்கும்
பிரபல நிவாரணி. உடனே குணம் தெரியும்.



தொடர்ந்து உபயோகித்தாலும்
ஹானி விளைவிக்காதது.




ஒரு ஐ. டி. எல். தயாரிப்பு




குழந்தைகள் விரும்பிச்
சாப்பிடக் கூடியது

தயாரிப்பவர்கள்

ஸ்ரீ மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேட்டரி லிட்.,
மல்லேஸ்வரம், பெங்களூர்-3.

விற்பனை டிப்போ: 35/37, தம்பு செட்டி தெரு, சென்னை-1.

---



## தொன்றுதொட்டே புகழ் பெற்றது

புராதன காலத்திலிருந்தே கிருமிகளை அடியோடு கொன்று வெளியேற்றுவதற்கு மிகச் சிறந்தது நீம் (வேம்பு) என இந்தியாவெங்கும் ஒப்புக்கொள்ளப் பட்டது.
வேம்பின் இயல்பான இக் குணங்கள் நீம் டூத் பேஸ்டில் அபரிமிதமாக இருப்பதே அதன் சிறப்புக்கு முக்கிய காரணம். பற்கள், ஈறுகள் நன்கு பாதுகாக்கப்பட, இன்றைய பல் வைத்தியத்தில் கையாளப்படும் பொருள்கள் யாவும் இதிலிருக்கின்றன. நீம் டூத் பேஸ்டுடன் வேறு எந்த பற்பசையையும் ஒப்பிட முடியாது.




கல்கத்தா கெமிகல் கோ., லிட்., கல்கத்தா-29. தென்னிந்திய ஆபீஸ்: 6/149, பிராட்வே, சென்னை-1

உட்கார்ந்திருக்கிறேன், பார்க்கலாம்'' என்றான் அவன்.

''இங்கேயே இரு, பத்து நிமிஷத்தில் வந்துவிடுகிறேன்!'' அவசரம் அவசரமாக அப்படியே காவேரிக் கரைக்கு ஓடினான். பல்லைத் துலக்கிவிட்டு ஒரு முழுக்குப் போட்டான். ஓட்டமும் நடையுமாக வீட்டுக்கு வந்து வேறு வேட்டி-சட்டை அணிந்து கொண்டு தலையை வாரிக் கொண்டான். அம்மா கொடுத்த காப்பியைக் குடித்தான். 'டவுன்'வரை போவதாகச் சொல்லிக் கொண்டே அவள் கூப்பிடக் கூப்பிடக் காதிலேயே வாங்கிக் கொள்ளாதவனாக ஒரே மூச்சில் வெகு வேகமாக ஸ்டேஷனுக்கு ஓடி வந்தான். ஆனால் என்ன ஏமாற்றம்! தூங்குமூஞ்சி மரத்தடியில் பானுவைக் காணவில்லை.

அக்கம் பக்கம் சுற்றினான். பார்வையால் சலித்தான். ஊஹூம்! பலனில்லை.

போர்ட்டர் கந்தப்பனையும் ஸ்டேஷன் மாஸ்டர் பஞ்சாட்சரத்தையும் அவன் விசாரித்தான். அவள் சற்று முன் வந்து போன ஈரோடு 'பாஸஞ்ச'ரில் ஏறிப் போனதாகச் செய்தி தெரிவித்தார்கள்.

''டிக்கெட் வாங்கிக் கொண்டாளா? நீ பார்த்தாயா, கந்தப்பா?'' என்று அவன் விசாரித்ததற்கு, ''என்ன, எனக்குத் தெரியாதா? போய் டிக்கெட் வாங்கிக்கிட்டுத்தான் வந்தது. வண்டியிலே ஏறிட்டுப்போச்சு'' என்றான் கந்தப்பன்.

சின்னத்துரை ஒரு கணம் அயர்ந்துபோய் நின்றான்.

பிறகு தன்னைத் தானே நொந்து கொண்டவனாக வீடு திரும்பினான். அவன் பெரிய தெருமுனைக்கு வருவதற்குள் செய்தி ரன்னர் ரங்கசாமி மூலம் ஊர் நெடுகிலும் பரவிவிட்ட சமாசாரம் தெரியவந்தது. அவனை நிறுத்தி வைத்து ஐயாசாமி கேள்விமேல் கேள்வி கேட்டுத் திணற அடித்தார்.

''வந்தாள், போனாள். எனக்குத் தெரியாது மாமா!'' என்று தைரியமாக ஒரே வார்த்தையில் அவரைத் திருப்பியடித்தான்.

அவன் சோர்ந்தவனாக வீடு திரும்புவதைக் கண்ட பின்னரே கமலம்மாள் நிம்மதியுடன் பெருமூச்செறிந்தாள்.

சில நாட்கள் சென்றபிறகு சின்னுவின் பேருக்கு ஒரு கடிதம் வந்தது. விட்டுக் கதவு இலக்கம் விலாசத்தில் போடப்படவில்லை. வெறுமனே 'சின்னத்துரை, பிரமராயர் சந்து, பூந்துறை' என்று எழுதியிருந்தது. பானுவின் கையெழுத்தை அவன் நினைவு வரும்படி பார்த்திருக்கவில்லை. என்றாலும், அது அவள் எழுத்தாகத்தானிருக்கவேண்டும். கோணலும் மாணலும் குண்டும் நெளிவுமாக எழுத்துக்கள் இருந்தன.

அண்ணாவுக்கு,

பானு நமஸ்காரம். நான் அசட்டுத்தனமாக யோசிக்காமல் அங்கிருந்து புறப்பட்டு வந்து விட்டேன். மனசு எப்படியோ அப்படிப் பலமில்லாமல் உறுதியுடன் நிற்காமல் நொந்து அலைந்து விட்டது. அன்று ஸ்டேஷனில் என்னை விட்டு நீங்கள் போன மறு நிமிஷமே மாமா என்னைத் தேடி வந்தார். மறு வார்த்தை பேசாமல் அவருடன் 'பாசஞ்ச'ரில் ஏறிவிட்டேன். இதுதான் எனக்கு உரிய இடம். நல்ல வேளையாக வேறு அபவாதத்துக்கு ஆளாகாமல் என்னை அத்தையும் நீங்களும் காப்பாற்றி விட்டீர்கள். உங்களுக்குக் கோடி நமஸ்காரம். உங்கள் தங்கை,

பானு.

சினிமாக்களில் கடிதத்துக்குப் பின்னால் கதாநாயகியின் 'குளோஸ் அப்' முகமும் கண்ணீர்த் துளியும் காட்டுவார்களே? அப்படி அந்தக் கடிதத்துக்குப் பின்னால் பானுவின் முகமண்டலம் தோன்றி அவளுடைய கரிய பெரிய விழிகளிலிருந்து கண்ணீர்த் துளிகள் உருண்டு அந்தக் கடிதம் முழுவதிலும் தோய்ந்து நின்றாற்போல் சின்னுவுக்கு ஒரு பிரமை உண்டாயிற்று.



பாவம், சந்தர்ப்பங்களின் சதியால் வாழ்நாள் முழுவதும் அவள் வாடிய மலராக நிற்க வேண்டும். அவளுக்கு ஆறுதல் சொல்லக்கூட ஒருவர் கிடையாது.

அவனுக்கு இருதயம் கசிந்தது. கடிதத்தைப் பத்திரமாக மடித்து உள்ளே எடுத்து வைத்தான்.

சில மாதங்கள் சென்றபின் ஒருநாள் பரிதிமால் ஈட்டுத் தொகையைக் கூட இழந்து விடும்படி தேர்தலில் படுதோல்வி அடைந்த செய்தி பத்திரிகைகளில் கொட்டை எழுத்துக்களில் பிரசுரமாகியிருந்தது!

"உம். அதனாலேதானே தம்பி இப்பொழுது அவர் கட்சியை விட்டு விலகிக் கொள்கையை மாற்றிக் கொண்டு விட்டார் போலும்!"

வெற்றிலைச் சாற்றைக்கூட உமிழாமல் இந்நேரம்வரை கதை கேட்ட அந்தோனி வெளியே சென்று துப்பிவிட்டு வந்து கேட்ட கேள்வி இது.

சின்னத்துரையின் கண்கள் பிரகாசத்தால் ஒளிர்ந்தன.

"என்ன கட்சியோ, என்ன கொள்கையோ...." என்றான் அவன் எங்கோ பார்த்துக்கொண்டு.

"இல்லே தம்பி. நான் கொஞ்ச நாட்கள் முன்னே பத்திரிகையிலே பார்த்தேனே? அவரே சொன்னதாகப் போட்டிருந்தது. 'பலாத்காரக் கொள்கையிலே எனக்கு இருந்த நம்பிக்கை போய் விட்டது' என்று அவர் வாயாலேயே வந்துவிட்டது. ஆமாம் தம்பி, இப்பொழுது ஒத்துப் போயிட்டாங்க போலிருக்கிறதே? மாலையில் வந்த பொண்ணுதானே...." என்று மெதுவாக இழுத்தார் அந்தோனி.

சின்னுவுக்குத் தொண்டை கம்மியது. "இல்லே....அவள் பானு இல்லே."

"என்னது?"

அந்தோனி வாயைப் பிளந்தார். "அந்தப் பெண் பின்னே யாரு? நான் அவரைப் பார்க்கையிலே பரிதிமால் என்று கண்டு கொண்டேன். அவங்க யாராம்?" என்று கேட்டார்.

சின்னுவும் வறட்டுச் சிரிப்பு சிரித்தான். "யாரோ? அங்கயற்கண்ணியம்மையாரிடம் கொள்கை மாற்றத்தால் வேற்றுமை ஏற்பட்டு, இப்போது தழுவியிருக்கும் கொள்கைகளுக்கேற்ப......" முழுதும் முடிக்கவில்லை; உதட்டைக் கடித்துக் கொண்டான்.

"சேச்சே, அப்படி எல்லாம் இருக்காது, தம்பி! நாம் ஏன் கெடுதலாக நினைக்க வேண்டும்?"

"அப்படி நினைக்கும்படி தானே நடந்திருக்கிறது?"

"அதெல்லாம் இருக்காது. நீங்களே போய்ப் பார்த்துவிட்டு வாருங்க. நான் சொன்னேனே என்று நினைத்துக் கொள்வீர்கள். தூங்கப்போகலாம் தம்பி. மணி ரொம்ப ஆகியிருக்கும்...." என்று அவர் கொட்டாவி விட்டார்.

அவரை அனுப்பிவிட்டு வாசலிலேயே வந்து நின்றான் சின்னத்துரை.

அவனுக்குப் படுத்தால்கூடத் தூக்கம் வரும் என்று தோன்றவில்லை. அந்தோனி பழைய சம்பவங்களைக் கிளறியதால், அவன் உள்ளம் அவற்றைச் சுற்றியே யல்லவா வட்டமிடுகிறது?

பானு உண்மையில் இப்போது சந்தோஷமாக இருக்க மாட்டாள் என்ற உணர்வே அவன் உள்ளமெங்கும் வியாபித்து நின்றது. அறிந்து அவன் அந்த அநாதைப் பெண்ணுக்கு ஒருவித ஆறுதலும் அளிக்காமல் எப்படி இருப்பான்? 'உங்கள் தங்கை' என்ற சொல்லிலே அவள் வைத்துள்ள நம்பிக்கை, ஈரம், பரிவு, மென்மை எல்லாவற்றையும் அவன் எப்படி மறுப்பான்?

எவ்வளவு முயன்றும் சின்னுவால் சமாதானமாக இருக்க முடியவில்லை. நித்திரா தேவி அவனைத் தழுவ மறுத்தாள். அடி மனசில், உள்ளத்தின் உள்ளே புதைந்திருந்த காதல் உணர்ச்சி பொங்கு புனல் போலச் சீறிக் கொண்டு எழும்பியது.

அவனுடைய குடிசையில் குத்துவிளக்காய்ச் சுடரொளி தரவேண்டியவள் எங்கோ பணக்காரர் வீட்டிலே சோபை இழந்து மூலையிலே கிடக்கிறாள்! அவள் ஸ்தானத்தில்...இடையில் வந்து புகுந்த மின்விளக்கு கொழிக்கிறது!

...கசந்து வெறுத்து வந்தவளை அவன் தானே விரட்டி அடித்தான்? தைரியமாக அவனால் அவளை ஒருநாள் வைத்துக்கொண்டு ஆறுதலளிக்க முடிந்ததா?

ஆனால் இனிமேல்தான் என்ன? பூந்துறையைப்போல் இவ்வூரில் வம்பு பேச ரங்கசாமியோ, ருக்மணியோ இல்லையே? வீட்டுக்குள் அம்மாவும் இல்லை. பானுவுக்கு ஆறுதலளிக்க அவன் யாருக்குப் பயப்பட வேண்டும்? அவளை இங்கே அழைத்து வந்துவிட்டால் என்ன என்று அவனுக்குத் தோன்றியது. (தொடரும்)



எழுத்தாளர் ஸ்ரீ. ஏ. கே. பட்டுசாமி அவர்களின் சகோதரர் ஸ்ரீ. ஏ. கே. கிருஷ்ணஸ்வாமிக்கும் ஸ்ரீ வி. டி. கோபாலாச்சாரியார் அவர்களின் புதல்வி சௌ. சரோஜாவுக்கும் 20-1.57 அன்று சிங்கப்பெருமாள் கோவிலில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

# லட்சியப் பெண்

வேதா

அலுவல்கள் முடிந்து சாரதா வீட்டுக்கு வந்தபோது நடுப்பகலாகிவிட்டது. வெய்யிலின் வெப்பத்தினால் ஒருவித அயர்ச்சியும், களைப்பும் வாட்ட, "உஸ், அப்பாடா!" என்றவாறு கூடத்தின் மத்தியிலிருந்த நாற்காலியில் சாய்ந்து கொண்டாள்.

முத்து, முத்தாக அரும்பிய வியர்வை பெருக முகத்தில் வாய்க்காலாக வழிந்தோடியது. சோர்ந்து போய் வாடிய பூங்கொடியெனத் துவண்டு கிடக்கும் மகளைக் கண்டு பெருமூச்செறிந்தாள் விசாலம்.

"ஒரு நாளைப்போல் வேளைக்குச் சாப்பிடா விட்டால் அந்த உடம்பு என்னத்துக்காகும்? சொன்னால் கேட்க மாட்டேன் என்கிறாய். சாப்பிட்டு விட்டு வெளியே போகக் கூடாதா? எல்லா வைத்தியர்களும் இப்படியா அலைந்து சீர்குலைக்கிறார்கள்? என்றைக்குத்தான் உனக்குப் புத்தி வருமோ? நிம்மதியான சாப்பாடு, தூக்கம் என்பதில்லாத பிழைப்பு என்ன வேண்டிக் கிடக்கிறது?" வண்டாகத் துளைத்தெடுத்து விட்டு, விசாலம் உட்புறம் நகர்ந்தாள். சாரதா எழுந்து உள்ளே சென்றாள். வெய்யிலில் அலைந்த களைப்புக்குக் குளிர்ந்த நீரில் நீராடியது சற்றுத் தெம்பாகவே இருந்தது சாரதாவுக்கு.

சாப்பிட இலைமுன் அமர்ந்தவள் வாயிற் கதவு தட்டப்படும் ஓசை கேட்டு அவசரமாக எழுந்திருந்தாள். சாதம் எடுக்கப் போன விசாலம் சத்தம் கேட்டுத் திரும்பினாள். பெண் இடத்தை விட்டு எழுந்திருப்பதைக் கண்டு பரபரப்பு எய்தியவளாக, "நீ உட்காரு. நான் போய்ப் பார்க்கிறேன்" என்று சற்றுக் கடுமையாகவே கூறி விட்டுச் சாதத்தை எடுத்து வந்து அவசரமாக இலையில் பரிமாறினாள். ஆனால் சாரதா தாயார் கூறுவதைக் காதிலேயே வாங்கிக் கொள்ளாமல் எழுந்து வாயிற்புறம் சென்று விட்டாள்.

"டாக்டரம்மா இருக்கிறாங்களா? ஐயா கையோடு அழைத்து வரச் சொன்னாருங்க. குழந்தை மாடிப்படியிலே உருண்டு விழுந்து காயப்பட்டு மயக்கமாகக் கிடக்குது. சீக்கிரமாக வாங்க!" என்ற அவசரச் செய்தியுடன் ஒருவன் நின்றிருந்தான் வாசலிலே.

"இதோ வந்துவிட்டேன். இருப்பா!" என அவனுக்குப் பதில் அளித்த சாரதா உட்புறம் விரைந்து சென்றாள். பெண்ணின் பின்னாலேயே வந்து விஷயத்தைத் தெரிந்து கொண்ட விசாலம் அந்த ஆளை அடங்கா ஆத்திரத்துடன் விழித்துப் பார்த்தாள். "இன்னும் அம்மா சாப்பிடவேயில்லை. அதற்குள் வந்து விட்டாயா? சிறிது நேரம் இரு. அதற்குள் ஒன்றும் முழுகி விடாது. அம்மா சாப்பிட்டு விட்டு வந்துடுவாங்க!"

"உனக்குப் பைத்தியமா அம்மா! ஒரு உயிர் அங்கு துடிக்கும்போது எப்படியம்மா எனக்குச் சாப்பிடப் பிடிக்கும்? உயிரைவிடச் சாப்பாடுதான் பிரதானமானதா? குடி முழுகி விடுமா என்கிறாயே? நீயே இப்படிப் பேசினால்..? ஓர் வைத்தியரின் உதாசீனத்தினால் தானே நம் குடி முழுகியது. அதை நீ மறந்து விட்டாயா? என்னைத் தடுக்காதே அம்மா! நான் போய்ப் பார்த்து வைத்தியம் செய்து விட்டுத்தான் சாப்பிடுவேன். விடு வழியை!"

வழி மறித்து நின்ற தாயைத் தள்ளிக் கொண்டு வெளியே வந்த சாரதா வீதியில் காத்திருந்த வண்டியில் போய் ஏறிக் கொண்டாள். அழைக்க வந்த ஆள் வண்டி ஓட்டி





றுன். அவர்கள் அவசரத்தை அறிந்தது போல் குதிரையும் நாலு கால் பாய்ச்சலில் பறந்தது.

வீதியையே வெறித்து நோக்கியவாறு நின்றாள் விசாலம். பெண்ணின் பேச்சு அவள் வாயைப் புதைத்து விட்டது. பதில் கூற முடியாமல், உன்மத்தம் பிடித்தவளைப் போல் அவள் வரவை எதிர்நோக்கிக் காத்திருந்தாள். இதை என்னவென்பது? விதி செய்த சதி என்பதா? இல்லை, வினை பிடிவாதம் என்பதா? வயதான காலத்தில் பேரன், பேத்திகளுடன் கொஞ்சி, விளையாடி மகிழ்ந்து காலம் கழிக்க வேண்டியது போக, சமைக்கவும், வீட்டைக் காவல் காத்துக்கொண்டு, ஏகாங்கியான மகளைப் பற்றிய கவலையோடு வாழ நேர்ந்த தன் நிலையை நினைந்தபோது வருத்தமாக இருந்தது.

சாரதா திரும்பி வந்தபோது மணி இரண்டு ஆகி விட்டது. சாதகப் பட்சியெனத் தன் வரவுக்காக ஏங்கி நிற்கும் தாயைக் கண்ட சாரதாவுக்குப் பச்சாத்தாபம் மேலிட்டது. "என்ன அம்மா! வாசலிலேயே பார்த்துக் கொண்டிருந்தாயா? இதோ ஒரு நொடியில் வந்துவிட்டேன். நீ போய் இலையைப் போடு" என்று வாடாத புன்னகையுடன் தாயைப் பார்த்துக் கூறிய சாரதா உள்ளே விரைந்தாள்.

"அவ்வளவு அவசரமாக ஓடினாயே! யாருக்கு என்ன ஆபத்து அம்மா?" சாப்பாடு வேலை எல்லாம் ஆகி ஓய்வாக அமர்ந்திருக்கையில் பெண்ணைக் கேட்டாள் விசாலம்.

"ஐந்து வயதுப் பையன், மாடிப்படியில் ஓடிவரும் போது உருண்டு விழுந்து விட்டான். மண்டையில் பலத்த காயம். அதிக ரத்தம் சேதமாகி விடவே மூர்ச்சையாகி விட்டது. அதனால்தான் அத்தனை அவசரமாக ஆள் வந்தான் என்னை அழைத்துப் போக. நான் அப்போது போய்க் காயத்துக்கும் கட்டுக் கட்டி மயக்கம் தெளிவதற்கும் சிகிச்சை செய்யாதிருந்தால் இந் நேரம் குழந்தையின் உயிர் போயிருக்கும். மேலும் அதிக ரத்தம் சேதமாகி விட்டதால் ரத்தம் வேறு செலுத்தும்படியாகி விட்டது. நான் உடனே போகாதிருந்தால் வீணாக ஓர் உயிர் போயிருக்கும் அல்லவா? இது தெரியாமல் பேசுகிறாயே! அதுவுமன்றி அந்தக் குழந்தை இங்கு தாத்தா வீட்டில் இருக்கிறது. பெற்றோர் வெளியூரில் இருக்கிறார்களாம். இவர்களுக்கு ஏதேனும் ஏற்பட்டால் குழந்தையைக் கவனிப்பது யார்?" என்றாள் சாரதா. இதைக் கேட்ட விசாலம் சிரித்தாள்.

"சாரதா! நீ தன்னை மறந்து பேசுகிறாயே! இப்போது உன் நிலையும் அப்படித்தானே இருக்கிறது! நான் கண்ணை மூடி விட்டால் உன் கதி என்ன? துணையின்றிப் பெண்

ஜன்மம் தவிக்கத்தானே வேண்டி வரும்; அது தெரியாமல் ஊருக்கு உபதேசம் செய்கிறாயே! என்னமோ போ. எவன் கையிலாவது உன்னை ஒப்படைத்து விட்டுச் செத்தேனானால்தான் என் நெஞ்சு வேகும். கும், உனக்கு என்று தான் புத்தி வருமோ!" நீண்டதொரு பெருமூச்சுடன்பிரசங்கத்தை முடித்தாள் விசாலம்.

பெற்றோரின் ஒரே அருமைப் புதல்வியான சாரதா சீரும், சிறப்புமாக வளர்ந்ததில் வியப்பில்லை. அவளுடைய ஒப்புயர்வற்ற அழகு பெற்றோரின் பெருமையை எல்லை மீறச் செய்தது. கல்வியிலோ கலைவாணியின் அவதாரமாகவே திகழ்ந்தாள் அவள். அவர்களின் பூரிப்புக்குக் கேட்க வேண்டுமா? சாரதாவின் தந்தைக்கு ரயில்வேயில் ஒரு பொறுப்புள்ள உத்தியோகம். தன் வருமானம் முழுவதையும் தம் செல்வ மகளுக்காகவே வாரி இறைத்தார் அவர்.

சாரதாவின் பதினாறாவது வயதிலேதான் அவள் வாழ்வில் இருள் கவிழ்ந்தது. அதன் பின் ஒளியின் ரேகைகள் அவள் வாழ்க்கையில் படரவே இல்லை. ஏன் அவளைப் பொறுத்த வரையில் அவள் வாழ்க்கை அஸ்தமித்துத் தான் விட்டது.

சாரதா பெரிய தெரு வழியாகத்தான் பள்ளிக்குச் செல்வது வழக்கம். அங்கு ஒரு வைத்தியசாலை இருந்தது. வெகு நாள் வரை சாரதாவுக்கு அங்கு செல்ல வாய்ப்புக் கிடைக்கவில்லை. ஒரு நாள் அவள் தந்தை ஊரில் இல்லாதபோது விசாலத்துக்குக் குளிர் சுரம் கண்டது. தனியாக இருந்த சாரதாவுக்குப் பயமாகி விட்டது. செய்வதை தெரியாது அவள் தவிக்கையில், எதேச்சையாக அங்கு வந்த அவள் பள்ளித் தோழி ஒருத்தி தனக்கு உறவினரான டாக்டரிடம் கூட்டிச் செல்வதாகக் கூறி அவர்களை அந்த வைத்தியசாலைக்கு அழைத்து வந்தாள்.

அங்கிருந்த இளம் டாக்டரான ஹரன் என்பவர் விசாலத்தின் உடலை அக்கறையாகக் கவனித்து மருந்து கொடுத்தார். விசாலத்துக்கு அவர் மருந்து பிடித்தது. சாரதாவுக்கோ, அவர் பேச்சு, உருவம் எல்லாமே பிடித்து விட்டன.

அன்றிலிருந்து சாரதா புதுப் பெண்ணாகி விட்டாள். தினமும் வைத்தியசாலை வழியாகப் பள்ளிக்குப் போகும் போதும், வரும் போதும் அவள் பார்வை அங்கே ஆவலாகத் தாவும். சொல்லி வைத்தாற்போல் அந்த டாக்டரும் வாசலில் வந்து நின்றிருப்பார். புன்னகையோடு, இருவர் பார்வையும் கண நேரம் கலந்து பிரியும். இவ்விதமாக ஆரம்பித்த நட்பு மெள்ள நாளடைவில் மணிக் கணக்காகப் பேசுமளவுக்கு வந்து நின்றது. இப்படியாக இருவரும் இன்ப உலகில் சஞ்சரித்தனர். இது சாரதாவின் பெற்றோருக்குத் தெரியாது. விவாகப் பேச்சு எழும்போது சொல்லிக் கொள்ளலாம் என்றுதான் சாரதா நினைத்திருந்தாள். அவள் விருப்பப்படிதான் அவள் தந்தை செய்வார் என்பது அவள் அறியாததல்லவே. ஆகவே கவலையற்று இருந்தாள் அவள்.

இப்படியாகத் தானே நாட்கள் இன்பமாக ஓடிக் கொண்டிருந்தன. எதற்கும் ஓர் எல்லை உண்டு என்பதை எவரும் எண்ணிப் பார்ப்பதே இல்லை. இன்பமோ, துன்பமோ எதுவும் நீடித்திருப்பதில்லை யல்லவா?

சாரதாவுக்குப் பரீட்சை நாள் நெருங்குகையில் அவள் தந்தை உடல்நலமின்றிப் படுக்கையில் படுத்து விட்டார். அவருடைய அத்யந்த வைத்திய நண்பரிடம்தான் அவர் எப்போதும் வைத்தியம் செய்து கொள்வார்.

அதன்படி அந்த நண்பர்தான் முதலில் பார்த்து அவருக்கு மருந்துகொடுத்தார். மூன்றாம் நாள் அவ் வைத்திய நண்பருக்கு ஓர் அவசரகாரியமாகப் பட்டணம் செல்லவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆகவே அவர் சாரதாவின் தந்தையை ஊருக்குச் செல்லும் முன்பு வந்து பார்த்து ஒரு நாளைய மருந்தும் கொடுத்து விட்டு, தாம் வரும் வரை உடம்பைக் கவனித்துக் கொள்ளுமாறு கூறி விட்டுப் போய் விட்டார்.

அன்று ஒருவித மாறுதலுமின்றிக் கழிந்தது.

மறுநாள் சாரதாவுக்குப் பரீட்சை தினம். ஏதோ ஒரு இனமறியாத வேதனை சாரதாவின் நெஞ்சை அரித்துக் கொண்டே யிருந்தது. மனமின்றியேதான் பள்ளிக்குச் சென்றாள் அவள். அவளுக்கு எழுதவோ படிக்கவோ முடியவேயில்லை. பாவம், வரப்போகும் தவறைப் பற்றி முன்கூட்டி அறிந்திருந்தாளானால் வீட்டை விட்டு அவள் நகர்ந்தே இருக்க மாட்டாள்.

சாரதாவின் தந்தைக்கோ ஜுரம் மணிக்கு, மணி விஷம் ஏறுவதுபோல் ஏறிக் கொண்டே யிருந்தது. விதி விசாலத்தின் அறிவை மறைத்தது போலும். இல்லையானால் கணவரின் நிலை வெகு மோசமாகும் வரை சும்மா இருந்திருப்பாளா? பகல் ஒரு மணிக்குக் கணவருக்கு ஆகாரம் கொடுக்க வந்தபோது தான் அவர் பேச்சு, மூச்சற்றுக் கிடப்பதைக் கண்டு திகிலடைந்தாள்.

மிகுந்த நடுக்கத்தோடு அவர் உடலைத் தொட்டு அசைத்தாள். அழைத்தாள். பதிலே யில்லை. மெல்லிய இழையாக அவருக்கு மூச்சு ஓடிக் கொண்டிருந்தது.

பயத்தில் அவளுக்குக் கை காலே ஓடவில்லை. அர்த்தமின்றிக் கையைப் பிசைந்து கொண்டு இங்கும், அங்கும் ஓடினாள். வேலைக்காரனைத் துரத்தினாள் டாக்டரை அழைத்துவர. அவன் பறந்தான். அவளுக்கு இருந்த குழப்பத்தில் அதை முதலிலேயே செய்யத் தோன்றவில்லை. டாக்டரின் வரவை எதிர் நோக்கித் துடிக்கும் உள்ளத்துடன், உள்ளுக்கும் வாசலுக்குமாக அலைந்தாள்.

சீக்கிரமே வேலைக்காரன் திரும்பி வந்தான். டாக்டருடனல்ல; தனியாகத்தான்!

"அவரு இப்போதுதான் வேலை முடிஞ்சு தூங்கப்போறாராம். இப்போ வரமாட்டாரு. நாலு மணிக்குத்தான் வருவாருன்னு சொல்லி விட்டாங்க அவங்க வீட்டிலே" என்றான் அவன் தலையைச் சொறிந்தவாறு.

விசாலத்துக்கு 'ஓ' வெனக் கதறவேண்டும் போல் இருந்தது. இதைக் கேட்டதும்.

"இப்படிக் கூட உண்டா? பார்க்கும் நேரம் பார்த்துத்தான் உடம்புக்கு வருமா? என்ன டாக்டர் இவன்? ராக்ஷசன்?" என்று வாயில் வந்தபடி நிந்தித்தாள். வேறு என்ன



# கெமிகல் டெஸ்டிங் அண்டு அனலிடிகல் லேபரடரி

(இரசாயன பரிசோதனை நிலையம்)

(சென்னை அரசாங்க, கைத் தொழில் & வர்த்தக இலாகா)

**கவர்ன்மெண்டு டெக்ஸ்டைல் இன்ஸ்டிடியூட் கட்டிடம் வண்ணாரப்பேட்டை, சென்னை**

டெலிபோன் நெ. 3062, எக்ஸ்டென்ஷன்

இந் நிலையத்தில் உலோகங்கள், தாதுப் பொருள்கள், மற்றும் இரசாயனப் பொருள்கள் முதலியவைகளைப் பரிசோதனை செய்து அரசாங்க இலாகாக்களுக்கும் மற்றவர்களுக்கும் பத்திரங்களும் அபிப்பிராயங்களும் வழங்கப்படுகின்றன.

மேற்கூறிய பொருள்களை, அவைகள் கிடைக்கும் இடங்களிலும், துறைமுகங்களிலும், மற்றும் எவ்விடங்களிலும் சாம்பிள் செய்து அதற்குகந்த பத்திரங்களும் வழங்கப்படுகின்றன.

விவரங்களுக்கு:

**லேபரடரி சீப் கெமிஸ்டு**

அவர்களுக்கு எழுதவும்

# பாங்க் ஆப் மதுரை லிமிடெட்

(தோற்றம்: 1943)

மதுரை

கிளைகள்:

கோயமுத்தூர், சேலம், புதுக்கோட்டை ராயவரம், கீரனூர் (திருச்சி ஜில்லா)

நீங்கள் எங்கள் வங்கியில் "சேவிங்ஸ் கணக்கு" திறப்பதினால் உண்டாகும் நான்கு பெரும் தன்மைகள்.

1. ரூ. 5/- முதல் மேற்படி கணக்கில் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.
2. தினசரி இருப்புக்கு 3% வட்டி கிடைக்கிறது.
3. வங்கி வழங்கும் "செக்குகள்" மூலம் பணம் திரும்பப் பெறலாம்.
4. முன் அறிவிப்பு எதுவுமின்றி வாரம் ஒன்றுக்கு ரூ. 1000/- வரை பல தடவைகளிலோ, ஒரு மொத்தமாகவோ எடுத்துக் கொள்ளலாம்.

சுறுசுறுப்பும் மரியாதையும் நிறைந்த சேவை

**பி. எஸ். விஸ்வநாதன்**
காரியதரிசி

# தீய ஆஸ்த்மா பிராங்கைட்டிஸ் சளி

## நீங்கள் தூங்கும்போது இளகுகிறது

ஆஸ்த்மா, பிராங்கைட்டிஸ், ஜலதோஷத்தால் மூச்சுத்திணறல், இருமல், தும்மல், மூச்சடைப்பு உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கானவர்கள் இப்போது மெண்டாகோ (Mendaco) அருந்தி அற்புத நிவாரணம் அடைகிறார்கள். இந்த நவீன, விஞ்ஞான, அமெரிக்க மருந்து இரத்தத்தின் வழியே சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடைத்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் தும்மலின்றி சுகமாக சுவாசித்து குழந்தைபோல் தூங்கலாம். கெமிஸ்டிடம் மெண்டாகோ (Mendaco) வாங்குக. திருப்தி இன்றேல் பணம் வாபஸ்.

# நான்கு மருந்துகள் அடங்கிய 'அனஸின்' காட்டிலும் வேறொன்று இவ்வளவு விரைவில் குணமளிப்பதில்லை

**1. க்வினைன் சல்பேட் 2. காப்பின்**
**3. பினஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்**

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனஸின்' விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரிதநிவாரணமளிப்பதில் அனஸினுக்கு இணையொன்றில்லை... அனஸினைப் போல் தீங்கு விளைவிக்காத வில்லை வேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது ஹிருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டு பண்ணவோ செய்யாது. 'அனஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை அணா 2 மட்டுமே

**நான்கு மருந்துகளின் சேர்க்கையான 'அனஸின்' வேண்டுமென்றே கேளுங்கள்**



செய்வது? அவ்வூரிலோ வேறு வைத்தியர்களும் கிடையாது. இருந்த ஒருவரும் ஊரில் இல்லை. நாலு மணி வரையில் காத்திருக்க வேண்டியது தானா?

சித்தப்பிரமை பிடித்தவள் போல் கணவரையும், வீட்டையும் சுற்றிச் சுற்றி வந்தாள். அசைவற்றுக் கிடக்கும் பதியின் நிலை அவள் அடிவயிற்றில் தீயை மூட்டியது. காரிருள் கவிந்து வருவதைப் போன்ற ஒரு பிரமை. நான்கு மணி வரை அவள் எப்படித் தான் காலம் கழித்தாளோ! மூன்றரை யானதுமே வேலையாளை மறுபடியும் டாக்டர் வீட்டுக்குத் துரத்தினாள்.

கடைசியில் ஒரு வழியாக நான்கு மணிக்கு டாக்டர் வந்தார். நோயாளியைக் கவனித்தவர், கையை விரித்தது கண்டு விசாலம் 'ஆ'வென்று அலறினாள். சில நிமிஷங்களிலேயே விசாலத்தின் கணவரின் ஆவியும் பிரிந்தது. பாண்டியனின் சபையில் தோன்றிய கண்ணகியைப் போல்தான் அன்று தோற்றம் அளித்தாள் விசாலமும்.

மாலை வீடு திரும்பிய சாரதா, தந்தையின் உடல் நிலை எப்படியிருக்கிறதோ என்று எண்ணமிட்டவாறு வேகமாக வந்தாள்.

வீதி முனையிலே கூடி நின்ற கும்பலைக் கண்டு பிரமித்தவாறு அகத்திலே அச்சம் தளிர்விட, வீட்டை நெருங்கினாள். வீட்டு வாசலிலும் கூட்டம் கூடியிருப்பது கண்டு, நெஞ்சு துணுக்குற்றவளாய்க் கால்கள் நடுங்கத் தாவி ஓடினாள். உள்ளிருந்து வந்த அழுகை ஒலி அவள் உதிரத்தையே உறையச் செய்தது.

யாருடைய துக்கத்துக்காகவும் எதுவும் நிற்பதில்லையே. எல்லாம் கிரமப்படி நடக்கவே நடந்தது. நெஞ்சு பாரம் குறையும் மட்டும் தாயும் பெண்ணும் அழுதனர். வெகு நேரத்துக்குப் பிறகுதான் சாரதாவுக்குப் பள்ளிக்குச் சென்ற பின்பு வீட்டில் நடந்தவற்றைத் தாயிடம் கேட்டு அறிந்து கொள்ள முடிந்தது. விசாலம் டாக்டர் செய்த மோசத்தை மகளிடம் விவரித்தாள். அவள் என்ன கண்டாள், அவன்தான் தன் மகளின் காதலன் என்பதை?

சாரதாவுக்குத் தலையில் இடிவிழுந்த மாதிரி இருந்தது. அவளுக்கு ஏற்பட்ட உணர்ச்சியை விவரிக்க இயலுமா?

"அட, தெய்வமே! நீ இப்படியா சதி செய்ய வேண்டும்? மிக நல்ல மனிதர்மாதிரி என்னிடம் பேசிப் பழகினாரே, இத்தனை கல்நெஞ்சரா அவர்? கடைசியில் என் காதலனா என் அருமைத்தந்தைக்குக் காலனாகவந்தார்?"

அதற்கு மேல் சாரதாவால் டாக்டர் ஹரனைப் பற்றி நினைக்கவே முடியவில்லை. குடம் பாலில் துளி எலுமிச்சம் பழ ரசம் விட்டதுமே பாலும் திரிந்துவிடுவதைப்போல் இந்தக் கசப்பான செய்தி அவள் உள்ளத்தையே கசப்பாக்கி விட்டது. அமுதமான காதல் நஞ்சாகியது. அதோடு நிற்கவில்லை. கசப்பு, வெறுப்பாகி விஷமாகித் தீராப் பகைமையையே உண்டாக்கி விட்டது. அந்தக் கணமே டாக்டர் ஹரன் அவளுடைய ஜன்மசத்துருவாகி விட்டார்.

'நடந்தது. நடந்து விட்டது. இனிமேல் கொண்டு என்ன செய்வது' என்று வகை புரியாமல் தாயும், மகளும், நட்டாற்றில் விடப்பட்டவர்கள் போல் தவித்தனர். மறு நாள் வைத்திய நண்பர் ஊரிலிருந்து திரும்பி வந்தார். மரணச் செய்தி கேட்டு ஓடோடியும் வந்து அவர்கள் துயரில் பங்கெடுத்துக் கொண்டார். பல பல தேற்று மொழிகள் கூறினார். தாம் அவர்களுக்கு உறுதுணையாக இருப்பதாகக் கூறி ஆறுதலையும், தைரியத்தையும் அவர் ஊட்டினார். இடிந்து போய் உட்கார்ந்து விட்ட விசாலத்துக்குச் சற்றுத் தெம்பு வந்தது என்று கூடச் சொல்லலாம். சாரதாவின் துயரத்தைப் போக்க அவள் படிப்பில் கவனம் செலுத்த வேண்டும் என்று யோசனை கூறினார். சாரதாவும் வேண்டா வெறுப்பாகப் பரீட்சைக்குப் படித்தாள்.

எப்படியோ ஒருவிதமாகப் பரீட்சையும் முடிவுற்றது. அன்று கடைசிப் பரீட்சை எழுதி முடித்து விட்டு, ஒரு கடமையை இறக்கிய நிறைவுடன், வீடு திரும்பிக் கொண்டிருந்தாள் சாரதா.

பெரிய தெருவுக்கு வருகையில் அவளையும் அறியாமல் அவள் உடலில் ஒருவித பதற்றம் ஏற்பட்டது. வைத்தியசாலை வாசலில் டாக்டர் ஹரனைக் கண்ணுற்றதும் தீக்குளித்தவளைப் போல் தேகமெல்லாம் பற்றி எரிந்தது சாரதாவுக்கு. சீக்கிரமே அவ்விடத்தைக் கடக்க விரும்பிய சாரதா எட்டி நடை போட்டாள்.

தன்னைப் பார்த்தும் பாராதவள் போல் செல்லும் சாரதாவின் போக்கைக் கண்டு திகைப்புற்ற ஹரன் சட்டென்று வீதியில் இறங்கினான். "வா, சாரதா! பார்த்துக் கொண்டே பேசாமல் போகிறாயே! உன்னைப் பார்த்துப் பல நாட்களாகி விட்டனவே; உள்ளே வா. உன்னிடம் நிறையப் பேச வேண்டும்" என்று அவர் கனிவும் குழைவும் நிறைந்த குரலில் கூறினார். சாரதா படமெடுத்தாடும் நாகமெனச் சீறினாள்.

"ஆமாம். எங்கள் அப்பாவுக்குப் பார்த்து மருந்து கொடுத்து விட்டீர்களே அழகாக. என்னைப் பார்க்க வேண்டியதுதான் பாக்கி. நீங்களும் ஒரு மனிதரா? தூங்க ஆசையா விரும்புபவர்கள் வேறு ஏதாவது தொழில் புரிவதுதானே? உங்களால் உதவியற்ற மக்கள் மடிவதைவிட நீங்கள் வைத்தியத் தொழிலுக்கே படிக்காமல் இருந்திருக்கலாமே?" கோபத்தில் உதடு துடிக்க, துக்கத்தில் கண்ணீர் பெருகி வழிய ஆவேசமாக இரைந்து கத்தினாள் சாரதா.

எதுவுமே விளங்கவில்லை ஹரனுக்கு. சாரதாவின் நடத்தை விசித்திரமாகவே பட்டது.

"ஏன், சாரதா! என்ன கோபம்? நான் என்ன தீங்கிழைத்தேன் உனக்கு?"

"ஆமாம்! சின்னக் குழந்தை, ஒன்றும் தெரியாது! பாவம், அன்று பிற்பகல் எங்கள் வீட்டிலிருந்து ஆள் வந்து அழைத்தபோது, 'இப்போது வர முடியாது. நான்கு மணிக்குத்தான் வருவேன்' என்று அவனைத் துரத்தி விட்டீர்களே. அதனால்தானே நான் இன்று தந்தையற்ற அனாதையாக உங்கள் எதிரில் அழும்படி நேரிட்டது? நீங்களானால் ஒன்றுமே தெரியாது போலக் கேட்கிறீர்கள்! வைத்தியர்களின் சௌகரியம் பார்த்துத்தான் உடம்பு கூட அதிகமாகுமா என்ன? அநியாயமாக என் தந்தையைக் கொன்று விட்டீர்களே?

இது நியாயமா? வைத்தியத் தொழிலுக்குப் படிப்பது பணந் திரட்டத்தானா? மக்களின் நோயைத் தீர்ப்பதற்கில்லையா?"

"அழாதே சாரதா! அன்று உன் வீட்டிலிருந்துதான் ஆள் வந்தான் என்பது எனக்குத் தெரியாது. நீ என்னிடம் இதுவரை உன் தந்தையைப் பற்றி எதுவுமே கூறியதில்லை. ஆகையால் என்னால் அறிந்து கொள்ள இயலாமற் போயிற்று. செய்த பிழைக்கு உன்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. நான் என்ன செய்யட்டும்? உன் தந்தை என்று தெரிந்திருந்தால் நான் வராமல் இருந்திருப்பேனா?"

"பேஷ், என் தந்தை என்று தெரிந்திருந்தால்வந்துசிகிச்சை செய்திருப்பீர்கள். மற்றப்படி வேறு யாராயிருந்தாலும் துடித்துச் சாக வேண்டியதுதான். அப்படித்தானே? வைத்தியம் செய்ய, வேலை, பொழுது, குலம், கோத்திரம், அழகு, அந்தஸ்து, பணம் எல்லாம் பார்க்க வேண்டும் என்பது எனக்கு இப்போது தான் தெரிந்தது. போதும் உங்கள் சகவாசம். நான் போகிறேன். மீண்டும் என்னைச் சந்திக்கவோ பேசவோ முற்படாதீர்கள்."

உதாசீனமாகச் சொற்களை உமிழ்ந்து விட்டு விர்ரென்று வெளியேறி விட்டாள் சாரதா. அவள் சென்ற திக்கையே வெறித்து நோக்கிய படி சிலையாய்ச் சமைந்து நின்றார் நரேன்.

தந்தையின் மரணத்துக்குப் பின் அவள் எத்தனைய துன்பங்களை அனுபவித்தாள்?

கல்லூரியில் சேர்ந்து படிப்பதற்காக விசாலத்தையும் அழைத்துக் கொண்டு சென்னை வந்து சேர்ந்து விட்டாள். இருப்பதை விற்று எடுத்துக் கொண்டு தாயும், மகளும் பட்டணம் வந்தனர். வைத்தியப் படிப்பைப் பூர்த்தி செய்ய அந்தப் பணம் போதுமா?

அப்பப்பா! படிப்பு முடிவதற்குள் தாயும் மகளும் பட்ட இன்னல்கள் கணக்கிலடங்கா. விசாலமும் அடிக்கடி சாரதாவின் பிடிவாதத்தைக் கண்டு குறைப்பட்டுக் கொள்வாள். எதையும் பொருட்படுத்தாமல் தன் லட்சியம் ஒன்றே குறியாக இருந்தாள் சாரதா. படிப்பும் முடிந்தது. பட்டண வாசமும் புளித்தது. சுற்றுப்புறச் சிறு நகரம் ஒன்றில் தன் தொழிலைத் துவக்கினாள் சாரதா.

தந்தையின் நினைவு வந்ததும் சாரதாவின் கண்கள் நீரால் நிரம்பி விட்டன.

மறுநாள் சாரதா அடிபட்ட சிறுவனின் வீட்டுக்குச் சென்று நோயாளியைக் கவனித்து ஆவன செய்து விட்டுத் திரும்பியவளிடம் பையனின் பாட்டனார் பேசக் கொடுத்தார்.

"குழந்தையின் தந்தை ஊரிலிருந்து வந்திருக்கிறார். நான் கொடுத்திருந்த தந்தியைப் பார்த்ததுமே புறப்பட்டு வந்து விட்டார் குழந்தையைப் பார்க்க. நான் எல்லாவற்றையும் சொன்னேன். நல்ல வேளை! அடிபட்டதும் வைத்தியம் செய்தது நல்லதாயிற்று. இல்லையானால் உயிருக்கே ஆபத்தாகி விட்டிருக்கும்" என்றார் மாப்பிள்ளை.

"நீங்கள் சமயத்துக்குத் தெய்வம்போல் வந்து எங்கள் குழந்தையைக் காப்பாற்றிக் கொடுத்துவிட்டீர்கள். இல்லையானால் என்ன ஆகியிருக்குமோ! அவன் அம்மா போனதிலிருந்து அவன்தான் எங்களுக்குச் சகலமுமாக இருக்கிறான். அவனையும் நாங்கள் இழக்க நேர்ந்திருந்தால்...."

"அடடா! உங்கள் பெண்ணின் மகனா இவன்? தாயற்றவனா? என்ன செய்யலாம்? நம்மால் என்ன இருக்கிறது? எல்லாம் அவன் விளையாட்டு. வருந்தாதீர்கள். இனி குழந்தைக்கு ஆபத்தொன்றுமில்லை. காயம் ஆறத்தான் சில நாட்களாகும். நான் என்னால் இயன்றவரை கவனிக்கிறேன். கவலைப்படாதீர்கள்" என்று தேற்று மொழிகள் கூறி விட்டு வீடு செல்ல எழுந்தாள் சாரதா.

"இருங்கள் போகலாம். அவசரம் ஏதும் இல்லையே உங்களுக்கு. ஏதாவது ஆகாரம் அருந்திவிட்டுப் போகலாமல்லவா?" என்று கேட்டார் பெரியவர்.

அதற்குள் அங்கு யாரோ வரும் காலடி ஓசைகேட்டது. வாசற்புறம் திரும்பிப்பார்த்த பெரியவர் குதூகலம் கலந்த குரலில் கூறினார்: "இதோ மாப்பிள்ளையே வந்து விட்டார்." நிமிர்ந்தாள் சாரதா. உள்ளே நுழைந்தவரைப் பார்த்ததும் அவளுக்கு உலகமே தலைகீழாகச் சுழன்றது. பாரம் தாங்காமல் நெஞ்சு வலித்தது. நிலைக் குத்திவிட்ட பார்வையுடன் நிலை தடுமாறி மரம் போல் நின்றாள். வந்தது வேறு யாருமில்லை, சாரதாவின் ஜன்ம வைரியான டாக்டர் நரேனேதான்.

கணநேரத்துக்குப் பின்பு நரேன் நிலைமையைச் சமாளித்துக் கொண்டவராய்ப் பேசத் துவங்கினார்: "நீங்கள்தானா என் மகனுக்கு உயிர்ப் பிச்சை அளித்த டாக்டர்? ரொம்ப

# என்னிடமுள்ள வெகு நேர்த்தியான கம்பளி ஆடைகளையும் லக்ஸ் பத்திரமாகப் பராமரிக்கிறது.

வடிவழகும் நுட்ப அமைப்பும் கொண்ட கைப்பின்னல் ஸ்வெட்டர்களும் ஜாக்கெட்டுகளும் உங்களுடைய உடைகளுள் மதிப்பு மிக்க அம்சமாகப் போற்றப் படுகிறது. எத்தனை முறைகள் சலவை செய்தாலும் பரவாயில்லை, தூய, மென்மையான லக்ஸ் துகள்கள் உபயோகித்தால் கம்பளி ஆடைகளின் மழமழப்பு, வடிவம், வர்ணம் எல்லாவற்றையும் நீங்கள் பத்திரமாகப் பாதுகாத்துக் கொள்வது நிச்சயம்.



**இலவசம்!**

"கம்பளி ஆடைகளை சலவை செய்யும் வழி" என்னும் பயனுள்ள துண்டுப் பிரசுரம், லக்ஸ் அட்டைப் பெட்டியின் மேல் மூடியி லிருந்து பாப்பா படம் போட்ட பாகத்தை எடுத்து, "த.பெ. 409, பம்பாய்" என்ற விலாசத்துக்கு அனுப்புங்கள்.




**அழகுமிக்க ஆடைகளுக்கு நெடுங்காலம் புதுமைத் தோற்றம் அளிப்பது லக்ஸ்**

LX. 136-50 TM



திருநெல்வேலி ஜில்லா, ஸ்ரீவைகுண்டம் தாலுகா, சாயல்புரம் கிராமம், சுப்பிரமணியபுரம் எனது அத்தான் உயர்திரு எஸ். வி. பி. கடலைமணி நாடார் அவர்கள் தனது இல்லத்தில் 68-வது வயதில் 27-1-57 ஞாயிறு காலை 9 மணிக்கு சிவபதம் அடைந்தனர். அவர்களுக்கு 4 குமாரரும், 1 குமாரத்தியும், பேரன் பேத்திகளும் உண்டு. சாயல்புரம் பஞ்சாயத்து போர்டு தலைவராக இருந்து மக்களுக்கு அநேக நன்மைகள் செய்தார். அன்னார் ஆத்மா சாந்தியடைய பிராத்திக்குமாறு அன்பர்களை வேண்டிக் கொள்ளுகிறேன்.

க. ரு. ரா. ஆதி ஆனந்தப்பன் நாடார்
நூல் & ஜவுளி வியாபாரம்

சந்தோஷம். நீங்கள் செய்த மகத்தான உதவிக்கு என்னுடைய நன்றி.''

மிக விநயத்துடன் கை கூப்பி வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டார். ஆயினும் அவர் குரலிலிருந்த கரகரப்பிலிருந்து அவர் உள்ளத்தின் பரபரப்பைச் சாரதாவால் நன்கு உணர முடிந்தது. பெரியவரோ எதையும் அறியவில்லை. இருவரையும் புதிதுபோல் அறிமுகம் செய்து வைத்தார். பின்பு சில நிமிஷங்கள் வரை ஏதோ சம்பாஷணை நடந்தது. பெரிய அம்மாள் எல்லாருக்கும் காப்பி பலகாரம் கொண்டு வந்து வைத்தாள். தங்கள் கலவரத்தை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமலே இருவரும் கடைசிவரை இருந்தனர். வெகு நேரத்துக்குப் பின்பு சஞ்சல உள்ளத்துடன் வீடு திரும்பினாள் சாரதா.

அன்று காலைக் கடன்களை முடித்துக் கொண்டு விச்ராந்தியாகப் பத்திரிகையைப் புரட்டிக்கொண்டிருந்த சாரதா காலடி ஓசை கேட்டு வாயிற்புறம் நோக்கினாள். ஆச்சரியமும், திகைப்பும் அவளைத் தடுமாற வைத்தன. கயல் விழிகளிலே கனல் பறந்தது ஒரு கணம். மறுகணமே சாந்தமான முகபாவத்துடன் உள்ளே வந்து பேசாது நின்ற டாக்டர் ஹரனை எழுந்து நின்று வரவேற்றாள் அமைதியாக.

'' வாருங்கள், உட்காருங்கள். ஏது இப்படி அபூர்வமாக வந்தீர்கள்? குழந்தை இரவு தூங்கினானா? உடம்பு தேவலையா? நீங்கள் தான் இருக்கிறீர்களே. இன்று நான் வர வேண்டிய அவசியமில்லையல்லவா ?''

'' சாரதா, இன்னமும் உன் கோபம் தணியவில்லையா ? அப்படிப்பட்ட மன்னிக்க முடியாத குற்றமா நான் செய்தது? போகட்டும், நான் வந்த விஷயமே வேறு. குழந்தை பிழைத்து விட்டான் உன் புண்ணியத்தில். உன் தந்தையைக் கொன்றதற்கு நீ வஞ்சம் தீர்த்துக் கொள்ளாமல், என் மகனைக் காப்பாற்றி விட்டாய். உனக்கு நான் எப்படி நன்றி கூறுவது? நான் என்ன செய்தால் உன் மனப் புண் ஆறும்?''

ஹரனின் மனம் கசிந்த பேச்சு சாரதாவின் உள்ளத்தின் மென்மையான பாகத்தைத் தொட்டது. ஆயினும் அவள் நிலை கலங்கி விடவில்லை. மெல்லப் புன்னகை புரிந்தவாறு பதிலளித்தாள்.

'' நான் ஏன் உங்கள் மகனைப் பழி தீர்த்துக் கொள்ள வேண்டும்? அத்தகைய கல் நெஞ்சக்காரி அல்ல நான். வைத்தியரின் கடமையைத்தான் நான் செய்தேன். அவன் யாராயிருந்தாலும்கூட இதையேதான்செய்வேன்.''

கசப்பேறிய சொற்கள் அவள் நாவிலிருந்து கடகட வெளிப்பட்டன. ஹரன் மனம் குன்றினார். ஆயினும் தைரியத்தை இழக்கவில்லை. சாரதாவையே உற்று நோக்கியவாறு பேசலானார்: '' சாரதா! உன்னை ஒன்று கேட்க வேண்டும். தவறாக நினைக்காதே. உனக்கு இன்னும் மணமாகவில்லையே !''

'' இல்லை'' என்பதாகத் தலையசைத்த சாரதாவை நோக்கி, '' ஏன் ?'' என்று கேட்டார் ஹரன் மிக ஆவலுடன்.

'' இதென்ன கேள்வி? எனக்கு விருப்பமில்லை, விவாகத்தில். அதனால் நடக்கவில்லை.''

இந்தப் பதில் டாக்டர் ஹரனுக்கு மிகவும் ஆறுதலாக இருந்தது போலும்!

'' ஆமாம்; எதற்குக் கேட்கிறீர்கள் ?''

'' சொல்கிறேன், சாரதா! என் முதல் மனைவி இறந்து இரண்டு வருடங்கள் ஆகின்றன. அந்த விவாகம் என் விருப்பமின்றியே தான் நடந்தது. ஏன் என்பது உனக்கே தெரியும். அன்றிலிருந்து நான் தனி வாழ்க்கை தான் நடத்துகிறேன். என்னை மணக்க உனக்குச் சம்மதமா? என்று கேட்க வேண்டும் என்பதே நேற்று உன்னைப் பார்த்ததிலிருந்து தோன்றியது. சட்டென்று எப்படிக் கேட்பது என்று திணறினேன். என் மனத்தில் நீ என்றும் இடம் பெற்றிருக்கிறாய். என்னால் நீ பல கஷ்டங்களுக்குள்ளாகிவிட்டாய்; அதற்குப் பிராயச்சித்தம் செய்யவே நான் விரும்புகிறேன். என் மனைவியாக என் மகனின் தாயாக இருக்க உன் சம்மதம் பெறவே நான் இங்கு வந்தேன்.''

சகலத்தையும் தூரத்திலிருந்து கவனித்துக் கொண்டிருந்த விசாலம் வியப்புக் கடலில் மூழ்கினாள். பொங்கிய மன எழுச்சியை அடக்கிய சாரதா வணங்கியவாறு, ''தயவு செய்து என்னை மன்னித்து விடுங்கள். எனக்கு விவாகம் செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் எப்போதோ போய்விட்டது. என்னால் தங்கள் மனைவி ஸ்தானத்தை ஏற்க முடியாமைக்கு வருந்துகிறேன். தயவுசெய்து தொந்தரவு செய்யாமல் விட்டுவிடுங்கள்.''

மிக விநயமாகப் பேசினாலும், அதில் உறுதி மேலோங்கி இருப்பதை உணர்ந்த ஹரன் திடுக்கிட்டுத்தான் போனார். 'ஒரு பெண்ணுக்கு இத்தனை துணிவா?' என்று பிரமிப்புற்றார். விசாலம் அயர்ந்து போனாள்.

''என்ன சாரதா இப்படிப் பேசுகிறாய்? இதுதான் உன் முடிவா? ஏன்? எதனால்?''

''எப்படி வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளுங்கள். ஒரு காலத்தில் ஒருவரை என் இதயக் கோவிலில் பிரதிஷ்டை செய்து பூஜித்தேன். ஆனால் அத்தெய்வமோ எனக்கு வரமளிக்கவில்லை. சாபமே இட்டது. ஆயினும் என்னால் அத்தெய்வத்தை வெறுத்து ஒதுக்க முடியவில்லை. ஆனாலும் என்னால் சம்சார பந்தத்தை ஏற்க இயலாது. என் மனம் சேவையிலேயே ஊன்றி விட்டது. என் தொழில் எனக்கு என்றும் சாந்தியை அளிக்கும். நான் யாருக்காகவும் மணவாழ்க்கையில் ஈடுபடத் தயாராயில்லை. என்று என் தந்தை காலமானாரோ, என்று என் இலட்சியக் காதலர் காதகனாகி விட்டாரோ அன்றே என் இன்ப வாழ்வு அஸ்தமித்து விட்டது. தயவுசெய்து தாங்கள் சென்று வாருங்கள். வணக்கம். எனக்காக நோயாளிகள் காத்திருப்பார்கள். செல்ல வேண்டும். நான் போய் வருகிறேன்.''

நீண்ட பேச்சுக்குப்பின் அவ்விடம் விட்டுச் சென்றாள் சாரதா. உறுதி நிறைந்த உள்ளம் படைத்த இலட்சியப் பெண்ணின் உருவம் மறையும்வரை அவளைப் பார்த்துக்கொண்டே நின்றார் ஹரன். பெண்ணின் மனத்தை அறிந்த விசாலம் பெருமையும், துயரமும் கலந்த பெருமூச்செறிந்தாள். புயல் ஓய்ந்த வான வெளியைப்போல் சொல்லொணாத அமைதி நிலவிற்று அவள் மனத்திலே.

# ரகுபதி ராகவ



[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

67

ஒவ்வொரு ஸ்திரீயும் தனக்கு ஒரு கூடப்பிறந்த சகோதரி அல்லது தாய் அல்லது மகள் என்கிற எண்ணம் கொண்டு விட்டால் அந்த எண்ணமே ஒருவனுடைய உள்ளத்தை மேலே தூக்கித் தரும். பற்றுகள் அற்றுப் போகச் செய்யும். கணவனும் மனைவியும் பிரம்மசரிய விரதத்தால் நஷ்டமடைய மாட்டார்கள். குடும்ப நிலையும் கூட முன்னை விட நல்ல நிலையடையும். அவர்களுக்கிடையிலுள்ள அன்பு காம விகாரத்தினின்று விடுபட்டுப் பரிசுத்தமடையும். அவர்களுடைய அன்பு இன்னும் பலம் பெறும். நிர்மலமான அன்பு வளர்ந்து ஒருவருக்கொருவர் முன்னை விட அதிகமாக நல்ல பணி செய்வார்கள். குடும்பத்தில் நடைபெறும் சிறு பூசல்களுக்குக் காரணமில்லாமற் போகும். அன்பானது சிறுமையடைந்து சுயநலமாக மாறி விட்டாலே தான் பூசல்கள் உண்டாகின்றன.

நான் இது வரையில் சொன்னதின் உண்மையைக் கண்டபின் பிரம்மசரிய விரதத்தினால் சரீரத்துக்கு உண்டாகும் நன்மையைப் பற்றி எடுத்துக் காட்ட வேண்டிய அவசியமுமிராது. நாம் பெற்றிருக்கும் உயிர்ச்சக்தியை வீணாக்கி நாசப்படுத்தி விடுவது எவ்வளவு அறிவீனம்? மூளைக்கும் உள்ளத்துக்கும் தேகத்துக்கும் வரம்பற்ற பலத்தைத் தரும்படியான ஒரு சக்தியைச் சிற்றின்பத்தில் வீணாக்கி இழந்து விடுகிறோம். இந்த துர்விநியோகமே பல நோய்களுக்குக் காரணம்.

பிரம்மசரியம் என்கிற விரதம் மற்ற விரதங்களைப் போலவே மனம், வாக்கு, காயம் மூன்றிலுமே காக்கப்பட வேண்டும். கீதையில் எடுத்துக் காட்டியிருப்பது போல் உடலில் மாத்திரம் பிரம்மசரியத்தைக் காத்து, மனத்தில் காமத்தை வளர்த்தால் அது பயனற்ற முயற்சியாகும். உடலுக்கு அது நல்லதுமாகாது. மனம் சென்ற வழியில் உடலும் இன்றோ நாளையோ கட்டாயம் செல்லும். அசுத்தமான எண்ணங்களில் மனத்தைச் செல்ல விடுவது குற்றமாகும். இவ்விடத்தில் ஒன்று சொல்ல வேண்டும். நாம் எவ்வளவு முயன்றாலும் மனமானது தவறிச் செல்லப் பார்க்கும். அதை நாம் தடுத்துக் கொண்டே வர வேண்டும். முடிவில் வெற்றியடைவோம். மனம் தீய வழியில் செல்லும் போது, அதை நாம் சத்துருவாகப் பாவித்து அதன் வழி நாமும் செல்லாமல் உள்ளத்தைத் திருத்திக் கொள்ள வேண்டும்.

அனுபவத்தில் பார்க்கிறோம்: உடலைத் தடுக்கலாம். உள்ளத்தை அடக்கியாள்வது மிகக் கஷ்டம். இடையறாத கவனம் செலுத்த வேண்டும். தேகத்தை அடக்கியாண்டு கூடவே உள்ளத்தையும் இழுத்துப் பிடிக்க வேண்டும். நம்மால் செய்யக் கூடியதையெல்லாம் செய்தோமானால் ஆண்டவனுடைய உதவி கிடைக்கும். இந்திரியங்களை அடக்கிவிட்டு மனத்தைத் தன்பாட்டுக்குச் செல்ல விட்டோமானால் பெரிய மோசத்துக்கு ஆளாவோம். பொய்யர்களாவோம். ஒவ்வொரு விநாடியும் ஜாக்கிரதையாக இருந்து ஒரு அசுத்தமான கருத்தானது வரும் பொழுதே அது நெருங்காமல் தடுத்தோமானால் உடலும் உள்ளமும் சேர்ந்தாற் போல் பிழையின்றிச் செல்லும்.

பிரம்மசரிய விரதம் மிகக் கடினம், ஏன், ஆகாத காரியமே என்று பலர் எண்ணுவார்கள். பிரம்மசரிய விரதம் இன்னதென்று சரியாகப் புரிந்து கொள்ளாமலிருப்பது இப்படி நினைப்பதற்கு ஒரு காரணம். பிரம்மசரியத்துக்கு விரிந்த பொருள் தராமல் குறுகிய பொருள் கொண்டு அதை நடத்தப் பார்க்கிறார்கள். ஆண்-பெண் சேர்க்கை மட்டும் கூடாது என்று வைத்துக் கொண்டு மற்ற விதங்களில் எதேச்சையாக நடந்தோமானால் விரதத்தைக் காக்க முடியாது. எல்லாப் புலன்களையும் அடக்கியாண்டாலொழிய வெற்றி பெற மாட்டோம். ஒரு புலனை மட்டும் ஆளப் பார்ப்பது வீண். காதால் கேட்கும் கதைகளும், பார்வையைச் செலுத்தும் காட்சிகளும், ருசி தேடி

உண்ணும் உணவு முதலிய அனைத்திலுமே அபாயம் உண்டு. இந்தத் துறைகளில் இன்பங் கண்டு அனுபவித்துக் கொண்டு பிரம்மசரியத்தைக் காக்கப் பார்ப்பது வீணாகும். நெருப்பில் கையை வைத்துக் கை சுடாமலிருக்க வேண்டும் என்று விரும்புவது போலாகும். எல்லாப் புலன்களையும் அடக்கியாண்டாலே தான் வெற்றி காண்போம். பல துறைகளிலும் ஆசைகளை அடக்கியாள வேண்டும். எல்லாப் புலன்களையும் அடக்கியாள வேண்டும். அப்பொழுதுதான் பிரம்மசரியத்தில் வெற்றி பெறுவோம். ' நாக்கை முதலில் அடக்கியாள வேண்டும். உண்ணும் உணவு அடிப்படையான விஷயம். நம்முடைய ஆசிரமத்தில் இதனாலே தான் ஆகாரக் கட்டுப்பாட்டை முக்கியமாக வைத்துக் கொண்டிருக்கிறோம்.

'சரியம்' என்றால் நடத்தை. மெய்ப்பொருளை, அதாவது பிரம்மத்தைத் தேடிச் செல்லும் பாதை அல்லது நடத்தை பிரம்மசரியம் என்பது. புலன்களை அடக்கியாள்வதே பிரம்மசரியம். எல்லாப் புலன்களை அடக்குவதும் அதில் அடங்கும். ஆண் பெண் சேர்க்கையைத் துறத்தல் மட்டுமல்ல.

*[எரவாடா சிறையிலிருந்து எழுதியது.]*




# நீலக் குயில்

காந்தன்!

சுவாரஸ்யமான கதைப் போக்கினால் சில படங்கள் வெற்றி பெறும்: கதை சுமாரா யிருந்தாலும் படப்பிடிப்பின் உயர்வினால் சில படங்கள் வெற்றி பெற்று விடும்; விறு விறுப்பை யூட்டும் நிகழ்ச்சிகளினால் சில படங்களுக்குப் பெயர் வந்துவிடும்; சினிமா வானில் பிரசித்தி பெற்றிருக்கும் நட்சத்திரங் களினால் இன்னும் சில படங்கள் சக்கைப் போடு போடும்; பாமர மக்களின் உள்ளங் கவரும் பலவித மெட்டுக்களில் அமைக் கப் பட்டிருக்கும் பாடல்களின் சக்தியினால் சில படங்களுக்கு வெற்றி கிட்டுவது உண்டு; திற மையான டைரக்ஷன் காரணமாகச் சில படங்கள்எல்லோருடைய பாராட்டுதல்களையும் பெற்று விடும்.

ஆனால் மேலே கூறியிருக்கும் எந்த அம்சத்தையும் கொள்ளாத ஒரு படம் வெற்றி பெறுவதென்றால் அது மிகவும் அதிசயமான விஷயம் அல்லவா? அதுவும் வெற்றி யென்றால் சாதாரண வெற்றியா? பாரதத்தின் ஜனாதிபதியின் பரிசைப் பெற்ற படம் என்றால் அதன் வெற்றியை எப்படிச் சாதாரண வெற்றியாகக் கூற முடியும்?

கதை, வசனம், பாடல், டைரக்ஷன் ஆகிய எந்த அம்சத்திலும் புதுமையை மேற்கொள்ளாத ஒரு படம். வெற்றி பெற்றிருப்பதற்குக் காரணம் இல்லாமலா போய்விடும்?

ஒரு நாள் நல்ல மழை கொட்டுகிறது. மழையில் சொட்டச் சொட்ட நனைந்து விட்ட பருவப் பெண் நீலி, உபாத்தியாயர் ஸ்ரீதரன் வீட்டில் ஒதுங்குகிறாள். அவளைக் கண்ட ஸ்ரீதரன் உள்ளே வந்து தங்கும்படி அழைக்கிறான். நாணத்துடன் வீட்டினுள்ளே புகுந்த அந்தப் பேதைப் பெண் நீலி, அவனுடைய வாலிப இதயத்தினுள்ளேயும் வெகு விரைவில் புகுந்து விடுகிறாள்!

அப்புறம் திரைக்கதையில் என்ன நடந்திருக்கும்? எல்லோருக்கும் தெரிந்ததுதான்.

பசித்தவன் கண்ணில் பட்டு விட்ட பழைய அமுது, பூனையின் பார்வையில் அகப்பட்ட எலி, புலியினிடம் சிக்கிய ஆடு, யானையினிடம் கிட்டிய கரும்பு, கனற் பொறியை நெருங்கி விட்ட பஞ்சு, வண்டு அணைந்த மலர்-இவைகளெல்லாம் என்ன கதியை அடையுமோ அதே கதியைத்தான் உலகம் அறியாத அவ்வபலைப் பெண் நீலியும் அடைந்தாள்.

அடாத மழையும், அமைதியான இல்லமும், இசைவான சூழ்நிலையும், அவளது அழகும் ஸ்ரீதரனைக் கிறங்கச் செய்தன. இயற்கையின் விகார வசத்தினால் ஸ்ரீதரன் தன் வசம் இழந்தான். மறுகணம் நீலி அவன் வசமானாள்.

வசந்தத்தில் நறுமணம் வீசும் மலரை யாரால் தடுக்க முடியும்? ஏழையென்றால் இயற்கை தன் வேலையை நிறுத்தி விடுமா?

அவளது அறியாமையால் நிகழ்ந்து விட்ட செயலின் சின்னம் நீலியைக் கவலைக்குள்ளாக்கியது. நீலியின் தாய்மைக்குத் தானே காரணம் என்னும் வாய்மையை ஒப்புக்கொள்ள ஸ்ரீதரன் துணியவில்லை; சமூகத்தின் கண்களில் நீலியை மாசு அடைந்தவளாகக் காட்டி விட்ட கொடுமையையும் அவன் சிறிதும் உணரவில்லை.

இந்தக் கதையில் காதல், வில்லனின் இடையூறு இடைஞ்சல்கள், கத்திச் சண்டைகள் முதலிய எதுவும் குறுக்கிட வில்லை.

மனச்சாட்சியைத் துணிந்து ஒருபுறம் ஒதுக்கி வைத்து விட்டு, நீலியையும் ஒதுக்கி விட்டு ஸ்ரீதரன் நளினியைக் கரம் பற்றுகிறான்.

ஸ்ரீதரனை விட்டு விட்ட சமூகம் நீலியையும் விட்டு விடவில்லை. பயங்கரமாகக் கொடுமைப் படுத்தி, ஊரே சிரிக்கும்படி செய்து, அவளை வீட்டை விட்டே விரட்டி விட்டது. பெற்ற தந்தையே அவளைச் சொல்லொணாக் கொடுமைக்குள்ளாக்கித் துரத்திவிட்டான்.

"உன்னை இந்நிலைக்கு ஆளாக்கியது யார் என்னும் உண்மையைச் சொல்லி விடு" என்று நீலியின் தந்தை அடிமேல் அடித்தும் நீலி ஸ்ரீதரன் பெயரை வெளியிடாமல் துடித்து, வீட்டை விட்டு வெளியேறுகிறாள்.

நெஞ்சைக் கலக்கும் இந்தக் கட்டம் படத்தில் மிகவும் உருக்கமாயிருக்கிறது.

ரயில்பாதையில் ஸ்ரீதரனும் அவன் நண்பன் தபால்காரச் சங்கரனும் நீலியின் உயிரற்ற சடலத்தையும், அவள் உயிரின் உயிரான சிசுவையும் காண்கின்றனர். ஊராரின் ஏச்சுக்களைச் சங்கரன் சிறிதும் பொருட்படுத்தாமல் சிசுவை வளர்க்க நிச்சயிக்கிறான். உண்மை விவரம் முழுவதையும் அறிந்த ஸ்ரீதரன் மௌனமாயிருந்து விடுகிறான்.

நளினி கண்ணீருக்கிடையே கணவனைக் கெஞ்சி, சங்கரனின் வளர்ப்பு மகன் மோகன், ஸ்ரீதரனின் மகன் என்னும் உண்மையை அறிகிறாள். "அவன் இனி என் மகன்! உடனே அவனை அழைத்து வாருங்கள்!" என்று கதறிக் கணவனை வெளியேற்றுகிறாள்.

ஸ்ரீதரன் நீலியிடம் கொண்டிருந்த அன்பின் பரிசாக அவனை 'நீலக்குயில்' என்று அழைக்கிறான். அதுவே படத்தின் பெயராகிவிட்டது.

ரயில் பாதை, ஆற்றோரத் தென்னந் தோப்பு, ஆற்றில் மிதந்து செல்லும் தோணிகள், கிராமச் சூழ்நிலையில் உள்ள ஒரு சாதாரண 'டீ'க் கடை ஆகியவைகளெல்லாம் இப் படத்தில் மிகமிக நன்றாகப் படமாக்கப் பட்டிருக்கின்றன. மற்றப்படி டைரக்டர், மேக்கப்' நிபுணர், காட்சி ஜோடனைக் கலைஞர், பின்னணிப் பாடகர்கள், மேற்பார்வையாளர் முதலியவர்களுக்கெல்லாம் இப்படத்தில் வேலை இல்லை!

நீலக் குயிலாக நடிக்கும் குமாரியின் பார்வை, தோற்றம், உடை, பேச்சு யாவும் முதல் தரம். அவர் நடிப்பதாகவே தோன்றவில்லை. உண்மை நிகழ்ச்சியில் அவரைப் பார்ப்பதாகவே தோன்றியது. அடுத்தபடியாக ஸ்ரீதரன் பாகத்தை ஏற்ற ஸத்யனைச் சொல்லலாம். பள்ளி உபாத்தியாயரின் எளிய தோற்றம், நடை, உடை, பாவனை யாவும் அவரிடம் பொருந்தியிருந்தன. நீலிக்கு இழைத்துவிட்ட கொடுமையை எண்ணி மனம் உளைந்தபோது, அவர் மற்ற சினிமா நடிகர்களைப் போல், வானைப் பார்த்து, சிகரெட்டுகளைச் சங்கிலித் தொடராகப் புகைக்காதது இப்படத்தில் ஒரு புதுமை! பாராட்ட வேண்டியதுதான்!

நளினியாக வந்த பிரேமா தம் பாத்திரத்தை உணர்ந்து நடித்தார்.

மலையாளப் படமான "நீலக் குயி"லின் தமிழாக்கம் ஏ. வி. எம். ஸ்டுடியோவில் செய்யப்பட்டிருக்கிறது. மேற்படி தமிழாக்கம் பல இடங்களில் ஒத்துழைக்கவில்லை. "நாக தேவதை" படத்தின் தமிழாக்கம் ஏ.வி.எம். ஸ்டுடியோவுக்கு நல்ல பெயரைத் தேடித் தந்தது. "நீலக்குயில்" ஏமாற்றி விட்டது.

சமூகத்தின் இரக்கமற்ற தன்மை, சாதித் திமிர், அபலைக்கு இழைக்கப்பட்ட தீங்கு எல்லாம் மிகப் பெரிய கொடுமைகள்தான். ஆனால் அவைகளை யெல்லாம் விட ஒரு படத்தின் அர்த்தமற்ற நீளம் மிக மிகக் கொடியது என்பது என் அபிப்பிராயம்! கத்திரிக்கோலைத் துணிந்து, தாராளமாக உபயோகப்படுத்தியிருந்தால் இந்தப் படம், பாரதத்தின் ஜனாதிபதியின் பரிசு மாத்திரம் அல்ல, சினிமா ரசிகர்களின் ஏகோபித்த பாராட்டு மொழிகளையும் பெற்றிருக்கும்.





## மறுக்க முடியாத சம உரிமை...

ஜாதி அல்லது தீண்டாமை என்னும் பெயரால் வர்த்தக ஸ்தாபனங்களில் வர்த்தகம் அல்லது வியாபார விஷயங்களில் எந்தவொரு பிரஜையிடமும் வேற்றுமை பாராட்டக்கூடாது.

மற்ற பொதுஜனங்களுக்குச் செய்யும் ஊழியத்தை அல்லது விற்கும் பொருளை மற்றொருவருக்கு அதே இடத்தில் அதே விலையில் அதே நிபந்தனையில் ஊழியம் செய்யவோ ஒரு பொருளை விற்கவோ யாரும் மறுக்கக் கூடாது.

*இந்திய அரசியல் சட்டம் தீண்டாமையை ஒழித்து எல்லோருக்கும் சம சீதியான சமூக, பிரஜா உரிமைகளை அளிக்கிறது.*

**தீண்டாமையை ஒழித்துக் கட்டுங்கள், சமத்துவத்தை நிலைநாட்டுங்கள்.**

DA—56/218




## 3. ஒரு திட்டம் வேண்டும்

விஞ்ஞானம், நாகரிகம், பண்பாடு, முன்னேற்றம், வாழ்க்கைத் தரத்தில் உயர்வு இவற்றின் பகட்டைக் கண்டு மோகித்து, இவற்றை முற்றும் விரும்பிஏற்று வாழும் இன்றைய மக்கள் கண்ட பலன் என்ன? இவர்களது ஆயுட்காலம் நமது முன்னோர்களின் ஆயுட்காலத்தை விட அதிகரித்துள்ளதா? சொல்லப்போனால் இன்றைய மக்களின் ஆயுட்காலம் காற்று, வெய்யில், மழை, பனிகளைத் தாங்கிக் கடும் உடல் உழைப்புகளுடன் வாழ்ந்த முந்தையோரின் ஆயுட்காலத்திலும் குறைந்துதானிருக்கிறது. இன்றைய மக்களிடையே தேகக் களைப்பையும், மனச் சஞ்சலத்தையும் சகிக்கும் வன்மை குறைந்திருப்பதைக் காண்கிறோம். தேகாப்பியாசங்கள் முதலியவற்றால் உடல் வளர்ச்சி பெற்றவருங்கூடத் தம் முன்னோருடைய சளைக்காத தேக வன்மையும் சலியாத மனத்திடமும் இல்லாதவராய்த்தான் காணப்படுகின்றனர். முற்போக்கான வாழ்க்கையை ஏற்றுள்ள இன்றைய மக்களுக்கு,—படித்தவருக்கும் பட்டதாரிகளுக்குங்கூடத்தான்—ஏராளமான தூக்கம், ஓய்வு, நல்ல ஆகாரம், கட்டு திட்டங்கள் அடங்கிய வாழ்க்கை சீரிய பழக்க வழக்கங்கள் ஆகியவை மிகவும் அவசியமாயிருக்கின்றன. இவர்களுடைய நரம்புகள் மிகவும் நலிந்து பலஹீன முற்றிருக்கின்றன. தொட்டால் சிணுங்கிகள்போல் இவர்களது சகிப்புத் தன்மை வரவரக் குறைந்து விட்டது. பட்டண வாசம், கும்பல் கும்பலாக வாழும் நெருக்கடியான வாழ்க்கை, இயந்திர சாலைகளிலும் காரியாலயங்களிலும் அடைந்து கிடத்தல் முதலியவற்றால் உண்டாகும் இன்னல்களைச் சகிக்கமாட்டாதவராகி, வாழ்க்கையில் ஏற்படும் தவிர்க்க முடியாத சிறிய மனக் கவலைகளையும் சகிக்க முடியாதவர்களாகி எண்ணற்ற இன்னல்களுக்கு இருப்பிடமாய்த் தவிக்கின்றனர். அற்ப காரணத்தாலும் கொடிய நோய்களுக்கு இலக்காகின்றனர். நகர வாழ்க்கை என்னும் நாகரிக வாழ்க்கை நரக வாழ்க்கையாகி விட்டது. சுகாதாரம், அணுமயம் முதலிய துறைகளில் விஞ்ஞானத்தில் முன்னேறியும்கூட எதிர்பார்க்குமளவு பலனை இன்றைய மக்கள் பெறவில்லை.

இவ்விதம் மெலிந்த மக்களின் சரீரத்தில் தாதுக்கள் நலிவுற்று க்ஷீணமடைவதால் புதிய புதிய புரியாத பல வியாதிகள் உண்டாகின்றன.

உடற்கூறு, உடல் அமைப்பு, உடற் செயல், என்னும் அனாடமி, பிஸியாலஜி என்பவை கண்ட வரையில்தானா மனிதன்? இவை உடலைப் பற்றி மட்டுமே ஓரளவு தெரிவிக்கின்றன. இவை காணாத, இவற்றால் காண முடியாத மனமும் உயிரும் சேர்ந்தால்தான் மனிதன் மனிதனாகிறான். ஒரு தாம்பிலுள்ள மூன்று பிரிகளைப்போல் சரீரம், மனம், உயிர் இம் மூன்றும் வெகு நுட்பமான முறையில் பின்னிப் பிணைக்கப் பட்ட பிண்டத்தைத்தான் நாம் மனிதன் என்கிறோம். தாம்பிலுள்ள ஒரு பிரி நலிவுற்றுப் பிரியத் தொடங்கி விடுமானால் எவ்விதம் பலம் குன்றிவிடுமோ, அவ்விதமே தேக தாதுக்கள் க்ஷீணமடைந்து நலிவுற்ற மனிதனின் நிலையும் ஆகிவிடுகிறது; மனமும் நலிவுற்றுத் தொட்டால் சிணுங்கியாகி விடுகிறது. அப்புறம் கேட்பானேன்? புதிய புதிய மானஸிக ரோகங்கள் ஏற்படத் தொடங்குகின்றன. மனநிலையின் தரக் குறைவு, நரம்புகளின் அழற்சி தளர்ச்சி, தாதுக்களின் நலிவு க்ஷீணம், இவை நாளுக்கு நாள் மக்களிடையே அதிகரித்து வருமானால் இன்னும் சில வருஷங்களில் நாடு எந்நிலையை யடையும் என்பதை நினைக்கவும் மனம் அஞ்சுகிறது. இவ்வளவுக்கும் காரணம் இன்றைய நமது வாழ்க்கையின் விசித்திரம்தான்.

மார்பு அடைப்பு, ஹிருதயத் துடிப்பு, ரத்த அமுக்கம், தூக்கமின்மை, அதைத் தொடர்ந்த ஜீரணக் கோளாறுகள்

நரம்புத் தளர்ச்சி, வைட்டமின்கள் பற்றாக்குறை, ரத்தச் சோகை — இவை யெல்லாம் சேர்ந்து மனிதனை என்ன பாடு படுத்துகின்றன. இன்றைய நாகரிக வாழ்வின் இன்றியமையாத அறிகுறிகள் என்னவென்றால் மேற்சொன்னவற்றுள் ஏதேனும் ஒரு நோய் மனிதனிடம் குடி கொண்டிருப்பதுதான். அல்லது தலை சுற்றல், மயக்கம், தலைநோவு, மூக்குக் கண்ணாடி இப்படி ஏதாவது இருக்கலாம். இதுவும் தவிர இளநரை, 30 வயதிற்குள் வழுக்கை, இவைபோன்றமூப்பின் இலக் கணங்களும் சம்பவிக்கலாம். இன்றைய நாகரிக உலகத்தில் இவை சகஜம்.

இவற்றுக்கு ஒரு முடிவு காண வேண் டியதுதான் நமது முதற்கடமை என் கிறார் முன் சொன்ன அலிக்ஸஸ் காரல் என்னும் பெரியவர்.

இது முற்றும் உண்மையல்லவா? இதற்கு என்ன செய்ய வேண்டும்? இது தானே நம்முன் நிற்கும் அடுத்த கேள்வி. ஆனால் நாம் இருக்கும் நிலை என்ன?

* * *

"நந்தவனத்தில் ஓர் ஆண்டி — அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி
கொண்டு வந்தான் ஒரு தோண்டி — அதைக்
கூத்தாடிக்கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி!
நாதந்தி நாதந்தி நாதா......

"அம்மணி! தரும லக்ஷ்மித்தாயே!

"அஞ்சு கல்லால் ஒரு கோட்டை — அந்த
ஆனந்தக் கோட்டைக்கு ஒன்பது வாயில்
கீட்டுக் குருவிகள் இரண்டு......"

"போங்கோடா, போங்கோ. காலை யில் எழுந்தால் இந்தப் பிச்சைக்காரர் தொல்லை......! சொல்லி முடியாது. இவர்கள் நச்சரிப்பைத் தொலைப்பார் யாருமில்லை. என்னமோ சட்டமாம், செங்கோலாம். என்னென்னமோ சொல் கிறார்கள் - செய்கிறார் கள். பலன்ஒன்றும் ஏற் பட்டதாகத் தெரிய வில்லை" என்று வெறுத் துக் கொண்டேன்.

பிச்சைக்காரர்கள் போய்விட்டனர். பக் கத்து வீட்டு வாசலி லும் இதே பாட்டு தான். எதிர்வீட்டு வாசலிலும் இதே பாட்டுதான். கேட் டுக் கேட்டு எனக்கு மனம் அதிலேயே லயித்துப் போயிற்று. என்னையு மறியாமலே அந்தப் பாட்டை மனத்துக்குள் முணுமுணுத்துக் கொண் டேன். என்ன ஆச்சரியம்! எவ் வளவு பெரிய உண்மை! எவ்வளவு எளிய சொற்களில், இனிய பாடல்க ளாக மிதந்து வந்திருக்கிறது!

".........
கூத்தாடிக் கூத்தாடிப்
போட்டுடைத்தாண்டி...."

முன் சொன்னது போல் இன்று நாம் செய்து வருவது இதுதானே? கட்டு திட்டமில்லாத வாழ்க்கை. அதன் விளைவாக இன்னல்கள் பல. சிறிய ஏற்றத் தாழ்வையும் சகிக்கத் திறமற்று நைந்து போனதால் 'தொட்டால் சிணுங்கி'யாக அடிக்கடி நோய்வாய்ப் படும் சரீரம். அளவற்ற அழற்சியினால் தளர்ந்து கட்டுக் குலைந்துபோன நரம் புகள். உணர்ச்சி வசப்பட்டு நிமிஷத் துக்கொரு விதமாக மாறிக்கொண்டு நிலையற்றதாகி அல்லல்படும் மனம். நன்மை தீமைகளைத் தெளிந்து கட்டு திட்டங்களுக்கு உட்பட்டிருக்கப் பயிற்சி பெறாததனால், வீண் பரபரப்பு, ஆசை, ஆவல், துள்ளல், துடிதுடிப்பு, எதிர் பார்த்தல், ஏக்கம், ஏமாற்றம், சந்தோ ஷம், ஸந்தாபம், அதிர்ச்சி என்று இப் படிப் பல வகைப்பட்ட அனுபவங்களின் தாக்குதல்களுக்கு இலக்காகிச் சிதைந்த மனம்; இந்நிலையில் தூக்கம் வருமா? வராது. உடல் அலுப்பினால் ஒருகால் சற்று நேரம் தூங்கினாலும்...? குழப்பம் நிறைந்த கனவுகள். அல்லது தூங்கி எழுந்த பிறகு ஓய்வு பெற்றதின் பலனா கக் கிடைக்க வேண்டிய மன நிம்மதி யும் சரீர பலமும் ஏற்படாமை. இதைத் தான் காண்கிறோம். உண்ட சோறு ஜீரணிப்பதில்லை. அழற்சியுற்றுச் சிதறித் தளர்ந்த நரம்புகள் நல்லநிலை பெறாமலே நின்று விடுகின்றன. சிதைந்த உள்ளம் சீர்படாமலே நின்று விடுகிறது. இவ்வித மாக ஓர் இரவு தூங்கி எழுந்தவன், தூங் கப் போனதற்கு முன்பு இருந்ததை விடக் களைப்பும் சலிப் பும் நிறைந்த தேக, மனோநிலையை அடை கிறான். அதிகரித்த மூப்பின் இலக் கணங் களைப் பெறுகிறான். இதையேதான் மேற் சொன்ன பாட்டும் படம் பிடித்துக்காட்டு கிறது. (தொடரும்)





# மகிழ்ச்சி உதயம்





## வே. ராஜம்

விளக்கு எரிந்து கொண்டிருந்தது. நேரமும் ஏறிக்கொண்டே போயிருக்க வேண்டும் என்பதற்குச் சான்றாக எதிர் வீட்டுச் சுவர்க் கடிகாரம் பன்னிரண்டு மணி அடித்து ஓய்ந்தது. ஹரிகேன் விளக்கும் மங்க ஆரம்பித்தது. காந்தி அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். விளக்கு மங்கும்போது எழுந்து எண்ணெய் விடும் காந்தி கண்ணெடுத்தும் அன்று பார்க்கவில்லை. முந்நூறு பக்கங்களுள்ள அந்தப் புத்தகத்தில் இன்னும் முப்பது பக்கங்கள்தான் இருக்கின்றன. ஒரு மூச்சில் முடித்துவிட்டால் காலையிலிருந்து, அதை மொழிபெயர்த்து விடலாம் என்ற எண்ணத்தில் நானே எழுந்து சென்றேன், மண்ணெண்ணெய் டின் இருக்குமிடம் நோக்கி.

காந்திக்கு என்மீது கோபம். எனக்கும் அவன்மீது கோபம்தான். இதை வெளியே சொல்ல எனக்குக் கூச்சமாகத்தான் இருந்தது. நம்பக்கூட மாட்டார்கள். இணை பிரியாத் தம்பதிகள் என்று அக்கம்பக்கத்தில் பெயர் வாங்கிவிட்ட நாங்கள் கோபித்துக் கொண்டு ஒருவருக்கொருவர் 'கடு கடு' என்று இருக்கிறோமென்றால் அதைக்கூட 'விளையாட்டு' என்றுதான் எண்ணுவார்கள்.

எனக்கே ஆச்சரியமாகத்தா னிருக்கிறது. எப்படி 'அவ்வளவு' கோபம் வந்து விட்டது என்று. பணமில்லாமல் கஷ்டப்படும் வேளைகளிலும், நான் சொன்னதை வேண்டுமென்றே அவன் கேட்காத வேளைகளிலும் வராத கோபம் எனக்கு அன்று எப்படி வந்ததென்றே புரியவில்லை.

காந்தியை மணப்பதற்கு முன்பே எனக்குப் பணத்தின் அருமை புரிந்து விட்டது. சிறு வயதிலேயே தந்தையையும், தாயையும்

இருந்த நான் எப்படி எப்படியெல்லாமோ கஷ்டப்பட்டுப் படிக்க நேர்ந்தது. மாமா எவ்வளவோ உதவி யிருக்கிறார். பணக் கஷ்டம் மிருந்தவர் மற்றவர்களுக்கு உதவுவதில்தான் சிறப்பு இருக்கிறது. படித்துத் தேறி விட்டால் வேலை 'காத்து'க் கிடப்பது போல் படித்து முடித்தேன். பாஸ் செய்வது வகுப்பை மட்டுமன்று வாழ்க்கையையும் என்பது அப்பொழுதுதான் புரிந்தது.

செருப்பு இருந்தால் தேய்ந்திருக்கும்; ஆண்டவன் அளித்த பாதத்தின் தோல் தேயவில்லை. அத்தனை இடம் ஏறி இறங்கியும் வேலை கிடைக்கவில்லை. கடைசியில் ஒரு நண்பர் ஆபத்சகாயராகத் தோன்றினார். தினம் இரண்டு ரூபாய் 'படி' அளக்கும் கம்பெனி ஒன்று என் சேவையை ஏற்றுக் கொண்டது.

'தனியொருவனு யிருக்கும்போது துணை தேவை யிருக்கிறது. துணை கிடைத்தால் தனிமை தேவையாயிருக்கிறது' என்று என் நண்பன் கூறுவான். எனக்கு இரண்டு விதச் சங்கடங்களுமில்லை. எனக்கு வேலை கிடைத்ததை மாமா அறிந்து எனக்குப் பரிசு கொடுக்க எண்ணினார். அவரது மகளை நான் ஏற்றுக் கொண்டேன். காதல் திருமணமில்லை. ஆனால் மணந்த பிறகு காதல் பிறந்தது; நாளொரு மேனியும் பொழுதொரு விதமுமாக வளர்ந்தது. நான் சொல்கிறபடி அவள் செய்ய மாட்டாள். ஆனால் கலீரெனச் சிரிப்பாள். அவள் இடுகிற கட்டளைப்படி நான் செய்வேன்; ஆனால் முகத்தை அஷ்ட கோணலாக மாற்றிக் கொண்டு 'அழகு' காட்டுவேன். இப்படியாக எங்கள் அன்யோன்யம் அழுத்தமாகியது.

அறுபது ரூபாய் சம்பளத்தில் அவள், என் தம்பி, நான் மூவரும் சுவர்க்க இன்பத்தையே அனுபவித்தோம். சம்பளம் போதவில்லை என்ற குறையே எங்களுக்குக் கிடையாது. எப்படி என்று என்னைக் கேட்காதீர்கள். அது பரம ரகசியம்! காந்தியும் என் தம்பியை 'அத்தான் குட்டி, அத்தான் குட்டி' என்று செல்லமாக அழைத்துப் புகழ்ந்து செல்லம் கொடுத்துச் சீராட்டி, தலைமேல் தூக்கி வைத்துக் கூத்தாடி நானே பொறுமை கொள்ளும் அளவுக்கு அன்பு பாராட்டுவாள். சண்டை போடாத மனைவி, கோபப்படாத கணவன், மைத்துனனை எரிந்து விடாத மன்னி, பணம் போதவில்லை என்று கண்ணைக் கசக்காத இல்லத்தரசி, இவ்வளவும் சேர்ந்த எங்களைச் சினிமாப்படம் ஒன்றுதான் பிடிக்கவில்லை, படாதிபதிகள்!

தீபாவளி வந்து சேர்ந்தது! பொருளாதார நிர்ப்பந்தம் அந்த வடிவில் வந்தது என்று நான் 'தீபாவளியை' இப்படி இழுக்கவில்லை! தீபாவளிக்கு முதல் நாள் இரவு வரையில் இன்ப காண்டம் நடந்தது. மறுநாள் துன்ப காண்டம் தொடங்கியது.

தீபாவளி பட்ஜெட் தயாரிக்கப்பட்டது: "எனக்கு நூல் புடவை போதும். அத்தான் குட்டிக்கு ஒரு லினன் ட்ரௌசர், புஷ் ஷர்ட், உங்களுக்கு—உங்களுக்குப் பிடித்தவை" என்று காந்தி கட்டளையிட்டு விட்டாள். எங்கள் செலவில் நடக்கும் முதல் தீபாவளியை அவ்வளவு எளிமையாகக் கொண்டாட என் இல்லத்தரசி முடிவு செய்தது எனக்கு ஆச்சரியத்தை அளிக்கவில்லை. வேதனையை அளித்தது. 'க்ரேப் ஆர்ட் ஸில்க், நூல் புடவையை விட விலை குறைவு. ஸில்க் புடவையாவது வாங்கித்தர முடியாத நான் எதில் சேர்ந்தவன்! ஹூம்; எப்படியாவது முயல்கிறேன், பார்' என்று காந்தியிடம் சபதம் செய்து விட்டுக் கிளம்பினேன். கும்பிடப் போன கடைக்காரன் குறுக்கே வந்தான். "வணக்கம், பட்டாபி, ஸார்!" என்ற குரல் வாசற்படியிலேயே கேட்கவும் நான் கண்ணைத் துடைத்துக் கொண்டேன். கண்ணீரை அல்ல; பிரமையா, உண்மையா எனக் காண. வாசற்படியில் கும்பிடு போட்டு நின்ற பிள்ளையார் ஸ்டோர்ஸ் குஞ்சுசாமி நாடார் காரியமில்லாமல் வருவாரா? அவர் கேட்க வந்தது சிறியதுதான். அதற்கு நான் போட்ட பதில் கேள்வியோ மகா மகா பெரிது!

"அதற்கென்ன நாடார் ஸார், இன்றைக்கே முடித்து விடுகிறேன். ஒரு உதவி செய்ய வேண்டும்" என்று கூறி அவர் முகத்தைப் பார்த்தேன். கைகாட்டி இறங்கிய ஸ்டேஷன் ஜனங்கள் முகம் போல் மலர்ந்தது. அவரை நான் கேட்பது யாருக்கும் தெரியக் கூடாதல்லவா? உதடுகள் அசைந்தன. அதைச் செவிமடுத்த அவர் உடனே தலையை ஆட்டினார். அவ்வளவுதான்; வெற்றி! வெற்றி!

"காந்தி!" என்று கூவிக் கொண்டே சமையல் அறையில் பாய்ந்தேன். "மாலையில் தயாராக இரு; பிள்ளையார் ஸ்டோர்ஸுக்குப் போகிறோம்" என்றேன்.

"நூல் புடவைக்குப் பிள்ளையார் ஸ்டோர்ஸ் எதற்கு?" என்று கேட்ட காந்திக்குப் பதில் கூறாமல் தலையை ஆட்டி விட்டு ஆபீஸுக்குச் சென்றேன். உண்மையிலேயே நான் எதிர்பார்த்ததை விடக் காந்தி திகைத்துவிட்டாள். நூல் புடவை கேட்ட நூலிடையாளுக்கு க்ரேப் ஸில்க்! அவள் விரும்பிய சேலைத் தலைப்பு, பார்டர் இதயம் மலரும் 'மோஸ்தர்'. உள்ளத்தை உவகையிலாழ்த்தும் உடல். பாதரச விளக்கின் ஒளியில் பிரகாசிக்கும் அந்த நிலாவண்ணச் சேலை காந்திக்கு ரொம்ப நன்றாகத்தான் இருந்தது.

'இருந்தது' என்ற இந்தச் சொல்லைப் போடும்போதே நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்கள், ஏதோ 'விபரீதம்' வருகிறது என்று.

நான் வெளியே சென்றபோது அது நிகழ்ந்தது. காந்தி திடீரென்று "எல்லாரும் வாங்களேன் வாங்களேன்" என்று கூவினாளாம். கொடியில் உலர்த்தியிருந்த அந்தப் புதுப் புடவை எரிந்து கொண்டிருந்ததாம். அத்தான்குட்டி பயந்து நடுநடுங்கிக் 'கூ கூ' என்று அழுது கொண்டிருந்தான்.

நான் வீடு திரும்பி வந்தபோது நடுநிசி. வீட்டில் அமைதி குடி கொண்டிருந்தது. காந்தி ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தாள். அத்தான் குட்டியைக் காணோம். குடித்தனக்கார நண்பர் கூறியதிலிருந்து நடந்த விஷயத்தைப் புரிந்து கொண்டேன். அத்தான் குட்டி வீசி எறிந்த சிறு மத்தாப்பு அந்தத் திருவிளையாடலைச் செய்து விட்டது. காந்தியைப் பலப் பல கூறிச் சமாதானப்

பறித்த முயன்றேன். முடியவில்லை. உடனே வேறு புடவை வாங்கித் தருவதாக வாக்களித்தேன். பலனில்லை.

அன்றிலிருந்து காந்தி அத்தான்குட்டியை அலட்சியப்படுத்துகிறாள் என்பதைக் கொஞ்சம் கொஞ்சமாகப் புரிந்துகொண்டேன்.

✱

அன்று இரவு. அத்தான்குட்டி மீது காந்திக்கு இருந்த கோபத்தை மாற்ற முயன்றேன். ஆனால் பேச்சு முற்றி விவாதமாகி இருதரப்பிலும் கோபம் பொங்கி வழிந்தது. தூங்குவது போல் பாவனை செய்த அத்தான் குட்டி எங்கள் சண்டையைக் கேட்டிருக்க வேண்டும். விம்மல் ஒலி அவனிடமிருந்து மட்டும் கேட்கவில்லை, காந்தியிடமிருந்தும் கேட்டது. அவள் படுத்து உறங்கி விட்டாள். உறக்கம் வரவில்லை. எத்தனை சந்துஷ்டியுடனிருந்த வீட்டில் எப்படியெல்லாம் வேதனை வந்து சேர்ந்து விட்டது என்பதை எண்ணும் போது எனக்கு வருத்தமாக இருந்தது. கடிந்து ஒரு வார்த்தைகூட நான் இதுவரை காந்தியைக் கூறியது கிடையாது. ஆனால் இன்று எப்படியெல்லாம் கோபத்தில் கூறி விட்டேன்! சரி, அவளை இனிமேல் எப்படித் திருப்தி செய்வது? திடீரென்று அவள் அறியாமல் மற்றொரு புடவை வாங்கிக் கொடுத்துவிட்டால்....!

புடவை! முன்பு வாங்கிய புடவைக்கு மாதம் பிறந்தால் முப்பது ரூபாய் கொடுக்க வேண்டும்! எரிந்த புடவை நஷ்டம்; கடைக்குக் கொடுக்க வேண்டிய முப்பது ரூபாய். மற்றொரு புடவை. மூன்று செலவுகள்! பரவாயில்லை. நாளையிலிருந்து ஒரு மணி நேரம் ஆபீசில் அதிக நேரம் வேலை செய்ய வேண்டியது. முப்பது ரூபாய் கிடைக்கும். அதற்குப் புடவை வாங்கி விட்டால் எல்லாம் சரியாகி விடும். இப்படி எண்ணியவாறு உறங்கி விட்டேன்.

காலையில் நான் காரியாலயத்துக்குப் புறப்படும் போது எதேச்சையாக என் தம்பியைத் தொட்டுப் பார்த்தேன். உடம்பு அனலாய்க் கொதித்தது. ''சங்கர்! இன்றைக்குப் பள்ளிக்கூடம் போக வேண்டாம்'' என்று கூறி விட்டுக் காரியாலயம் சென்று விட்டேன்.

காரியாலயத்துக்குச் சென்ற சற்றுநேரத்துக்கெல்லாம் டெலிபோன் மணி கணகண என்று ஒலித்தது. போனைக் காதருகே வைத்து. இரு நிமிடங்கள் கழிந்திருக்கும். அந்தக் கருவி சொல்லிய சேதி என்னைத் தூக்கி வாரிப் போட்டு விட்டது.

சங்கர் விபத்தில் சிக்கிவிட்டான்.

ஆ! சங்கர் எங்கே போனான்! எப்படிச் சிக்கினான்! ஓடினேன். ஓடினேன் விரைந்து ஓடினேன். பாவம் நர்ஸிங் ஹோமில் கட்டிலில் சங்கர் மண்டையில் பலத்த கட்டுக்களுடன் படுத்திருந்தான்.

கட்டிலின் அருகே சோகமே வடிவெடுத்தவாறு நின்று கொண்டிருந்த காந்தி நடந்ததை முழுவதையும் கூறினாள். பள்ளிக்கூடம் போவதாகக் கிளம்பிய சங்கரைப் போகாதே என்று கூடக் காந்தி கூற வில்லையாம். நோய்வாதனையாலும், உள்ள வேதனையாலும் தள்ளாடிய வண்ணம் சென்ற சங்கர் எதிரே கனவேகமாக வந்த குப்பை லாரியில் மோதுண்டு வீழ்ந்து விட்டான். வழிப்போக்கர்கள் உடனே அவனை இந்த நர்ஸிங் ஹோமில் சேர்த்து விட்டுப் பிறகே காந்தியிடம் செய்தி கூறியிருக்கிறார்கள். ஆயிரம் தெய்வங்களுக்கு வேண்டிக் கொண்டு கண்ணீர் விட்டவாறு நிற்கும் காந்திக்கு அத்தான்குட்டி சங்கர்மீது உண்மையில் அன்பு இல்லாமலா போகும்!

★

நெஞ்சைத் துக்கம் அடைக்கக் கூறினாள் காந்தி: ''என் அத்தான்குட்டி சங்கர் பிழைத்தாலே எனக்குப் போதும். என்னவோ பாழும் மனம், எரிந்துபோன புடவையை எண்ணி அவன்மேல் ஆத்திரம் கொள்ளச் செய்தது! அவன் பிழைத்தாலே பெரிய பட்டுப்புடவை உடுத்தியதுபோலிருக்கும்.''

நான் சொன்னேன்: ''இன்றுதான் நான் முடிவு செய்தேன், அதிகப்படி வேலை செய்து எப்படியாவது புடவை வாங்கி விடுவது என்று. அதற்கு முடியாது போய்விட்டதே.''

காந்தி கூறினாள்: ''புடவை போனால் ஒரு புடவை வாங்க முடிகிறது. குழந்தை போனால் மறு குழந்தை வாங்க முடியுமா?''

காந்தியின் உள்ளம் எனக்குப் புரிந்தது. அவள் உள்ளத்தின் தாய்மை புரியாமல் அவளை அன்று கோபித்துக் கொண்டு விட்டோமே என்று வருந்தினேன். எப்படியும் அந்த வீட்டில் மீண்டும் சந்துஷ்டியை நிலவச் செய்ய எண்ணினேன்.

ஒரு மாசம் ஒரு நாள் போல் ஓடி மறைந்தது. ஆபீசில் அதிகப்படி வேலை செய்ததற்கு வந்த பணம் முப்பத்தாறு ரூபாய் கிடைத்தது. அன்றுதான் ஆஸ்பத்திரியிலிருந்து சங்கரும் வீடு வரும் நாள். பணத்துடன் வீட்டுக்குப் போகும் முன்பு புடவைக் கடையில் இறங்கிப் புடவை வாங்கிவிடலாம் என எண்ணினேன். வீடு திரும்புவதற்கு நேரமாகி விடவே நேரே வீடு நோக்கிச் சென்றேன்.

சங்கர் வீட்டில் உட்கார்ந்திருந்தான். அவன் பூரண குணம் அடைந்து விட்டான். இந்தச் சமயம் புடவை வாங்கி வந்திருந்தால்...என எண்ணினேன். காந்தி நான் வந்ததும் வராததுமாக ஆஸ்பத்திரி 'பில்'லை நீட்டினாள். சரியாக முப்பத்தாறு ரூபாய். ''குடித்தனக்கார மாமாவிடம் வாங்கிக் கட்டித்தான் சங்கரை வீட்டுக்கு அழைத்து வந்தேன். அவர் பால்காரனுக்கு வைத்திருந்த பணத்தைக் கொடுத்தார். இல்லாவிட்டால் அவனை இன்று அழைத்து வந்திருக்க முடியாது'' என்றாள் காந்தி.

மறு பேச்சுப் பேசாமல் பையிலிருந்து ரூபாயை எடுத்துக் கொடுத்து விட்டேன்.

கூடத்தில் அமர்ந்திருந்த சங்கரின் சோர்ந்த முகத்தையும், அவனிடம் பரிவுடன் பேசிக் கொண்டிருந்த காந்தியின் முகத்தையும் மாறி மாறி நோக்கினேன். ஆஸ்பத்திரியிலிருந்து உயிர் பிழைத்து வந்த சங்கரும் என் அன்புக்குரிய காந்தியும் என் உள்ளத்துக்கு ஒரு சாந்தியை அளித்தனர். சமீபத்தில் எங்கள் வீட்டில் மறைந்துபோன மகிழ்ச்சி மீண்டும் உதயமாயிற்று.

Printed and Published by T Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

# உங்கள் கேசத்தை அதிக கருமையுடனும் பகட்டுடனும் வைக்க குளிர்ச்சியான வெண்ணிற

## ப்ரில்க்ரீம் உபயோகியுங்கள்



The Perfect Hairdressing

BRYLCREEM

MADE IN INDIA

* ப்ரில்க்ரீமின் சுத்தமான க்ரீமாக்கப்பட்ட எண்ணெய்கள் உங்கள் கேசத்தின் இயற்கை கருமை நிறத்தை சோபிக்கச் செய்கின்றன. சுத்தமான வெண்ணிற ப்ரில்க்ரீமை உங்கள் தலையில் தினம்தோறும் அழுத்தித் தேயுங்கள். பொடுகுகள் ஏற்படுவதை இது தடுத்து உங்கள் கேசத்தை சுத்தமாயும் ஆரோக்கியத்துடனும் வைக்கிறது.

* எந்தளவு ப்ரில்க்ரீம் நீடித்த உபயோகத்திற்கு வருகிறது! இன்றே ஒரு ப்ரில்க்ரீம் ஜாடியை வாங்கி எவ்வளவு காலம் அது நீடித்த உபயோகத்திற்கு வருகிறதென்று பாருங்கள்.

வாழ்க்கையில் வெற்றிபெற்றவர்கள்

# ப்ரில்க்ரீம் BRYLCREEM

உபயோகிக்கிறார்கள்

REGISTERED No. M. 4397
Registered as a Newspaper in Ceylon